சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

# சிவஞான பூஜா மலர்

துன்மதி ஆண்டு (1981)



பிரசுரம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

மேலமாம்பலம், சென்னை-600 033.

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவ



ஸ்ரீகாயத்ரிதேவ்யை நம:

# ஸ்ரீ காயத்ரி அருள் சித்தர் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளை தரிசிக்கும் இடங்கள்

1. 34, வெங்கட மேஸ்திரி தெரு, மண்ணடி, சென்னை-1. தொலைபேசி-2 9 4 9 5
2. சேலம் ஸ்ரீ வேங்கடேஸ்வர பவனம், 15, மேட்டுத் தெரு, சேலம், தொலைபேசி-3 2 1 5
3. 2, மெயின் ரோடு, தில்லைநகர், சேலம்,
4. சேரன் பாலஸ், கோயம்புத்தூர்.
5. 48, கல்லத்தெரு, திருச்சி
6. 1, சப்பாணித் தெரு, மதுரை.
7. 212-7, 3-வது பிளாக், இராஜாஜி நகர், பாஷ்யம் சர்க்கிள் அருகில், பெங்களூர்-10.
8. இறைபணி மன்றம், தாம்பரம் (நவீன் ஸ்டுடியோ)
9. ஸ்ரீ ல. கிருஷ்ணமூர்த்தி செட்டியார், No. 2, பாலாஜி ரோட், வேலூர்.
10. 19/496-B, சாலப்புரம். காலிகட்.
11. L. I G. 665, சிவசக்தி, பனம்பள்ளிநகர், எர்ணாகுளம், கொச்சி.

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# சிவஞான பூஜா மலர்

துன்மதி ஆண்டு (1981)

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே.

பதிப்பாசிரியர் :


சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம்,
சிவபுராணச் சக்கரவர்த்தி, சிவபுராணக் காவலர்,

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா

(சங்கரனடிமை)





பிரசுரம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600033.

விலை ரூ. 5-00.] 26-10-1981 [தபாலில் ரூ 5-50

உ

# விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

— திருஞானசம்பந்தர்





## சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி



திருஞான சம்பந்தர்    திருநாவுக் கரசர்    சுந்தர மூர்த்திகள்    மாணிக்க வாசகர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறை நூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.



# பதிப்பாசிரியர் பணிவுரை

ஞான நூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல் நன்று
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை.

சிவஞான பூஜா மலர் என்ற இந்தப் புத்தகமலர் வெளியிடுவதன் நோக்கங்களையும் இதற்கு உதவி செய்த கொடையாளர்களின் பெயர்களையும் வேறு இடத்தில் பிரசுரித்துள்ளோம். இந்த மலர் வெளியிடுவதற்கு மூலகாரணமாக இருந்தது அம்மையப்பனின் திருவருளே ஆகும். அத்திருவருள் இராயபுரம் ஸ்ரீ அங்காள பரமேச்வரி சந்நிதியில் அர்ச்சகர் சிவஸ்ரீ V. S. வாகீச்வர குருக்கள் அவர்கள் மூலம் வெளிப்பட்டு இந்த மலர் நிறைவேறுகிறது.

நமது வேண்டுகோளை ஏற்று குருமஹாசந்நிதானங்கள் நமக்கு ஆசியுரை அளித்தனர். பேரறிஞர்கள் கட்டுரை அளித்தனர். பல மலர்களில் சென்று தேனீக்கள் தேன் எடுப்பது போல, பல நூல்களில் உள்ள சிவபரத்துவம் என்ற தேனை அறிஞர் பெருமக்கள் நமக்கு எடுத்துத் தந்திருக்கின்றனர். அவற்றைப் பிரசுரிப்பதில் மிகுந்த மகிழ்ச்சியும், பெருமையும் அடைகின்றோம்.

சைவப் பெருமக்கள் இந்த நூலுக்கு அளிக்கும் ஆதரவைப் பொறுத்து இந்த மலர் வெளியீடு ஆண்டுதோறும் வெளியிடுவது பற்றி முடிவு செய்வோம்.

ஆசியுரையளித்த குருமஹாசந்நிதானங்கட்கு வணக்கத்தையும், கட்டுரைகளை அன்பளிப்பாக வழங்கிய அறிஞர் பெருமக்களுக்கும், விளம்பரங்கள் அளித்து ஆதரவளித்த நிறுவனங்கட்கும், நன்கொடைகளை மிகத்தாராளமாக அளித்து இந்த மலரை வெற்றியுடன் வெளியிட உதவிய சைவப்பெருமக்களுக்கும் எமது மனப்பூர்வமான நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவம்



# ஸமர்ப்பணம்

சிவபெருமானது பெருமைகளைப் பலவாருகப் பாடும் 100 சுலோகங்கள் அடங்கியது ஆதிசங்கர பகவத்பாதாசாரியாள் அருளிய **சிவானந்தலஹரீ** என்ற அரிய நூலாகும். இந்த நூலினைப் பயின்ற பின்னரே அடியேனுக்குச் சிவபக்தியும் சிவனடியார் பக்தியும் மேம்பட்டுப் பெரிய புராணம், ஸ்காந்த புராணம், திருவிளையாடற் புராணம் ஆகிய முப்பெரும் சைவபுராணங்களைப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தேன். திருமுறைகளுக்கு உரை காணும் முயற்சியிலும் ஈடுபட்டேன். எனவே சிவானந்தலஹரியின் மூலம் அடியேனைச் செந்நெறி செலுத்தியருளிய குலகுரு, ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாசாரியர்களுடைய திருவடித் தாமரைகளில் இந்த புத்தகமலரை ஸமர்ப்பணம் செய்கின்றேன்.

ஆங்கிரஸ சு. வேங்கடேச சர்மா

# பொருளடக்கம்

---

## ஒரு சொற் கேளீர் !

சிவஞான பூஜா மலர் உங்களைத் தேடி வருகின்றது. இதன் மூலம் கிடைக்கும் தொகை மூவர் தமிழ் மாலைக்கும், ஆசிரியரது சிவபுராண ஞானபூஜைக்கும் பயன்படுத்தப் படும். எனவே இதனைப் பெறும் பெரியோர்கள் இதற்கெனத் தனியாக நன்கொடை இதுவரை அனுப்பாமலிருந்தால் இம்மலரின் விலையைத் தபால் செலவு சேர்த்து அனுப்ப வேண்டுகிறோம். விரும்பினால் விலைக்கும் மேல் நன்கொடை சேர்த்து அனுப்பலாம். நன்கொடைத் தொகைகள் மட்டும் அடுத்த மலரில் பெயர்களுடன் பிரசுரிக்கப்படும்.

—பதிப்பாசிரியர்.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள். (68-வது பீடாதிபதி)



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்.

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம :

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்ய பரம்பரை

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
# ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
# ஸ்ரீ மடம் ஸம்ஸ்தானம்

காஞ்சீபுரம் - 631 502.

## ஸ்ரீமுகம்

யாத்ராஸ்தானம்: குருவாயூர் தேதி: 6.8.1981

ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாள், எங்கும் நிறைந்துள்ள பரமாத்மாவை அறிந்து கொள்வதற்கு சாதகமாக ஷண்மத ஸ்தாபனம் செய்து விக்ரஹ ரூபமான உருவவழிபாட்டை அனுக்ரஹித்துள்ளார்கள். ஸ்ரீ ஆதிசங்கரர், கணபதி முதல் சிவபெருமான் வரை எல்லா மூர்த்திகள் மீதும், ஸ்தோத்ரங்களைப் பாடி இருக்கிறார். முக்யமாக ஸ்ரீ பரம சிவன் பேரில் சிவானந்தலஹரி, த்வாதசலிங்க ஸ்தோத் திரம், சிவ பஞ்சாட்சர ஸ்தோத்ரம் போன்ற அனேக சிவ ஸ்தோத்திரங்கள் இயற்றி இருக்கிறார். 18 புராணங் களிலும், சிவனைப் பற்றி விசேஷமாக அனேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ பரமசிவனுக்கென தனி யாகப் புராணங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. சிவ பூஜை செய்யவேண்டிய முறைகளைப் பற்றி 'ஸ்மிருதிகள்' விசேஷமாகக் கூறுகின்றன. வேதங்களிலும் ஸ்ரீருத்ரம் போன்றவைகளில் சிவனைப் பற்றி நிறைய சொல்லப் பட்டிருக்கின்றன. ஸம்ஸ்க்ருத காவ்யங்களிலும், தமிழில் தேவாரம், திருவாசகம் போன்ற மகான்களின் பாடல்களும்

நிறைய இருக்கின்றன. சிவன் என்பவர் மங்களங்களை அளிப்பவர். அக்ஞானத்தை அழிப்பவர். இந்த சிவ வழி பாட்டு முறை உலகம் தோன்றிய காலம் முதல் அனாதியாய் வந்து கொண்டிருக்கிறது. சென்னை மேற்கு மாம்பலத்தைச் சேர்ந்த ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா அவர்களால் சிவ ஞான பூஜா மலர் என்று ஒரு புஸ்தகம் வெளியிடுவதைக் கேட்டு மிகுந்த சந்தோஷிக்கிறோம். இந்த புஸ்தகத்தை அனைவரும் படித்து அதன்படி நடந்து ஸ்ரீ பரமேச்வரனின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராகும்படியாய் ஆசீர்வதிக்கின்றோம்.

நாராயணஸ்மிருதி :

உ

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்
26-வது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

## அவர்கள் அருளிய ஆசியுரை

தருமபுரம்
மாயூரம் (அஞ்சல்) 609001
*28.7-1981*



**"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"**

*சிவபுராணக்காவலர் ஸ்ரீ ஆங்கிரஸ வேங்கடேச சர்மா அவர்கள் ஸ்ரீ சங்கரபக்த ஜனசபையை நிறுவி அதன்மூலமாக பல அரிய நூல்களை வெளியிட்டும், ஆங்காங்கும் புராண இதிகாச நூற்கருத்துக்களையும் அவைகளின் தத்துவங்களையும் மக்கள் நன்குணருமாறு விரிவுரைகள் நிகழ்த்தியும் நன்கு பணியாற்றிவருபவர். தொடர்ந்து*

அவர் வெளியிட்டுவரும் சங்கரஜயந்திமலர், மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை ஆகியன அனைவரும் பெற்றுப்படித்து இன்புறத்தக்கன. இப்போது சிவஞான பூஜாமலர் வெளிவருகிறது. "தமிழ்ச்சொலும் வடசொலும் தாள் நிழற்சேர அம்மலர்க் கொன்றை அணிந்த எம் அடிகள்," என்ற திருஞானசம்பந்தர் திருவாக்கிற் கேற்ப, தமிழ்மொழி வடமொழிகளிலுள்ள இதிகாச-புராண தோத்திர-சாத்திர நூல்களில் காணப்படும் சில அரிய கருத்துக்களைத் தொகுத்து இதில் தந்திருப்பது மலருக்கு மணந்தருவதாகும். ஸ்ரீ வேங்கடேச சர்மா அவர்கள் ஆற்றி வரும் இத்தகைய சிறந்தபணிகள் தொடர்ந்து நிகழவும் அன்பர்கள் மலரைப்பெற்று மணத்தை நுகர்ந்து இன்புற்றுச் சிறக்கவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

# ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அருளிய ஆசியுரை

திருப்பனந்தாள்-612504
(தஞ்சை ஜில்லா) தேதி 25-7-1981.



எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னிய சீர் சங்கரன் தாள் மறவாத சிந்தையுடையராய் திருமுறை, சாத்திரங்களில் ஈடுபாடும், புலமையும் கொண்டு புராண விரிவுரைகள் நிகழ்த்தி வருகின்ற ஆங்கீரஸ எஸ். வேங்கடேச சர்மா மொழிக்கு மொழிதித்திக்கும் மூவர் தமிழ்மாலை நூல்வெளியீட்டின் பொருட்டு சிவஞான பூஜா மலர் வெளியிடவிருப்பதறிந்து மகிழ்கின்றோம்.

முதிர்ந்த சிவாநுபூதியின் வெளிப்பாடாக மூவரும் அருளிச்செய்த 'கண்டபெரும் மந்திரங்களை' அவற்றின் சொல், பொருள் நலங்களை சுவைஞர்கள் உணரவும், அதன் வழி திருவருட்பேறு தலைப்படவும் வாயிலாக எழுதிய உரை நூல்களுக்குத் தேவையான நிதியுதவி கருதி வெளியீடும் மலர் ஆன்மீக மணம் கமழும் அரியதொரு பொன் மலரென மிளிரவும், நல்லதொரு பணியில் ஈடுபட்டுள்ள அன்பர் மேன் மேலும் அரிய படைப்புக்களைப் படைத்தளிக்கவும் செந்திற் கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம். சிவசிவ

சுபம்

# சிவஞான பூஜா மலர்

## சிறப்பு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமையாதீன ஸ்ரீலஸ்ரீ குருமஹாசந்நிதானம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள், காயத்திரி அருள் சித்தர் ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள் ஆகியோர்களின் பரிபூரண அனுக்ரஹமும் ஆதரவும் பெற்றது.

## நோக்கங்கள்

1. ''ஞாலம் நின்புகழே மிக வேண்டும் தென், ஆலவாயில் உறையும்எம் ஆதியே'' என்ற ஆளுடைப் பிள்ளையாரின் அருமைத் திருவாக்கின்படி, சிவபெருமானின் பொருள்சேர் புகழை ஞாலமெங்கிலும் பரப்பும் இயக்கமாக இம்மலர் ஆரம்பிக்கப்படுகிறது. இது ஒரு பத்திரிகையோ அல்லது சாதாரண புத்தகமோ அல்ல.

2. ''தென்தமிழும், வடகலையும், தேசிகமும் பேசுவன மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக'' என்ற சேக்கிழார் பெருமானின் வாக்குப்படி தமிழ், வடமொழி, பிறமொழிகளில் உள்ள நூல்களில் உள்ள சிவபெருமானது பெருமைகளையும், முழுமுதல் தன்மையினையும் தொகுத்து ஆண்டுதோறும் மலர் வெளியிடப்படும்.

3. இந்த மலர் மூலம் மூவர் தமிழ் மாலைப் பதிப்புக்கும் சிவஞான பூசைக்கும் பொருள் உதவி தேடுவது.

### மலர் பணி தொடங்கிய வரலாறு

இந்த ஆண்டு சிவஞான பூஜா மலர் வெளியிடுவது திருவருள் சம்மதமுடையது என்பதற்குச் சான்று, இதுபற்றி

அடியேன் சென்னை இராயபுரம் அங்காள பரமேச்வரி கோயிலில் இந்து சமய மன்றத்தில் சொற்பொழிவு செய்து முடித்த பின்னர், அம்மன் சந்நிதியில் இதுபற்றி அன்பர்களிடம் கூறியபோது ஆலய அர்ச்சகர் V. S. வாகீச்வர குருக்கள் அவர்கள் "சற்று இருங்கள்" எனக் கூறித் தமது இருக்கைக்குச் சென்று சில நிமிடங்களில் மீண்டு வந்து அங்காள பரமேச்வரிக்குத் தீபாராதனை செய்து, தட்டில் ரூ. 100/= வைத்து என்னிடம் "இதனை மூலதனமாகக் கொண்டு சிவஞான பூஜா மலர் வெளியிடுங்கள். அம்பிகை அருளால் வெற்றியுடன் நிறைவுறும்" எனக் கூறிக் கொண்டே அளித்தார். இதனை அம்மையின் திருவருளாகக் கொண்டு மலர் வெளியிடும் பணியினைத் தொடங்கினேன். சிவஸ்ரீ V. S. வாகீச்வர குருக்கள் மேலும் ரூ. 50/= வழங்கி உற்சாகப்படுத்தினர். அதனைத் தொடர்ந்து ஆஸ்திகப் பிரமுகர்கள் நன்கொடைகளை வழங்கினர். அவர்களது பெயர்களை கீழே பிரசுரித்துள்ளோம். அம்மையின் துணை கொண்டே அப்பனின் அருளை அடையவேண்டும் என்பதையும் எடுத்துக் காட்டுவது போன்ற இந்த நிகழ்ச்சி அடியேனைப் புல்லரிக்கச் செய்தது.

## நன்கொடையாளர்கள் பட்டியல்

### புரவலர்கள்.

1. சிவஸ்ரீ V. S. வாகீச்வர சிவாசாரியார், ராயபுரம், சென்னை-13. ... ரூ. 150-00
2. சிவஸ்ரீ தர்மரக்ஷாமணி V. D. ஏகாம்பர சிவாசாரியார், மாங்காடு. ... ரூ. 250-00
3. ஆஸ்திகமணி A. சுப்பிரமணிய ஐயர், M.A.,B.L, அட்வொகேட், சென்னை-1 ... ரூ. 100-00
4. S. ராமமூர்த்தி, B. Com., A.C.A., மேலமாம்பலம், சென்னை-33. ... ரூ. 101-00

5. P. V. ஸ்ரீதரன், B.Com., F.C.A.,
சென்னை-17. ... ரூ. 1 0-00
6. ஸ்வாமி ஹம்ஸானந்தஜீ, பரோடா ... ரூ. 100-00
7. M. E. C. ஜயராஜ், ஆலோசகர், இந்து சமய
மன்றம், ராயபுரம், சென்னை-13 ... ரூ. 100-00
8. ஸ்ரீமத் அய்யாபுவா ராம்தாஸி,
ஸஜ்ஜன்கட், P. O. ... ரூ. 61-00
9. Dr. ராணி L. ஹநுமந்தன், M.D.,
மதுரை-1. ... ரூ. 50-00
10. N. K. S. ராஜகோபால முதலியார்,
சங்கரன்கோவில் ... ரூ. 50-00
11. K. V. மூர்த்திநாராயணச் செட்டியார்,
பாங்கர், பாப்பாரப்பட்டி P. O. ... ரூ. 25-00
12. R. மாத்ருபூதம் ஐயர், B.A., B.L.,
அட்வொகேட், சென்னை-33 ... ரூ. 25-00
13. R ரங்கநாதன், B.A., விருகம்பாக்கம்
சென்னை-82 ... ரூ. 25-00
14. V. K. கணபதி, லாயிட்ஸ் ரோடு,
சென்னை-86 ... ரூ. 25-00
15. S. ராமன், P.W.I./S.E.Rly;
கோராபுட் ... ரூ. 25-00
16. T. விஸ்வநாதன், பெங்களூர்-75. ... ரூ. 25-00
17. சிவஸ்ரீ கணேச சிவாசாரியார்
ஸ்ரீ கச்சபேச்வரசுவாமி தேவஸ்தானம்,
சென்னை-1 ... ரூ. 25-00
18. ஸ்ரீமதி ஸரஸ்வதி சேதுராமன்,
அடையார், சென்னை-20. ... ரூ. 25-00
19. A. சாம்பசிவம் ஐயர், மேலமாம்பலம்,
சென்னை-33. ... ரூ. 25-00
20 R. C. கதிர்வேல், கலயம்புத்தூர். P.O. ... ரூ. 27-00

21. P. K. வெங்கடராகவன், B.A.
விருகம்பாக்கம், சென்னை-82 ... ரூ. 25-00
22. T. V. வைத்தியநாதன், சென்னை-17 ... ரூ. 25-00
23. ஆஸ்திகரக்ஷாமணி V. சின்னஸ்வாமி
ஐயர், சென்னை-17. ... ரூ 50-00
24. V. N. கணேசன், B.Com.,
மஹாலிங்கபுரம், சென்னை-34. ... ரூ. 25-00

## ஆயுள் சந்தா

ஸ்ரீமான் R. B. முத்துசாமி செட்டியார்,
தேவாரம், மதுரை ஜில்லா ... ரூ. 100-00

## மற்ற நன்கொடைகள்

1. R. கந்தசாமிப்பிள்ளை, சேலம்-2. ... ரூ. 10-00
2. N. சந்த்ரசேகரன், திருச்சி. ... ரூ. 10-00
3. G. V. அருணசலம் ஐயர், ஏர்வாய்ப்-
பட்டினம் P.O. ... ரூ. 10-00
4. V. E. கிருஷ்ணமூர்த்தி, சென்னை-1. ... ரூ. 10-00
5. A. T, A. ஈச்வர முதலியார்,
நாங்கநல்லூர், சென்னை-61. ... ரூ. 10.00
6. P. S. கிருஷ்ணமூர்த்தி, மேட்டூர்டாம்-2 ... ரூ. 5-00
7. கல்யாணகிருஷ்ணன் கோயம்புத்தூர். .. ரூ. 5-00
8. S. நடேச உடையார், மாங்காடு ... ரூ. 5-00
9. L. K. முத்து, தேனும்பேட்டை,
சென்னை-18. ... ரூ. 10-00

---

## சிவஞான பூஜா மலர்

புரவலர் சந்தா — ரூ. 25-00 ம் அதற்கு மேலும்
ஆயுள் சந்தா —ரூ. 100-00.

தனிப்பிரதியின் விலைக்கு மேல் அவரவர் விருப்பம் போல் நன்கொடையளிக்கலாம். நன்கொடையாளர்களின் பெயர்கள் மலரில் பிரசுரிக்கப்படும். —பதிப்பாசிரியர்.



உ

குருபாதம்

திருத்தருமை ஆதீனம்
26-வது குரு மஹாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள் அருளியது

# சைவமும் செந்தமிழும்

தமிழிற்கும் சைவத்திற்குமிடையே பிரித்தறிய இயலாத ஒப்புமைகள் பல உள்ளன. தமிழ்மொழியில் எழுத்துக்களை அகரஉயிர், ஏனைய பதினோரு உயிர்கள், மெய்யெழுத்துக்கள் என மூவகையாகப் பிரிக்கலாம். இதேபோல, சைவத்திலும் இறைவன், உயிர்கள், தளைகள் என்று மூன்று பகுப்புகள் உண்டு. தமிழ்மொழியில் அகர உயிர் தனித்து நின்று இயங்குவதோடு, நாதமாத்திரையாய் ஏனைய எழுத்துக்களோடு கலந்து நின்று ஒலிக்கும். இவ்வகர உயிர்போல், சைவசித்தாந்தம் விளக்கிக்கூறும் இறைப் பொருளாகிய பரசிவமும், தாம் தனித்தும் எல்லா உயிர் களோடு கலந்தும் இயங்கும் இயல்புடையது. பிற பதினோரு உயிர்களும் அகரத்தின் துணையின்றி இயங்கா. இதுபோல் உயிர்த்தொகுதிகளும் அகர உயிர்போல் விளங்கும் இறைவனது அருளின்றித் தாமே இயங்க மாட்டா. மூன்றாவதாகிய மெய்எழுத்துக்களை 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' எனக் கூறுவார் இலக்கண நூலார். இவையும் உயிரெழுத்தாகிய அகரத்தின் துணை யின்றி இயங்கா. இதுபோல் ஆணவம் முதலாகிய தளை

களும் இறைப்பொருளாகிய சிவத்தின் துணையின்றி இயங்குதல் இல்லை. இம்மெய்கள் வன்கணம், இடைக்கணம், மென்கணம் என மூன்ருகப் பகுக்கப் பெறும். இவ்வாறே மலங்களோடு சம்பந்தப்பட்ட உயிர்களையும் மூன்ருகப் பகுத்தல் சைவத்தில் உள்ளது. ஆணவமாதி மும்மலம் உடையாரைச் சகலர் (வன்கணத்தர்) என்றும், ஆணவம், மாயை இரண்டும் உடையாரைப் பிரளயாகலர் (இடைக்கணத்தார்) என்றும், ஆணவம் ஒன்றே உடையாரை விஞ்ஞானகலர் (மென்கணத்தர்) என்றும் கூறுவர்.

உயிர், பொருள்களை அறிதற்கு 36 தத்துவங்கள் துணை புரிகின்றன. அதுபோல் தமிழிலும் 36 நூல்களைக் கொண்டே எல்லாவற்றையும் அறிதல் இயலும். இதற்கேற்பவே பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்ற 36 நூல்கள் அமைந்துள்ளன. இவையெல்லாம் நினைந்து செய்யப்பட்ட ஒப்புமைகள் அன்று; சைவத்திற்கும் தமிழிற்கும் இடையே இருந்துவரும் பிரித்தறியமாட்டாத தெய்வீக உறவுகள்.

இவ்வொப்புமை பற்றியே சைவ முதல் ஆசிரியராய்த் திகழ்ந்த திருஞானசம்பந்தரைச் சைவம் பரப்பிய ஞான சம்பந்தர் என்ஞது 'நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்' என்றும், 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்' என்றும் பின்வந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் வேறுபாடற்ற நிலையில் தமிழோடு இணைத்துப் பாடினர்.

[ஆசிரியர் குறிப்பு: இது "தமிழ் வளர்க்கும் தருமபுரம்" என்னும் நூலுக்கு ஸ்ரீலஸ்ரீ குருமஹாசந்நிதானம் அவர்கள் வழங்கிய ஆசியுரையினின்றும் எடுத்துப் பிரசுரிக்கப் பட்டுள்ளது.]

சிவம்

உ
சிவமயம்

# ஆசிரியர் ஆங்கீரஸ சர்மாவின்
# சிவபுராண ஞான பூஜை

**என்னை நன்கு படைத்தனன் இறைவன்**
**தன்னை ஞான பூசைசெய் திடவே**

சிவஞான பூஜா மலர் ஒன்று வெளியிட எண்ணிய போது இவ்வாண்டு சிவபுராண ஞான பூசையில் **அறுபதாவது** ஞான பூசை நிகழ்ந்ததால் அதனுடைய மணி விழாவினை முன்னிட்டு இம்மலர் வெளியிடுவதாகவும் கருதப் படலாம். இதுவரை 59 சிவபுராண ஞான பூசைகள் நிகழ்ந் துள்ளன. இவ்வருஷம் நிகழ்த்திய ஞான பூசைகளின் விவரங்களை மட்டும் கீழே கொடுத்துள்ளோம்.

## 1. ஸ்ரீ கச்சபேசுவர சுவாமி தேவஸ்தானம், சென்னை-1

இவ்வருடத்திய பிரம்மோத்சவத்துக்குப் பின்னர் நடை பெற்ற விடையாற்றி விழாவில் 21-4-81 முதல் 6-5-81 வரை 15 நாட்கள் மேற்படி தேவஸ்தானத்தில் ஆசிரியர் ஆங்கிரஸ சர்மாவின் திருவிளையாடற்புராண உபன்யாசம் நடை பெற்றது. ஆஸ்திகமணி ஸ்ரீமான் A. சுப்பிரமணிய ஐயர், M.A., B.L , அவர்களும், ஆலய குருக்கள் சிவஸ்ரீ S. கணேச சிவாசாரியார் அவர்களும் பேராதரவு அளித்தனர். நாட்கள் போதாமையால் திருவிளையாடற்புராணம் முழுமையும் உபன்யாசம் செய்ய இயலாததால் இதனை ஆசிரியரது 108 சிவபுராண ஞானபூசைக் கணக்கில் சேர்க்கவில்லை.

## 2. இந்து சமய மன்றம்-இராயபுரம் கிளை

சென்னை இராயபுரம் இந்துசமய மன்றத்தின் ஆதரவில் ஸ்ரீ அங்காளபரமேச்வரி ஆலயத்தில் 9-5-81 முதல் 22-5-81

வரை 14 நாட்கள் ஆசிரியரது திருவிளையாடற் புராணச் சொற்பொழிவு நடைபெற்றது. மன்றத்தின் தலைவர் திரு சடையாண்டி, உபதலைவர் சிவஸ்ரீ V.S. வாகீச்வர குருக்கள், கௌரவ ஆலோசகர் திரு M. E. C. ஜயராஜ், காரியதரிசி திரு. ரங்கநாதன்ஆகியோர் பேராதரவளித்தனர் ஆசிரியரது 60 வது சிவபுராண ஞான பூஜையாக அமைந்த இந் நிகழ்ச்சி இந்த மலர் வெளியீட்டுக்கும் காரணமாக அமைந்தது.

### 3. இந்து சமய மன்றம்-சவகர் நகர், அகரம்

பேராசிரியர்உயர்திரு மறை. திருநாவுக்கரசு அவர்களின் நன்முயற்சியாலும், திரு. சா. நடராசய்யர் மற்றும் பல அன்பர்களின் ஒத்துழைப்பாலும் 8.6-1980 ஞாயிறு முதல் பிரதி ஞாயிறு சென்னை பிரம்பூர் அடுத்த அகரம்-சவகர் நகரில் நடைபெற்று வந்த நமது ஆசிரியரது பெரிய புராணச் சொற்பொழிவுகள் 15-6-1981 மிகவும் சிறப்பாக நிறைவுற்றது. பேராசிரியர் மறை திருநாவுக்கரசு அவர்கள் தலைமை வகித்தார்கள். அகரம் ஜானகிராம் நடுநிலைப்பள்ளி நிர்வாகிகள், தலைமையாசிரியர் ஆகியோர் மிகச்சிறந்த முறையில் ஒத்துழைப்பினை நல்க, விழா மிக்க சிறப்புடன் நிறைவேறியது. இது ஆசிரியரின் 61 வது சிவபுராண ஞான பூசையாகும்.

### 4. ஸ்ரீ சக்தி விநாயகர் ஆலயம், கருணாநிதி நகர், சென்னை.

சென்னை-கருணாநிதி நகரில் உள்ள ஸ்ரீ சக்தி விநாயகர் ஆலயம் மிகவும் பிரசித்தி பெற்றது. அந்தப் பகுதியைச் சேர்ந்த மாதர்கள் அக்கோயிலைப் போற்றிப் பாதுகாத்த செய்தி சில ஆண்டுகட்குமுன் பத்திரிகைகளில் வெளி வந்தது. இத்தகைய சிறப்பு மிக்க இவ்வாலயத்தில் 30-9-81 முதல் 10-9-81 வரை (2-9-81 ஒரு நாள் நீங்கலாக) 10 தினங்கள் ஆசிரியரது கந்தபுராண சொற்பொழிவு நடைபெற்றது. ஆலய நிர்வாகிகள் பேராதரவு காட்டினர். இது 62-வது ஞான பூசையாகும்.

சிவம்



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர
ஆதீனம் 26-வது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்.



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் காசிவாசி
ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள்

உ

சிவமயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை

## (பதிப்பாசிரியர் அறிக்கை)

**தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாள்முக்கட்**
**செங்கரும்பே மொழிக்கு மொழி தித்திப்பாக**
**மூவர்சொலுந் தமிழ்கேட்கும் திருச்செவிக்கே**
**மூடனேன் புலம்பியசொல் முற்றுமோதான்.**

**—தாயுமானவ சுவாமிகள்**

திருவருள் துணை கொண்டு திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கட்கு அவர்கள் யாத்திரை செய்த முறையினைப் பின்பற்றிப் பதிகங்கள். பொழிப்புரை, மற்றும் விசேட உரை, பதிக வரலாறு, தலவரலாறு, புராண வரலாறு முதலிய விசேடங்களுடன் அடியேன் பதிப்பிக்க எண்ணினேன். சிறு சிறு சஞ்சிகைகளாகப் பிரசுரித்தல் நலமாகலாம் என எண்ணி 108 தமிழ் மாலைகளாகப் பிரசுரிக்கத் தீர்மானித்தேன். இந்த தமிழ் மாலை வரிசைக்குப் பெயர் என்ன வைப்பது என்று யோசித்தபோது திருவருள் துணையால் மேலே காட்டியுள்ள தாயுமானவர் பாடல் நினைவுக்கு வந்தது. அப்பாடலில் **"மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலுந்தமிழ்"** என்ற சொற்றொடர் அடியேனுடைய உள்ளத்தைக் கவர்ந்தது. அதனையே அடியேன் வெளியிட எண்ணிய திருமுறை வரிசைகட்குப் பெயராக வைக்கத் திருவருள் ஆணை தந்தது. தாயுமானவ சுவாமிகளின் சொற்களை அப்படியே எடுத்தாண்டு "மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்" என்பதுடன் "மாலை" என்பதனைச் சேர்த்து பெயர் அமைத்தேன்.

இந்தப் பெயர் அமைப்பையும், நூல் அமைப்பையும், உரைப் பகுதிகளையும் ஸ்ரீலஸ்ரீ குரு மஹா சந்நிதானங்கள், திருமடத் தலைவர்கள், பேராசிரியர்கள், மற்றும் செந்தமிழ்ப்புலமையும் சைவ நூற் புலமையும் ஒருங்கேயமைந்த அறிஞர் பெருமக்களும் அங்கீகரித்துப் பாராட்டியுள்ளனர். வாசக அன்பர்களும் அவ்வப்போது தங்கள் பாராட்டுதல்களைத் தெரிவித்து அடியேனை உற்சாகப் படுத்தி வருகிறார்கள்.

இருப்பினும் பணியின் அளவு மிகப் பெரியது; அடியேன் தகுதி மிகச் சிறியது. இக்காரணத்தால் பணி மிகத்தடைப் பட்டும், தாமதமாகவும் நிறைவேறி வருகிறது. ஆயினும் "முன்னவனே முன்னின்றால் முடியாததும் உளதோ" என்ற தெய்வச் சேக்கிழார் பெருமான் திருவாக்குப்படி இப்பணி வெற்றிகரமாக முடிவுறும் என்பதில் அடியேனுக்குச் சிறிதும் ஐயமில்லை. இதுவரை 10 தமிழ் மாலைகளே வெளி வந்துள்ளன. இன்னும் 98 தமிழ் மாலைகள் வெளிவர வேண்டும். இந்த சிவஞான பூஜாமலர் வெளியீட்டின் நோக்கங்களுள் இத்தமிழ் மாலைப் பதிப்புக்கு உதவுவதும் ஒன்றாகும்.

## மூவர் தமிழ் மாலை விலை விகிதங்கள்

**முதல் ஆறு தமிழ் மாலைகள் :**

| | |
|---|---|
| ஒவ்வொரு தமிழ் மாலையும் தனிப்பிரதி | ரூ. 2-00 |
| 1 முதல் 6 வரை தமிழ் மாலைகள் சேர்த்து | ரூ. 10-00 |

**ஏழாவது தமிழ் மாலை முதல் :**

| | |
|---|---|
| ஒவ்வொரு தமிழ்மாலையும் தனிப்பிரதி | ரூ. 3-00 |
| ஒவ்வொரு 6 தமிழ்மாலைகள் தொகுதி. | 15-00 |
| 1 முதல் 108 தமிழ்மாலைகளுக்கும் முன்பண உதவிச் சலுகை விலை | 158·00 |

சலுகை விலை முன்பணமாகச் செலுத்தப்பட வேண்டும். ஒரு ஆண்டுக்குள் தவணைகளாகவும் செலுத்தலாம்.

முன்பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமான தமிழ்மாலைகள் உடனடியாக அனுப்பப்பட்டு, மற்றவை பிரசுரமானதும் உடனுக்குடன் அனுப்பி வைக்கப்படும்.

இந்த திட்டத்தை ஆரம்பித்த சமயம் இருந்த நிலையினை ஒட்டி முன்பணச் சந்தா ரூ 101/= என்று வைத்திருந்தேன். தற்சமயம் காகிதம் விலை கற்பனைக்குமெட்டாத அளவு உயர்ந்து விட்டதாலும், உயர்ந்து கொண்டே வருவதாலும் ரூ. 158/= என உயர்த்தியுள்ளேன். ரூ. 101/= சந்தா செலுத்தியவர்களும் சிலர் அடியேனது வேண்டுகோட்கிணங்கி மீதி ரூ. 57/=ம் செலுத்தியுள்ளார்கள். இதுவரை செலுத்தாத அன்பர்கள் இந்த ஒரு முறை மட்டும் அதிகப்படியான ரூ 57/= ஐச் செலுத்தும்படி வேண்டுகிறோம். ரூ. 158/= செலுத்தி விட்டால் பின்னர் எக்காரணம் பற்றியாவது மீண்டும் விலையுயர்வு ஏற்படும் போது அது புதிதாய்ச் சேருபவர்களை மட்டுமே பாதிக்கும் என உறுதி கூறுகிறோம்.

இதுவரை முன்பண உதவிச் சலுகை விலை செலுத்தியவர்களின் பெயர்களை மட்டும் இங்குப் பிரசுரிப்பதில் பெருமை அடைகின்றோம்.

1. ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள், சென்னை—1.
ஸ்ரீமான்கள்
2. A. சுப்பிரமணிய ஐயர், M.A., B.L,
அட்வொகேட், சென்னை—1.
3. T. S. சுந்தரேசன், இண்டஸ்ட்ரியல் ஸ்டோர்ஸ்
டிரேடிங் கம்பெனி, சென்னை-1.
4. P. S. N M. ராமலிங்கம் செட்டியார்.
பேப்பர் மெர்ச்சண்ட், சென்னை—1.
5. V. E. கிருஷ்ணமூர்த்தி ஐயர், சென்னை —1.
6. ராஜரத்னம் & கம்பெனி, கிடங்குத்தெரு, சென்னை-1,

7. V. N. ஆறுமுகம், B.Com., F. C. A., மயிலாப்பூர், சென்னை-4.
8. N. C. கிருஷ்ணன், B.Sc., B.L., F. C. A. தி. நகர், சென்னை-17
9. T. S. சாம்பமூர்த்தி சிவாசாரியார், காளிகாம்பாள் தேவஸ்தானம், சென்னை-1.
10. S. கணேச சிவாசாரியார், கச்சபேச்வரர்தேவஸ்தானம் சென்னை-1.
11. R. மாத்ருபூதம் ஐயர், B.A., B.L, அட்வொகேட் சென்னை-33.
12. ஆஸ்திகரக்ஷாமணி V. சின்னஸ்வாமி ஐயர், தி. நகர், சென்னை-17.
13. S. சங்கரநாராயண ஐயர், ஜூபிலி ரோட், சென்னை-33
14. S. ராமமூர்த்தி, B.Com., A.C.A, சென்னை-33.
15. R. சந்திரமவுளி ஐயர், சுபாஷ் ஆடோ என்டர் பிரைஸஸ், சென்னை-2.
16. S. ஸ்ரீநிவாஸன், செக்ரடரி, பாரத் மோடார்ஸ். சென்னை-2.
16. M/s. பாரத் மோட்டார்ஸ், சென்னை-2.
17. Dr. S.K. ரகுராமன், ஆரியகவுடர் ரோடு, சென்னை-33.
18. K. ஜயராமய்யர். B.A., G.D.A., குப்பைய செட்டி தெரு, சென்னை-33.
19. M. கல்யாணராமய்யர், B.A., B.T., லேக்வியூரோடு சென்னை-33.
20. A. ராமசந்திரன், தி. நகர் சென்னை-17.
21. T. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர், M/s சசி & சேகர், சென்னை-24.
22. மறை திருநாவுக்கரசு, சவகர் நகர், சென்னை-82.
23. தி. ஆலங்காடன், B.A., திருவான்மியூர், சென்னை-41.
24. R. ரங்கநாதன், B.A, விருகம்பாக்கம், சென்னை-82,

25. V. K. கணபதி, லாயட்ஸ் ரோடு, சென்னை-86.
26. P. K. வெங்கடராகவன், B.A., சென்னை-82.
27. T. V. வைத்தியநாதன், சென்னை-17.
28. தர்மரக்ஷாமணி, சிவஸ்ரீ V.D. ஏகாம்பர சிவாசாரியார் மாங்காடு.
29. R. நாராயணசுவாமி ஐயர், M. A., போஸ்டல் காலனி சென்னை-33.
30. K. V. மூர்த்தி நாராயணச் செட்டியார், பாங்கர், பாப்பாரப்பட்டி.
31. G. ரகோத்தமன், பாங்கர், விருத்தாசலம்.
32. P. V. கிருஷ்ணராஜ், குகை, சேலம்-6.
33. R. நாகராஜராவ், அம்பத்தூர், சென்னை-53.
34 ஸ்ரீமதி ஸரஸ்வதி சேதுராமன், அடையார் சென்னை-20.
35. S. ரமணி, திருவல்லிக்கேணி-சென்னை-5.
36. V. மனோஹரன், B. Sc., உத்தமபாளையம், மதுரை ஜில்லா.
37. N. சிவராமகிருஷ்ணன், கல்கத்தா-26.
38. V. N. சுந்தரராஜன், B.A., B.L., அட்வொகேட், சேலம்-7.
39. ஸ்ரீமத் அய்யாபுவா ராமதாஸி, ஸஜ்ஜன்கட் P. O.
40. N. K. தர்மராஜ், காமயகவுண்டன்பட்டி, மதுரை ஜில்லா.
41. R. K. காமயசாமி, காமயகவுண்டன்பட்டி, மதுரை ஜில்லா.
42. Dr. K, ஜயராமச்சந்திரன், M.B., B.S. நாமக்கல்.
43. K. சுந்தரேச சாஸ்திரி, B. A.. பம்பாய்-19.
44. V. H. சுப்பிரமணியம், திலக்நகர், P. O. பம்பாய்.
45. புலவர் M. குமாரசுவாமி, தமிழாசிரியர், சேலம்.
46. T. M. வெங்கடசுப்பிரமணியன், மானேஜர், ஒர்க்ஸ் அகவுண்ட்ஸ், தன்பாட், (பீஹார்).

47. A. R. சுப்பரத்தினம், ஸாகர், பம்பாய்-77.
48. N. லக்ஷ்மணன், P.&T, ஆடிட் ஆபீசர், ஹைதரபாத்.
49. M மெய்யப்பன், நெய்வேலி-3.
50. S. சுப்பையா, உல்சூர், பெங்களூர்-8.
51. R.கந்தசாமிப் பிள்ளை, ஓய்வு பெற்ற ஆசிரியர்,சேலம்-2
52. N. K. S. ராஜகோபால முதலியார், சங்கரன்கோவில்
53. ஸ்ரீமதி கோகிலா சுப்பையன், கோயம்புத்தூர்
54. Y. சாம்பமூர்த்தி, B.A ராஜா அண்ணுமலைபுரம். சென்னை-28
55. K. N. பரசுராமன், B.A. பார்ட்னர், P. V. ராஜன் & கோ, அரக்கோணம்.
56. K. S. அனந்தன், பாப்பம்பட்டி, கோவை ஜில்லா.
57. S. லிங்கேசுவரன், வைகைக் காலனி, மதுரை.
58. R. சங்கரன், அம்பத்தூர், சென்னை-53.
59. T. C. S. இராமச்சங்கு பாண்டியன், தூத்துக்குடி-1
60. Dr. ராணி L. ஹனுமந்தன், M.D., மதுரை-1.
61. R. நடராஜய்யர், B.Sc., செக்ரடரி, மேட்டூர். கெமிகல்ஸ், மேட்டூர் அணை-2
62. T. N. ராமச்சந்திரன், B.Com., B.L. அட்வொகேட், தஞ்சாவூர்.
63. N. குருசுவாமி, தூத்துக்குடி-2.
64. A. ஸுப்ரஹ்மணியோம், திருவனந்தபுரம்-23.
65. பேராசிரியர் க வடிவேலாயுதம், M.A., தாம்பரம், சென்னை-59.
66. க திருநாவுக்கரசுப் பிள்ளை, B.A., சிதம்பரம்
67. N.S. நாராயணன், உஸ்மான் புரா, அஹமதாபாத்-14.
68. தமிழ்த்துறைத் தலைவர், கொங்கு நாடு கலைக்கல்லூரி, கோயம்புத்தூர்.
69. ஸ்வாமி ஹம்ஸானந்தஜீ, பரோடா.
70. S. ராமன், கோராபுட், (ஒரிஸ்ஸா).
71. புலவர் K.R. நாகராசன், சென்னை-26.

72. வித்துவான் வை நடராசன், சென்னை-33.
73. V. சேகர், திருவாதிரையான் திருவருட்சபை, நுங்கம் பாக்கம் சென்னை-34
74. K. R. பாலசுப்பிரமணியன், க்ரோம்பேட்டை, சென்னை-44.

(பெயர்கள் விடுபட்டிருப்பின் அறிவிக்க வேண்டுகிறேன்).

மற்றும் பலர் ஆறு புத்தகங்கட்குரிய தொகை செலுத்தியும்சிலர் தனிப் பிரதிகள் அவ்வப்பொழுது பணம் செலுத்தியும் பெற்றுக் கொள்கிறார்கள். மற்றும் சிலர் தவணைகளாகச் சந்தா செலுத்தவும் ஒப்புக்கொண்டுள்ளனர். ஆதரவு நல்கும் அனைவருக்கும் அடியேனது மனப்பூர்வமான நன்றிகள் உரித்தாகுக.

சிவம்

# ஆஸ்திக மணியின் மணிவிழா

(ஆங்கீரஸ சர்மா)

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு" —திருக்குறள்

என்றார் தெய்வப் புலமைத் திருவள்ளுவர். இதற்கு இலக்கியமாக ஈதலும் அதனால் ஏற்படும் கீர்த்தியுடனும் சென்னையில் வாழ்ந்து வருபவர் மணிவிழாக் கொண்ட ஆஸ்திகமணி ஸ்ரீமான் A. ஸுப்ரமணிய ஐயர் M.A , B. L, என்னும் பிரபல அட்வோகேட் (Supreme Court Advocate) ஆவர். சென்னை அரண்மனைக்காரத் தெருவின் சமீபம் உள்ள வேங்கட மேஸ்திரி தெருவில் வசிக்கும் ஆஸ்திகமணி அவர்கள் சென்னை ஸ்ரீ கச்சபேசுவர சுவாமி ஆலயத்தின் அறங்காவலராகவும், நிர்வாக அறங்காவலராகவும் பல்லாண்டுகள் பணி புரிந்துள்ளார்கள். பண்டிதர்களையெல்லாம் ஆதரிக்கும் உயர்ந்த மனப்பான்மையுடையவர். உபன்யாஸத் துறையில் அன்று புதிதாக வந்தவரும் இவருடைய ஆதரவைப்பெருமல் இரார். ஸ்ரீகச்சபேசர் கோயில், ஸ்ரீ காளிகாம்பாள் கோயில், முதலிய இடங்களில் பல வித்வான்களைக் கொண்டு பிரவசனங்கள் நிகழ்த்தச் செய்கிறார். ஆஸ்திகத்துறை மட்டுமல்லாது சமூக நலத்துக்கும் தம்மால் இயன்ற அளவு உதவிகள் செய்வது இவரது இயல்பு.

காட்சிக்கெளியர், கடுஞ்சொல்லர் அல்லர், இல்லை என்றுவருபவர்க்கு இல்லை என்று சொல்லாது ஈயும் கொடையாளி நமது ஆஸ்திகமணியாவர். இந்தக் குணங்கள் இவருக்கு புதியதாக உண்டானதல்ல. இவை இவருடைய பிறவிக் குணங்கள் என்று உணர்தல் வேண்டும்.

திருஞானசம்பந்தர் அவதரித்த கவுண்டின்ய கோத்திரத்தில் தோன்றியதாலோ என்னவோ இவர் சிவபக்தி மிக்கவராய்ச் சிவத்தொண்டுக்கும் சிவ பக்தர்களுக்குமே தமது உதவியில் முதலிடம் அளிக்கின்றார். பாரத தேசம் முழுமையும் இன்று பக்தியுணர்ச்சியைத் தமது அரிய சித்தியின் மஹிமையினால் ஊட்டி வரும் காயத்திரி அருள் சித்தர் ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள் இவரது உடன் பிறந்த ஸஹோதரர் ஆவார்.

இத்தகைய பெருமைகள் நிறைந்த நமது ஆஸ்திக மணிக்கு இந்த ரௌத்திரி ஆண்டு மாசி மாசம் சிவராத்திரி தினத்தன்று (4-3-1981, புதன்கிழமை) மணிவிழா என்னும் ஷஷ்டியப்த பூர்த்தி விழா மிகச் சிறப்பாகச் சென்னையில் நடைபெற்றது. உற்றார் உறவினர்களும், பல பிரமுகர்களும், பண்டிதர்களும், நண்பர்களும் திரண்டு வந்து விழாவைச் சிறப்பித்தனர்.

**1965** ம் ஆண்டு முதல் அடியெனுக்கு ஆஸ்திகமணியின் பேராதரவு அடியேனுடைய அனைத்துப் பணிகட்கும் கிடைத்து வந்துள்ளது. பணிகட்கு உதவுவது என்பது மட்டுமல்லாது அடியேனிடம் பேரன்பு பூண்டு குடும்பநண்பராக, உறவினரிலும் மேலாகத் திகழ்ந்து வருபவர் நமது ஆஸ்திகமணியாவர். எனவே அடியேனுக்கும் மணிவிழா அழைப்புக் கிடைத்தது. மணிவிழாச் சிறப்பினைக் கண்டு களிக்கும் பேறும் கிடைத்தது. பல பெரியோர்கள், பிரமுகர்கள் மிக விலையுயர்ந்த பரிசுகளை அளித்தனர். அடியேனது வசதிக்கேற்ற முறையில் ஒரு சால்வை போர்த்தி

**''பாரிலோர் ஆயிரம் பிறைகண்டு பெருமநீ**
**புகழுடன் வாழ்க மாதோ''**

என வாழ்த்திக் கவுண்டின்ய கோத்திரத்துப் பெருந்தகையான இவருக்குக் கவுணியர்குல திலகரான திருஞானசம்பந்தர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் அடங்கிய

ஒரு புத்தகத்தையும் காணிக்கையாக அளிக்கும் பேறு பெற்றேன். அதனையும் பொருட்படுத்தி ஏற்று என்னுடன் புகைப்படமும் எடுத்துக் கொண்டார். அப்படத்தையும் இப்பகுதியில் காணலாம்.



**ஆஸ்திகமணி ஸ்ரீமான் A. சுப்பிரமணிய ஐயர், M.A.B.L, ஸ்ரீமதி ருக்மணி அம்மாள் தம்பதிகளின் மணிவிழாவில் ஆசிரியர் ஆங்கீரஸ சர்மா கலந்து கொண்டு வாழ்த்திய போது எடுத்த படம். நகைமுகத்துடன் மாலையுடன் வீற்றிருக்கும் ஆஸ்திகமணியின் இடது புறத்தில் ஆங்கீரஸ சர்மாவைக் காணலாம். தம்பதிகளின் வலது புறத்தில் வீற்றிருப்பவர் ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள்.**

ஸ்ரீமான் A. சுப்பிரமணிய ஐயரவர்களைப் போலவேயே அவரது தர்மபத்தினியார் ஸ்ரீமதி ருக்மணி அம்மாளும் மிக்க உதாரகுணமும், ஆஸ்திகத் தொண்டில் அயரா நம்பிக்கையும் கொண்டவர்கள். சிவபக்தியும் சிவனடியார் பக்தியும் மிக்குச் சிறந்து விளங்குபவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

**வாழ்க மணிவிழாத் தம்பதிகள்!**

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமை ஆதீனம்

26-வது குருமஹாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

திருச்சி வானொலி நிலையம் நிகழ்த்தி வரும்

குறள் நெறியில் "பொறிவாயில் ஐந்தவித்தான்"

என்ற குறள் பற்றி வழங்கிய

# அருளுரை

*8-9-1980*

உலகில் வாழும் எல்லா உயிர்களுள்ளும் மனிதனே சிறந்தவன். மனித உடலமைப்பில் எல்லா உறுப்புக்களும் இன்றியமையாதன என்ருலும் முகமே பெரிதும் சிறப்புடையது. முகத்தின் துணையின்றி ஒருவரை அடையாளம் காண முடியாது. அது போல் எந்த ஒரு நூலாயினும் அதற்கு முகம் போல் இன்றியமையாத ஒரு முன்னுரை வேண்டும். இதனையே பாயிரம் என்பர்.

ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவல் அன்றே"

என்று பாயிரத்தின் சிறப்பை நன்னூல் ஆசிரியர் பவணந்தியார் குறித்துள்ளார். நெஞ்சத்து எண்ணங்களை முகம் பிரதிபலித்துக் காட்டும் என்பதனை, "அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" என்பார்

திருவள்ளுவர். இது போல் நூலின் உள்ளீட்டைப் பிரதி பலித்துக் காட்டும் திறம் பாயிரத்திற்கே உண்டு.

வள்ளுவர் தம் நூலின் முன்னுரையாக நான்கு அதிகாரங்களை அமைத்துள்ளார். இந்நான்கு அதிகாரங் களையும் பாயிரம் என முன்னோர் குறித்தனர்.

**''ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும்**
**பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போய்ஒருத்தர்**
**வாய்க்கேட்க நூல் உளதோ மன்னுதமிழ்ப்புலவ**
**ராய்க் கேட்க வீற்றிருக்கலாம்''**

என நத்தத்தனார் என்ற சங்கப் புலவரும் இந்நூற்குப் பாயிரம் இது என்பதனைக் குறித்துள்ளார்.

பாயிரம் என்பது கடவுள் வாழ்த்தும், செயப்படு பொருளும் என இரு வகையாக அமையும். அதை ஒட்டியே தான் திருவள்ளுவர் தமது நூலின் முதல் அதிகாரமாகக் கடவுள் வாழ்த்து அமைத்திருக்கின்றார். அதுவே, அவரது கடவுள் கொள்கையைத் தெரிவிக்கும். கடவுளைப் பற்றிய குறிப்பை இவ்வதிகாரத்தில் மட்டுமின்றி நூலின் பிற இடங்களிலும் காணுகின்றோம். துறவறவியலில் 'துறவு' அதிகாரத்தில் 'பற்றுக பற்றற்றான் பற்றினை' என்ற குறளில் 'பற்றற்றான்' எனும் தொடர் கடவுளைத் தவிர வேறு யாரையும் குறித்தற்கில்லை. அரசனை 'இறை' என்றும், 'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்' என்றும் வருவன எல்லாம் கடவுளைப் பற்றிய குறிப்புகளாகும்.

கடவுள் வாழ்த்தைத் திருவள்ளுவர், பிறர் போலப் பெயர் கூறாமல், கடவுளைப் பற்றி மக்கட்குத் தாம் என்ன கூற விரும்பினாரோ அவற்றைக் கூறும் அதிகாரமாகவே அமைத்துள்ளார். முதற்குறளில் தக்கதோர் உவமையால் கடவுள் உண்டு என்பதை நிறுவினார். அடுத்த குறளில்

கடவுளது திருவடிகளை வணங்குதல் கல்வியறிவு உடைய மக்களுக்கு இன்றியமையாக்கடன் என்றார். அதனை அடுத்து, கடவுளை வணங்குபவர் "மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்" எனக் குறித்தருளினார். அடுத்து கடவுளின் திருவடிகளைச் சிந்திப்பவர்கள் எவ்விதத் துன்பங்களாலும் துளங்கார் என்பதை உணர்த்தினார். ஐந்தாவதாக, இறைவனை வாழ்த்துவோர்க்கு நல்வினை, தீவினையாகிய இரு வினையும் சேரா என வீடு பேறு கிடைத்தலைக் குறிப்பித்தார். அதனை அடுத்துவரும் ஆறுவது திருக்குறளே இன்றைய நம் சிந்தனைக் குரியது.

கடவுள் வாழ்த்தில் ஒவ்வொரு குறளிலும் திருவள்ளுவர் மூன்று செய்திகளைக் குறித்தலைக் காணலாம். ஒன்று கடவுளின் இலக்கணம், இரண்டாவது கடவுளை நாம் அணுக வேண்டிய அதாவது வழிபட வேண்டிய முறை. மூன்றுவது கடவுளை வணங்குவதால் உயிர்கள் எய்தும் பயன் என இவை, இவற்றுள் கடவுள் இலக்கணத்தைத் தனியாகக் கூறுமல். கடவுளைக் குறிக்கக்கூறும் பெயரிலேயே அதனை அமைத்து விடுகின்றார் வள்ளுவர். "ஆதிபகவன்", "வாலறிவன்" முதலியவற்றைக் காணலாம். அம்முறையில் இக்குறளிலும் கடவுளைப் "பொறிவாயில்" என்னும் பெயரால் குறிக்கின்றார். இறைவன் ஐம்பொறிகளை வழியாகக்கொண்டு ஐம்புலன்கள் மேற் செல்கின்ற அவாவை அடக்கினவன் என்பது அதன் பொருள். பொறிகளாவன மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. புலன்களாவன சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. உயிர், மெய்—வாய் முதலிய பொறிகள் வழியாகச் சென்று சுவை, ஒளி முதலிய புலன்களைப் பற்றுகின்றன. இதனால் இறைவனுக்கும் ஐம்புல அவா உண்டோ என நாம் நினைத்தல் கூடாது. "பற்றுக பற்றற்றான் பற்றினை" என்னும் இடத்தில் இதற்கு உரிய விளக்கத்தை உரைகாரர் பரிமேலழகர் தருகின்றார். எல்லாப்பொருளையும் பற்றி நின்றே பற்றற்று நிற்பவன் என்பதே அதன் பொருள் என்கிறார். எனவே, இறைவன் எல்லாப் பொருள்களிலும்

நிறைந்திருப்பினும், அவற்றின் தன்மையைத் தான்அடையாதவனாகத் தாமரையிலைத் தண்ணீர் போல் இருக்கின்றான் என்பதே அதன் விளக்கம். இங்கும் அத்தகைய விளக்கத்தையே கொள்ளுதல் வேண்டும். இதனால் ஐம்புலப் பொருள்களை இறைவன் அறிபவனாயினும் அனுபவிப்பவன் அல்லன் என் து விளங்கும்.

"நேரிழையைக் கலந்து நின்றே புலன்கள் ஐந்தும் வென்றானை"என அப்பர் பெருமானும்,

"மங்கையோடிருந்தே யோகு செய்வானை" எனத் திருவிசைப்பா ஆசிரியரும் இதனைக் குறித்தனர்.

அப்படிபட்ட இறைவனாலேயே வேத ஆகமங்களின் வழியாக உலக உயிர்களுக்குப் பொய்யற்ற மெய்யான ஒழுக்க நெறி கூறப்பட்டது. அந்த நெறியில் உயிர்கள் பிழையாது நிற்றல் வேண்டும் என்கிறார் திருவள்ளுவர். அவ்வாறு ஒழுக்க நெறியில் பிழையாது நின்றவர்களே, என்றும் ஒரு பெற்றியாய் நிலைத்து நிற்கும் இன்ப வாழ்வாகிய வீடு பேற்றினைப் பெறுவர். எனவே எல்லாப் பொருள்களோடும் கூடியிருந்தும் யாதொன்றையும் அனுபவியாமை இறை இலக்கணம் என்பதை முதலில் உணர்த்துகின்றார். இரண்டாவதாக அவன் வகுத்த ஒழுக்க நெறியில் தவறாது நிற்றலே இறைவனை அடையும் முறைகளுள் மேலானது என்று குறிப்பிடுகின்றார். மூன்றாவதாக, இம்மேலான முறையே வீடுபேறாகிய மிகச் சிறந்த பயனைத் தருமென்று வலியுறுத்துகின்றார். இனி இக்குறளை நினைவு கூர்வோம்.

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

நன்றி : ஞானசம்பந்தம்
10-2-81

ஸ்ரீலஸ்ரீ குருமஹாசந்நிதானம் அவர்கள்

"தனக்கு உவமை இல்லாதான்'' என்ற குறள் பற்றி வழங்கிய

## அருளுரை

*9-9-1980*

**"நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்
முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த-நூன்முறையை
வந்திக்க சென்னி; வாய் வாழ்த்துக; நன்னெஞ்சம்
சிந்திக்க; கேட்க செவி.''**

தெய்வப் புலமைத் திருவள்ளுவர் தாம் கூறும் ஒவ்வொரு பொருளையும் உடன் பாட்டிலும் எதிர் மறையினும் வலியுறுத்திக் கூறும் இயல்புடையவர். கல்வி கற்றால் வாழ்வில் உயரலாம் என்பது உடன்பாடு. கல்லா விட்டால் உயர முடியாது என்று எச்சரிப்பது எதிர்மறை. 'கடவுள் வாழ்த்து' அதிகாரத்தில் மூன்று, நான்கு, ஐந்து, ஆறு ஆகிய நான்கு குறட்பாக்களும் இறைவனைவணங்குவதால் உயிர்கள் எய்தும் நன்மைகளைக் குறிக்கின்றன. இதனுள் மூன்றாம் குறட்பாவாகிய 'மலர்மிசை ஏகினான்' என்ற பாடலால் இவ்வுலகில் நீடு வாழ்தலையும், ஆறாம் பாடலாகிய 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்பதனால் வீட்டுலகில் நீடு வாழ்தலையும் ஆகிய இன்ப ஆக்கத்தை உடன்பாட்டால் வள்ளுவர் குறிக்கின்றார். இடை நின்ற நான்காம் பாடலாகிய 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்ற குறட்பாவால் 'யாண்டும் இடும்பை இல' என்றும், ஐந்தாம் பாடலால் "இருள் சேர் இருவினையும் சேரா'' எனவும் எதிர்மறை முகத்தான் துன்ப நீக்கம் கூறியிருக்கின்றார். இன்று நாம் சிந்திக்க இருக்கின்ற குறளிலும் எதிர் மறையிலேயே ஒரு கருத்தைக் குறிப்பிடுகின்றார்.

**"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது''.**

*சிவ — 3*

இங்கு இறைவற்கு, 'தனக்கு உவமை இல்லாதான்' என்ற ஒரு பெயரைத் தருகின்றார். இதிலும் இறைவனது தலையாய ஒரு தன்மை விளங்கின்றது. இங்கு உவமை என்பதற்குப் பொருள் 'ஒப்பு' என்பதேயாகும். இறைவனுக்கு ஒப்பாக இரண்டாவது ஒரு பொருளில்லை என்பதைக் கூறுமுகத்தால் இறைவன் ஒருவனே அன்றிப் பலரில்லை என்பதை இதனால் விளக்குகிறார். இறைவன் ஒருவனே ஆதல் பற்றி அவனை உபநிடதங்கள் 'ஏகன்' எனக் குறிக்கும். தமிழில் இது 'ஒருவன்' என்று சொல்லப்படும். மாணிக்கவாசகர் இறைவனை 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' எனகிறார்.

எனவே உயிர்கள் அவனது திருவடியை அடைந்து பயனுறும் என்பதைத் 'தாள் சேர்ந்தார்' என்றதனால் குறிக்கின்றார். திருவடி என்பது இறைவனது ஞானமாகிய அறிவையும் கிரியையாகிய செயலையும் குறிக்கும். நிறை ஞானத்தையும் அதனால் விளையும் செயலாற்றலையும் திருவடியைப் பற்றுவதன் மூலம் பெறமுடியும் என்பது குறிப்பு. இவ்விடத்தில் அவர் கூறும் பயன் 'மனக்கவலையை மாற்றிக் கொள்ளுதலேயாகும்'. மனத்துன்பமே மனக்கவலை எனப் படும். உடலில் வருகின்ற ஊறுகளைத் துன்பம் என்கின்றோம். மனத்தில் வரும் துன்பங்களைக் கவலை எனக் குறிக்கின்றோம். உலகில் மனக்கவலை இல்லாதவரே இல்லை எனலாம். கூழுக்கு உப்பில்லை என்பார்க்கும் பாலுக்கு சர்க்கரை இல்லை என்பவர்க்கும் உண்டாகின்ற கவலை ஒன்றே எனப் பழம்பாடல் ஒன்று கூறும். அப்பாடல்;

"பாலுக்குச் சர்க்கரை யில்லைஎன் பார்க்கும் பருக்கையற்ற
கூழுக்குப் போடஉப் பில்லையென் பார்க்குமுட் குத்திதைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென் பார்க்கும் கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென் பார்க்கும் விசனமொன்றே"

அதனால் கவலை என்பது அவரவர்கள் தரத்துக்குத் தக்கவாறு இருக்கவே செய்கின்றது. யாவரிடத்தும் உள்ளதாகிய இக் கவலையை நீக்கிக் கொள்ள முயலாதவர் ஒருவரும் இல்லை. கவலையை விரைவில் நீக்க வேண்டும். முற்றிலும் நீக்கிக்

கொள்ளவேண்டும் என்று கருதி அதன் பொருட்டு மக்கள் மேற்கொள்ளும் முயற்சிகள் பலப்பல. ஆனால் அம்முயற்சிகள் யாவும் அவர்கள் கருதிய பயனைத் தருகின்றனவா என்பது ஐயப்பாடே.

இறைவனுடைய திருவடியைப் பற்றுக் கோடாகக் கொண்டவர்கள் கவலையற்றிருக்கின்றார்கள் என்பதை ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்கள், வானம் துளங்கினும், மண் கம்பமாகினும் மால் வரையும் தானம் துளங்கித் தலைதடுமாறினும், தண்கடலும் மீனம் படினும், விரிசுடர் வீழினும் கவலையற்றிருப்பார்கள் என வரும் அப்பர் திருமொழி போன்றவற்றால் அறியலாம். எல்லாம் இறை செயலே என்று உரைக்கின்ற தெளிவான உணர்வுடையவர்கள் உள்ளத்தைத் துன்பங்கள் வந்து பற்றுதல் இல்லை. இதனால் மனக்கவலையை நீக்கிக் கொள்ளுதற்கு-நீங்குவதற்கு இறைவன் திருவடிகளைப் பற்றுவதைத் தவிர வேறு வழி இல்லை. இதுபற்றித் தான் திருவள்ளுவர் 'தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு மனக்கவலை மாற்றலாம்' என உடன்பாட்டில் கூறாமல், தாள் சேர்ந்தார்க்கு அல்லால் மனக்கவலை மாற்றல் அரிது என எதிர் மறையில் வைத்து வலியுறுத்திக் கூறினார். இதனையே நமது ஆதினக்குரு முதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தரும் தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதப் பெருமானைக் குறிப்பிடும் போது ''மனக்கவலை நீக்குகின்ற தென்மதுரை நின்மலன்'' என்கின்றார்.

''உனக்குப் பணிசெய்ய உன்தன்னை எந்நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா — மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா''.

எனவரும் இப்பாடலில் 'உனக்குப் பணி செய்ய' என்பதால் உடலால் செய்யும் பணியினையும் 'எந்நாளும் நினைக்க'

என்பதால் மனத்தால் நினைத்தலையும் குறிப்பிட்டருளு கின்றார். 'உனக்குப் பணி செய்ய' என்னும் தொடரில் வாக்கால் துதித்து வழிபாடாற்றும் பணியினையும் இனம் கருதி அடக்கிக் கொண்டு மனம் வாக்கு காயம் எனும் மூன்றினாலும் இறைவனுக்குப் பணி செய்வதே மனக்கவலை நீக்க வழியாகும் என்று இப்பாட்டிற்கு பொருள் காண்பது பொருத்தமுடையதாகும்.

எனவே அனைவரும் திருவள்ளுவர் காட்டிய இக்குறள் நெறியில் இறைவனது திருத்தாள் பற்றி மனக்கவலை நீங்கி மகிழ்வுடன் வாழ்வார்களாக!

—நன்றி : ஞானசம்பந்தம், *10-3-81*

# காளிதாஸ மஹாகவியின் சிவபக்தி

பாஷ்யபாவக்ஞ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்

கவிஞர்குல திலகம் என்றும், கவிச்சக்கரவர்த்தி என்றும், கவிசார்வபௌமன் என்றும் பலவாருக யாவராலும் போற்றப்பெற்ற காளிதாஸ மஹாகவி கவிஞனுக மட்டும் இவ்வுலகில் திகழவில்லை. பெரிய தத்துவ ஞானியாக வும் திகழ்ந்திருந்தார் என்பது அவரது நூல்களை நன்கு ஆராய்ந்து அறிந்தவர்களுக்கு தெளிவாகத் தெரியும். உண்மைப் பொருளான ஒரே வஸ்துதான் பிரம்மா எனவும், விஷ்ணு எனவும், மஹேசன் எனவும் மூன்று வகையான தோற்றங்களில் உள்ளது என்று கூறியிருப்பினும், மஹேச் வரனது மூர்த்தியிலேயே இந்த மஹாகவியின் மனது எப் பொழுதும் ஈடுபாடு உடையதாக இருந்திருக்கிறது என்ப தும் அவரது நூல்களை அடிமுடிகளில் காணப்படும் பல செய்யுட்களைக் கொண்டு ஆயுமிடத்து அறியப்படுகின்றது. அவற்றில் ஒன்றிரண்டு செய்யுட்களை ஆய்வதே இக்கட்டுரை யின் நோக்கமாகும்.

அபிக்ஞான சாகுந்தலம் என்னும் அவரது நூலின் தொடக்கத்தில் காணப்படும் ஒரு செய்யுளின் கருத்தைச் சற்று விளக்கும் வகையால் அவரது மஹேச பக்தியை நன்கு எடுத்துக்காட்ட முடியும் என்று நம்புகிறோம்.

யா ஸ்ருஷ்டி: ஸ்ரஷ்டுராத்யா வஹதி விதிஹுதம்
யா ஹவிர்யா ச ஹோத்ரீ
யே த்வே காலம் விதத்த: ச்ருதிவிஷயகுணா
யா ஸ்திதா வ்யாப்யவிச்வம் |

யாமாஹு: ஸர்வபூதப்ரக்ருதிரிதி
யயா ப்ராணிந: ப்ராணவந்த:
ப்ரத்யக்ஷாபி: ப்ரபன்னஸ்தனுபிரவது
வஸ்தாபிரஷ்டாபிரீச: ॥

ஈச வோ(அ)வது — மஹேசன் உங்கள் யாவரையும் காப்பாற்றட்டும். எத்தகைய மஹேசன் எனில், அஷ்டாபிஸ் தனுபி: ப்ரபன்ன: –எட்டு வகையான தோற்றங்களில் உள்ள மஹேசன், எத்தகைய தோற்றங்கள் எனில் ப்ரத்யக்ஷாபி:— புலன்களால் நன்கு அறியத்தக்க வகையில் உள்ள தோற்றங்கள். எட்டு வகையான தோற்றங்கள் யாவை எனில் (1) யா ஸ்ரஷ்டு: ஆத்யா ஸ்ருஷ்டி: –எது ஒன்று பரமனின் படைப்பில் முதலாவது படைப்போ அது. அதாவது ஜலம் இதுவே பரமனின் படைப்பில் முதலாவதாகக் கூறப்பட்டு உள்ளது. அப ஏவ ஸஸர்ஜாதௌ என்பது மநு வசனம் (2) எது ஒன்று விதிமுறைப்படி தேவர்களைக் குறித்து ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸ்ஸை தேவர்களின் பொருட்டு எடுத்துச் செல்கிறதோ அது, அதாவது அக்னி; அக்னிமுகாவை தேவா: என்பது வேதவசனம். (3) எது ஒன்று தேவர்களின் பொருட்டு விதிமுறைப்படி ஹவிஸ்ஸை ஹோமம் செய்கின்றதோ அது. அதாவது யஜமானன். (4, 5) யே த்வே காலம் விதத்த: — எவை இரண்டு, திதி வாரம் என்றும் இரவு பகல் என்றும் காலத்தைப் பிரித்துக் கொடுக்கின்றனவோ அவை. அதாவது சூரியனும், சந்திரனும்; சூரியனைக் கொண்டு வாரமும் பகலும், சந்திரனைக் கொண்டு திதியும் இரவும் அறியப்படுகின்றன. (6) ச்ருதிவிஷயகுண யாஸ்திதாவ்யாப்ய விச்வம்—எது ஒன்று காதுகளால் அறியப்படும் சப்தத்தைத் தனது தனிக் குணமாகக் கொண்டு உலகத்தையே சூழ்ந்து நிற்கின்றதோ அது, அதாவது ஆகாயம். சப்த குணகமாகாசம் என்பது ஆன்றோர் வாக்கு. ஆகசவத்ஸர்வகத: என்பது வேத வசனம். ஆகாயம் மானஸப்ரத்யக்ஷ விஷயம் என வேதாந்திகள் கூறுவர். (7) யாமாஹு: ஸர்வ பூதப்ரக்ருதிம் எது ஒன்றை எல்லா ஜீவராசிகளின் தோற்றத்

திற்கும் மூல காரணமெனக் கூறுகின்றார்களோ அது, அதாவது. பூமி ப்ருதிவ்யா ஒஷதய: ஒஷதிப்யோ (அ)ன்னம் அன்னுத் புருஷ: அந்நாத்வை ப்ரஜா: ப்ரஜாயந்தே என்பவை உபநிஷத் வசனங்கள். (8) யயா ப்ராணின: ப்ராணவந்த:— எது ஒன்றால் உயிரினங்கள் உயிரினங்களாகின்றனவோ அது. அதாவது வாயு. நமஸ்தே வாயோ த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரம்மாஸி என்பது உபநிஷத் வசனம். இவையே எட்டு வகையான தோற்றங்கள். இவை மட்டும் மஹேசனின் தோற்றங்கள் என்பது இவ்விடத்தில் கருத்தல்ல. இவை யாவும் எந்த உலகத்தினுட்பட்டவையோ அந்த உலகம் முழுவதுமே மஹேசனின் தோற்றமே அன்றி வேறில்லை என்பதே கருத்தாகும். ஸர்வம் கலு இதம் ப்ரம்ம என்பது உபநிஷத் வசனம். இவ்வாறு மஹேசனிடம் தனக்குள்ள ஈடுபாட்டை மஹாகவி இங்கு வெளியிட்டிருக்கிறார். இவ்வாறே வேறு பல இடங்களிலும் பல முறையில் இதை வெளிப்படுத்தியிருக்கிறார். மற்றும்,

பூரம்பாம்ஸ்யனலோடனிலோம்பர மஹர்நாதோ ஹிமாம்சு:
புமான்
இத்யாபாதி சராசராத்மகமிதம் யஸ்யைவ
மூர்த்யஷ்டகம் |
நான்யத்கிஞ்சன வித்யதே விம்ருசதாம் யஸ்மாத்
பரஸ்மாத்விபோ:
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நமஇதம் ஸ்ரீதக்ஷிண
மூர்த்தயே ||

என்னும் கீழ்க் கூறிய கருத்தே செறிந்து விளங்கும் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் அவர்களின் செய்யுளே மஹா கவியின் செய்யுள் ஞாபகப்படுத்திக் கொண்டு வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

ஒருவர் தத்துவ ஞானியானாலும், சமதர்சனம் கொண்டவர் ஆனாலும், குறிப்பிட்ட ஒரு மூர்த்தியில் அவரது மனத்திற்கு இயற்கையான ஈடுபாடு உண்டு என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன.

மஹேச்வரே வா ஜகதாமதீச்வரே
ஜனார்த்தனே வா ஜகதந்தராத்மனி |
ந காபி பேதப்ரதிபத்திரஸ்தி மே
ததாபி பக்திஸ்தருணேந்து சேகரே ||

என்பது ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் வாக்கு.

மஹாகவியின் விக்ரமோர்வசியம் என்ற நூலில் உள்ள ஒரு ஸ்லோகத்தையும் காண்போம்.

வேதாந்தேஷு யமாஹுரேக புருஷம் வ்யாப்ய ஸ்திதம் ரோதஸீ
யஸ்மின்னீச்வர இத்யநன்ய விஷய: சப்தோ யதார்தாக்ஷர: |
அந்தர்யச்ச முமுக்ஷுபிர்நியமித ப்ராணாதிபிர்ம்ருக்யதே
ஸ ஸ்தாணு: ஸ்திரபக்தியோகஸுலபோ நி:ச்ரேய: ஸாயாஸ்து வ: ||

ஸ ஸ்தாணு: அந்த மஹேசன் வ:நி:ச்ரேயஸாயா அஸ்து உங்களுக்கு மோக்ஷ பர்யந்தமான பலன்களைக்கொடுக்கட்டும் எங்கும் நிறைந்த பொருளானதால் அசைவற்ற நிலையிலேயே நிலைத்திருப்பதால் மஹேசனுக்கு ஸ்தாணு என்ற பெயர் உரியதாயிற்று. கிளைகள் அற்று மொட்டையாய் இருக்கும் மரத்திற்கும் ஸ்தாணு என்று வடமொழியில் ஒரு பெயர் உண்டு. கிளை இலைகளுடன் மரம் கூடியிருப்பின் காற்றடிக்கும் நேரத்தில் அது அசைய இடமுண்டு. அவைகள் இல்லாததால் காற்றடித்தாலும் அது அசையாது. ஆகவே அசையாப் பொருளுக்கு அதை உதாரணமாகக் கூறுவது மரபு. அதுபோல் மஹேசன் அசையா நிலையிலிருப்பதால் ஸ்தாணு என்று சொல்லப்படுகிறார் என்றும் கூறுவதுண்டு. "வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டதி" என்கிறது வேதம். "ஸஏவ ஜகதாம் நாத: ஸ து ஸம்ஸார மோசக:" என்னும் வசனம் அவரே மோக்ஷத்தை கொடுக்கவல்லவர் என்பதைத் தெரிவிக்கிறது. எந்த மஹேசன் எனில் வேதாந்தேஷு யமாஹுரேகபுருஷம் அதர்வசிகை, ச்வேதாச்வதரம் முதலிய

உபநிஷத்துக்கள் எந்த மஹேசனைத்தான் 'ஒருவர்' என்றும் 'புருஷன்' என்றும் கூறுகின்றனவோ அந்த மஹேசன். ஒன்றேயான உண்மைப் பொருளானதால் 'ஏகம்' என்றும் பூர்ணராய் இருப்பதாலும் பூ: எனப்படும் ஸர்வ ஜீவராசி களின் சரீரங்களுள் ப்ரகாசித்துக் கொண்டிருப்பதாலும் 'புருஷம்' என்றும் மஹேசனே கூறப்படுகிறார். 'ஏக ஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே' 'தேநேதம் பூர்ணம் புருஷேண ஸர்வம்' என்பன போன்றவை வேதவசனங்கள். 'புருஷோ நாம ஸம்பூர்ண: சிவ:' 'ஸாம்பமூர்த்திதரோ நான்ய: விஷ்ணுரஜோऽபிச' என்கிறது புராணம். மேலும் வ்யாப்ய ஸ்திதம் ரோதஸீ-பூமி அந்தரிக்ஷம். அதாவது உலகம் முழுமையும் வ்யாபித்து நிற்கும் தன்மையுள்ள மஹேசன் 'தஸ்மாத் ஸர்வ கத: சிவ:' | யோ ருத்ரோ விஸ்வா புவநா விவேச தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' என்று உபநிஷத் துக்கள் கூறுகின்றன. மேலும் யஸ்மின் ஈச்வர இதி சப்த அனன்ய விஷய: யதார்த்தாக்ஷர:—எந்த மஹேசனிடத்தில் மற்றவர்களிடத்தில் பொருந்தாத ஈச்வர: என்னும் சப்த மானது மிகப் பொருத்தமான பெயராக அமைந்துள்ளதோ அந்த மஹேசன். 'ஈச்வர: ஸர்வபூதாநாம்' 'ஈச்வராணாம் பரமம் மஹேச்வரம்' என்பன போன்ற உபநிடத வாக்கியங் களும், 'சப்தாதேவ ப்ரமித:' என்ற பிரம்மசூத்ரமும் இக் கருத்தையே வலியுறுத்துகின்றன. மஹாகவி காளிதாஸரும் இக்கருத்தை மேலும் தெளிவாக ஐயப்பாட்டிற்கே இட மின்றிப் பின்வருமாறு கூறுகிறார்.

அணிமாதி குணோபேதமஸ்ப்ருஷ்ட புருஷாந்தரம் |
சப்தமீச்வர இத்யுச்சை: ஸார்த்த சந்த்ரம் பிபர்தி ய: ||

மேலும் நியமிதப்ராணாதிபிர்முமுக்ஷுபி: ய: அந்தர் ம்ருக்யதே —மோக்ஷத்தை விரும்பி ப்ராணன், ஐம்புலன்கள், மனம் முதலியவற்றை வெளி விஷயங்களில் விடாமல் தடுத்து ஹ்ருதயத்துக்குள் எவரைக் காணவேண்டி முனிவர்கள் தேடு கிறார்களோ அந்த மஹேசன்; 'யோ வேத நிஹிதம் குஹா

யாம் ஸோऽச்நுதே ஸர்வான் காமான் ஸஹ' என்று கூறுகிறது ஆனந்தவல்லீ. 'ஸர்வ பூதேஷு கூடம் | ஈசம் தம் ஞாத்வாம்ருதா பவந்தி | ' என ச்வேதாச்வதரம் கூறுகிறது. 'ஹ்ருதயாம்போஜ மத்யே உமாஸஹாயோ ந்ருத்யதி | தம் த்ருஷ்ட்வா மனுஜ: ஸர்வோ விமுக்தோ பவதி' எனப் புராணங்கள் கூறுகின்றன. இதுவே இச்செய்யுளின் பொருளாகும்.

காளிதாச மஹாகவியின் மாளவிகாக்னிமித்ரம் என்ற நாடக நூலின் முதற்கண் காணப்படும் ஸ்லோகத்தையும் கீழே காண்க.

ஏகைச்வர்யே ஸ்திதோऽபி ப்ரணத பஹுபலே ய :ஸ்வயம்
க்ருத்திவாஸா:
காந்தா ஸம்மிச்ரதேஹோऽப்ய விஷயமனஸாம்
ய: பரஸ்தாத்யதீனும் |
அஷ்டாபிர்யஸ்ய க்ருத்ஸ்னம் ஜகதபி தனுபிர்பிப்ரதோ
நாபிமான:
ஸன்மார்க்காலோகனுய வ்யபநயது ஸ வஸ்தாமஸீம்
வ்ருத்திமீச: ||

ஸஈச:-அந்த மஹேசன், வ:உங்களுடைய தாமஸீம் வ்ருத்திம் உண்மையை மறைக்கும் தன்மையைத் தனதாகக் கொண்ட முக்குணத்தில் ஒன்ருன தமோகுணத்திஞல் தோற்றுவிக்கப்படும் மனேவ்ருத்தியை அதாவது அறியாமையை, வ்யபநயது-முழுமையாகப் போக்கட்டும்; எதற்காகவெனில், ஸன்மார்காலோகநாய— இது நல்வழி, இது தீயவழி என்ற நல்லறிவைப் பெறுவதற்காக எந்த மஹேசன் எனில், ப்ரணதபஹுபலே ஏகைச்வர்யே ஸ்திதோऽபி தன்னே வணங்கும் யாவருக்கும் அவரவர் விரும்பும் பயன்களைத் தேவைக்கு அதிகமாகவே அவர்களுக்கு வழங்கவல்ல பெருஞ்செல்வம் படைத்தவராயிருந்தும், ஸ்வயம் க்ருத்திவாஸா: தோலை மட்டுமே தனது ஆடையாகக் கொண்டிருக்கும் மஹேசன், மற்றும் காந்தாஸம்மிச்ரதேஹோऽபி-தனது தேஹத்திலேயே கலந்து நிற்கும் பெண்ணுருவைக் கொண்டிருப்பினும் அதாவது தோற்றத்தில் அர்த்தநாரீச்வரராயிருந்தும், அவிஷய

மனஸாம் யதீனும்பரஸ்தாத்—விஷயங்களில் அறவே பற்றற்ற மனதைக்கொண்ட துறவிகளுள் முதன்மையாக விளங்கும் மஹேசன், மற்றும் முன் செய்யுளில் விளக்கப்பட்ட அஷ்டா பிஸ்தனுபி:— எட்டுவகையான சரீரங்களாலும், க்ருத்ஸ்னம் ஜகத்— எல்லா உலகங்களேயும், பிப்ரதோபி— தாங்கிநின்று காப்பாற்றும் நிலேயில் தானிருந்தபோதிலும், யஸ்ய— எந்த மஹேசனுக்கு, நாபிமான:— அத்தகைய நிலேயில் ஏற்படும் ஆணவம் சிறிதளவும் கிடையாதோ அந்த மஹேசன் என்பதே இச்செய்யுளின் பொருளாகும்.

**வேதா த்வேதா ப்ரமம் சக்ரே காந்தாஸு கனகேஷு ச |**
**தாஸு தேப்வப்யநாசக்த: ஸாக்ஷாத் பர்க்கோநராக்ருதி: ||**

என்ற ஒரு செய்யுள் இவ்விடத்தில் எனக்கு நினைவுக்கு வருகிறது. உலகத்தைத் தோற்றுவித்த பிரமன் பெண்ணுசை பொன்னுசை என்ற இரண்டையும் மக்களின் முன்னேற்றத்துக்குத் தடையாக ஏற்படுத்தியுள்ளார். அதாவது இவ்விரண்டு விஷயங்களிலும் பற்றுள்ளவன் இவ்வுலகபந்தத்திலிருந்து மீளவே முடியாது. அப்படியொருவன் இவ்விரண்டிலும் அறவே பற்றற்றவனுய் ஆகிவிடுவானேயாஞல் அவன் மனிதனுக இருக்க முடியாது. மனித உருவத்தில் தோன்றிய மஹேசனே ஆவான் என்பது இச்செய்யுளின் பொருளாகும். முன்செய்யுளின் முதலடியில் மஹேசனுக்குப் பொருளாசையில்லே என்பதும், இரண்டாமடியில் பெண்ணுசையில்லே என்பதும், சுட்டிக்காட்டப்பட்டு உள்ளது குறிப்பிடத்தக்கது. 'நிர்மமோ நிரஹங்கார;' என்றும் பெருமையாகக் கூறுவார்கள். மூன்ருமடியில் இக்கருத்தும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது கவனத்திற்குரியது.

மஹாகவி காளிதாஸரின் சிவபக்தி மேம்பாட்டையும், அவர் சிவபெருமானேப் போற்றியுள்ள முறைமையையும் ஓரளவு கண்டோம். சமயம் வாய்க்கும் போது மேலும் மஹா கவியின் சிவபக்திச் சிறப்பினே விளக்குவோம்.

சிவம்

# அஷ்டாங்க நமஸ்காரம்

ஸாஹித்ய சிரோமணி ஸ்ரீ எஸ். வி. பரமேச்வரன்

பிறவியில் மனிதப் பிறவியே உயர்ந்த பிறவி. அதிலும் உயர்ந்த உள்ளம் படைத்த, விவேகம் படைத்த பக்தி மானுகப் பிறவி கிடைப்பது என்பது சாதாரணமல்ல. புண்ய கர்மாவே தான் இதற்கு காரணம். மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவனும் ஆண்டவனை வணங்க வேண்டும். ஆண்டவன் இருக்குமிடம் ஆலயம். ஆண்டவன் எங்கும் எல்லா இடத்தும் நிறைந்திருக்கிருன் என்பதெல்லாம் உண்மையாகவே இருந்தாலும் அதை புரிந்து கொண்டு ஆண்டவனை வணங்க, வழிபட சாதாரண ஒரு மனிதனுல் முடியாதே என்று எண்ணித்தான் மகான் ஆதி சங்கரர் தன் உயர்ந்த அத்வைத நிலையில் இருந்து இறங்கி வந்து பல ஸ்தோத்திர க்ரந்தங்களை உலகுக்கு அருளினுர். நாடெங்கும் சுற்றி பல கோயில்களுக்குச் சென்று வணங்கி நம்மையும் அது போல் செய்யும்படி சொல்லாமல் செய்து காட்டிச் சென்றிருக்கிருர். பக்திக்கிரங்காத தெய்வங்கள் இல்லை. நீ எப்படி பக்தி செய்தாலும் நான் அதை ஏற்றுக்கொள் கிறேன் என்கிருர் பகவான்.

உலகில் தோன்றியிருக்கின்ற எல்லா மதங்களிலும் வணங்கும் முறை ஒன்று இருக்கிறது. நமதுஸநாதன தர்மத் தில் வணங்கும் முறையை நமஸ்காரம் செய்வது என்று கூறு கிருேம். கோயிலுக்குச் சென்று பிரதக்ஷிணம் செய்கிருேம். நமஸ்காரம் செய்கிருேம். நமஸ்கரிக்கும்பொழுது எப்படி நமஸ்காரம் செய்ய வேண்டும்என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும். குப்புற விழுந்து கும்பிடுவது என்பது ஒரு பக்தனைப் பொறுத்தவரை, அவனுக்குத் தெரிந்த அளவில்

அது சரியாக இருக்கலாம். ஆனால் நமஸ்காரம் செய்யும் பொழுது நமது எட்டு அங்கங்களுக்கும் வேலை இருக்கிறது. அந்த எட்டு அங்கங்கள் யாவை என்பதை எடுத்துச் சொல்லுவதே இந்த கட்டுரையின் நோக்கம்.

இரு பாதங்களும், கரங்களும், முழங்கால்களும், சிரஸும் (தலை), உரஸும் (மார்பு) தரையில் சீராகப் பதிந்திருத்தல் வேண்டும். மனத்தில் பகவானின் உருவத்தையும் நாவில் அவன் நாமத்தையும் வைத்து அகக்கண்களால் அவனை பார்த்துக்கொண்டு கவிழ்ந்து படுத்திருத்தல் அஷ்டாங்க நமஸ்காரம் என சிவாகமம் சொல்கிறது.

**பத்ப்யாம் கராப்யாம் த்ருஷ்டிப்யாம் ஜானுப்யாம் சிரஸோரஸா |**
**மனஸா வசஸா சைவ ப்ரணமோஷ்டாங்க உச்யதே ||**

இதில் குறிப்பிட்டபடியே அஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். இதுவே ஆலயங்களில் ஆண்டவன் ஸன்னிதியில் நமஸ்காரம் செய்ய வேண்டிய முறை. இப்படி சீராக நமஸ்காரம் செய்யும் பொழுது ஈச்வர சன்னிதியில் படிந்திருக்கின்ற பக்தகோடிகளின் பாததூளி (தூசி) நமது உடலில் பதியும்படியாகவும் செய்யவேண்டும். உடலில் பற்றி இருக்கின்ற தூசி எண்ணிக்கையில் எத்தனையோ, அத்தனை ஆயிரம் ஆண்டுகள் அவன் சிவலோகத்தில் மகிமை பெறுவான் என்று கூறுகிறது சிவாகமம்.

**ரேணு குண்டித காத்ரஸ்ய ரேணு ஸங்க்யா து யாவதீ |**
**தாவத் வர்ஷ ஸஹஸ்ராணி சிவலோகே மஹீயதே ||**

இதில் இருந்து நமக்கு ஒன்று புலனாகிறது. கோயில்களில் சென்று நமஸ்காரம் செய்யும் பொழுது நாம் சட்டை போடக் கூடாது. வேட்டியோ, பஞ்சகச்சமோ தரித்து உத்திரியத்தை இடுப்பில் சுற்றி நமஸ்காரம் செய்தால்தான் நமது உடலில் தூசிகள் படியும் வாய்ப்பு உள்ளது. தூசிகளின் எண்ணிக்கை நமக்கு முக்யம். எண்ணிக்கையின்

அடிப்படையில் தானே சிவலோக வாசம் சொல்லி இருக்கிறது? ஆகையால் இந்தக்காலத்து ஆத்திகர்கள் இதை நன்கு கவனிக்க வேண்டும். அந்தக் காலத்தில் சட்டை போட்டுக் கொண்டு கோயில்களுக்கு யாரும் செல்லக் கூடாது என்று சட்டம் கூட உண்டு. மேலே சொன்ன சுலோகத்தின் பொருளை உணர்ந்து தான் இந்த சட்டத்தை நமது முன்னோர்கள் கடைப்பிடித்தார்களோ என்று தோன்றுகிறது அல்லவா? தினம் ஆலயம் செல்ல வேண்டும், ஆண்டவனை நினைக்க வேண்டும், அவன் புகழ் பாடவேண்டும் என்று ஒருவருக்கு உள்ளத்தில் உண்மையாகவே எண்ணம் இருக்குமானால் அவரது இன்னல்கள் யாவும் தானாகவே விலகிவிடும். மனத்தில் அலாதியான தைரியமும் அமைதியும் ஏற்படும் என்பது ஸர்வநிச்சயம்.

சிவம்

உ

சிவமயம்

# சித்தாந்த சைவம்

சித்தாந்த ஆசிரியர்

த. சி ச. இராமச்சங்கு பாண்டியன்

20, தந்தி ஆபீஸ் சாலை

தூத்துக்குடி-1

**திருச்சிற்றம்பலம்**

**அல்லும் பகலுமாய் நின்றார் தாமே**
**அந்தியுஞ் சந்தியு மானார் தாமே**
**சொல்லும் பொருளெலா மானார் தாமே**
**தோத்திரமுஞ் சாத்திரமு மானார் தாமே**
**பல்லுரைக்கும் பாவெலா மானார் தாமே**
**பழனை பதியா வுடையார் தாமே**
**செல்லு நெறிகாட்ட வல்லார் தாமே**
**திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே.**

திருச்சிற்றம்பலம்

சற்காரிய வாதங்கொண்டு மூவித பிரமாணங்களானும் சித்திக்கும் பதி பசு பாசம் என்ற மூன்று பொருள்களும் அநாதியேயுள்ளன. இவற்றுள் பசு சுதந்திரம் இல்லாதன. பாசங்களோ சடம். பதி யொருவனே சுதந்திர ஞான முடையவன். எனவே முதலாவது பதிக்கும் இரண்டாவது பசுக்களுக்கும் மூன்றாவது பாசங்களுக்கும் பின்வருமாறு இலக்கணங் கூறப்படும்.

**பதியாவது** அருவம் உருவம் அல்லாததாய்க் குணமுங் குறியும் இல்லாததாய் நின்மலமாய் ஒன்ருய் நித்தமாய் அசல மாய் வியாபகமாய் உயிர்கட்கு அறிவாய் ஞானசொரூப மாய் அகண்டிதமாய் ஞானத்தாலன்றிக் கிட்டுதற்கரியதாய் ஞானத்தால் அடையப்படும் பேருய் விளங்குவது.

ஈண்டுக் குணமென்றது சத்துவ முதலிய முக்குணங்களை. எனவே ஆகமங்கள் எண்குணத்தோன் எனக் கூறு நிற்கும். எண்குணங்களாவன சுதந்தரத்துவம், விசுத்த தேகம், நிராமயான்மா, சர்வஞத்துவம், அநாதி போதம், அலுப்த சத்தி, அநந்த சத்தி, திருப்தி என்பனவாம். இவைமுறையே தன்வயத்தனுதல், தூய உடம்பினனுதல், இயற்கை உணர் வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங் கல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின் பமுடைமை என்று பெயர்த்துக் கூறப்படும்.

பதி என்பது காக்கின்றவன் என்னும் பொருளது. நெருப்புக்குச் சூடுபோல அவனைப் பிரிவற்றிருக்கும் சமவேத சத்தி. உயிர்கட்கு அனுக்கிரக மாத்திரங் குறித்துப் பொது வகையான் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய தடையிலா ஞானமொன்றே சிவசத்தியின் சொரூபம். அதுவே பரா சத்தி எனப்படும். அந்த ஞானம் உயிர்கட்கு மலபாகம் வரு தற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச் சிறப்பு வகையான் வியாபரிக்கும். அதன் ஒரு கூறு திரோதான சத்தி என நின்று இச்சாஞானக் கிரியை என முத்திறப்பட்டு வியாபரிக்கும்.

இவற்றுள் இச்சையாவது உயிர்கட்கு மலத்தை நீக்கிச் சிவத்தை யளித்தற்கண் உள்ளதாகிய கருணை. ஞானமாவது மலத்தை நீக்கிச் சிவத்தையளித்தற்குச் செய்யக் கடவன வாகிய உபாயங்களை யெல்லாம் அறியும் அறிவு, கிரியையா வது உபாயங்களை அவ்வாறே சங்கற்பித்துச் செய்யும் சங்கற் பம். திரோதானமாவது மலசத்திகளின் வழிநின்று அவற் றைப் பாகம் வரும்படி நடாத்துவதாகிய சங்கற்பம். திரோ

தான சத்தி மலசத்திகளாகிய மோக முதலியவற்றைத் தொழிற்படுத்துவதற்கு ஏதுவாகலின் மலமென்று உபசரித்துக் கூறப்படும்.

**பசுக்கள்** அருவம் உருவம் இல்லாதனவாய்ப் பலவாய் நித்தமாய்ச் சுதந்திரமில்லனவாய் அறிவிக்க அறிவனவாய் வியாபகமாய்ச் சார்ந்ததன் வண்ணமாய்த் திகழ்வனவாய் ஆணவ மலத்தாற்றடைப்பட்ட ஞான சொரூபமாய் விளங்குவன.

பசு என்பது பந்திக்கப்பட்டது என்னும் பொருளது. பசுக்கள் உத்தமரான விஞ்ஞானகலர், மத்திமரான பிரளயாகலர், அதமரான சகலர் என மூவகைப்படுவர். விஞ்ஞானகலர் முதல்வன் உண்ணின்றவாறே உணர்த்த வினையும் விஞ்ஞானத்தால் கலை நீங்கும் உரிமை உடையோர். பிரளயாகலர் எல்லாமொடுங்கும் பிரளய காலத்திலே முதல்வன் தானே குருவாய் முன்னின்றுணர்த்த கலை நீங்குமுரிமை உடையோர். சகலர் கலையோடு கூடியவர். கலை என்றது பந்தம் என்னும் பொருட்டு.

இது பற்றியே விஞ்ஞானகலர் ஆனவ மலத்தாற்றடைப்பட்ட ஞானக்கிரியை உடையவர்களாய், ஒருமலத்தராய் இருப்பவர் என்றும், பிரளயாகலர் ஞானக்கிரியைகளைத் தடுக்கும் ஆணவமலத்தையுடையவர்களாய்க் கன்ம பரிபாகத்தினுலே காலாதிகளைத் தங்கள் வசஞ் செய்து கொண்டு மோகத்துக்கு ஏதுவான கன்மத்தையும் உடையவர்களாய் இவ்வாறு ஆணவம் கன்மம் என இரு மலத்தவர்களாய் இருப்பவர்கள் என்றும் சகலர் ஞானக் கிரியைகளைத் தடுக்கும் ஆணவ மலத்தையும் அது சிறிது நீங்குதன் நிமித்தமாக மாயா காரியமாகிய காலாதிகளையும் போகத்தின் பொருட்டுக் கன்மமுமாகிய மும்மலத்தையும் உடையவர்களாய் இருப்பவர்கள் என்றும் கூறப்படும்.

**பாசம்** என்பது பந்திப்பது என்னும் பொருளது. அஃது ஆணவம் கன்மம் மாயை என மூன்ருகும்.

ஆணவமாவது ஞானதிரோதகமாய்த், திரவியமாய், அறியாமைக் குணத்ததாய்ச் செம்பிற் களிம்புபோல உயிரின் குற்றமாய், அநாதிபந்தமாய், ஒன்றேயாய், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் உயிர்ப்பாகுபாட்டிற்கு ஏது வாய், உயிர்கடோறும் தனித்தனி மறைந்து நின்று தத்தங் கால எல்லையில் நீங்குவனவாகிய சத்திகள் பல உடைத்தாய், உயிர்கள் மூன்றவத்தைகளும்படுதற்கு மூல காரணமாய், நித்தமாய், வியாபகமாய் இருப்பது.

வியாபக உயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின் ஆணவம் என்னும் பெயர்த்தாய்ப் பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவத்தை, ஆவிருதி என்றற்றொடக்கத்துக் காரணக் குறிகளும் உடைத்தாய் நிற்பது. படலம் படர்ந்த கண் ஞாயிற்றின் சந்நிதியினிற்பி னும் படலத்தான் அவ்வொளியை இழந்து இருளின் அழுந்து மாறு போல முதல்வன் சந்நிதியினிற்பினுஞ் சோபான முறையானே அறிவிக்க அறியுந்தன்மைத்தான உயிர் அநாதியே அறியமாட்டாமையான் அறிவை இழந்து அறியாமையின் அழுந்துதலின் அஃதவ்வுயிர்க்குப் பந்தமாம். மூலமலம் காரிய வேறுபாட்டான் மோகம், மதம், அராகம். கவலை தாபம் வாட்டம் விசித்திரம் என எழுவகைப்படும்.

மூன்றவத்தைகளாவன கேவலம் சகலம் சுத்தம் என்பன வாம். அவற்றுள் ஆன்மாத் தன்னிச்சாஞானக் கிரியை களின் நிகழ்ச்சி சிறிதுமின்றித் தன்மாத்திரையே யுளனுதல் கேவலம் எனப்படும். பின்பு தநு கரணுதிகளோடுங் கூடித் தன்னிச்சா ஞானக் கிரியைகள் ஒருபுடை விளங்கும் அவதரஞ் சகலம் எனப்படும். பின்பு பஞ்ச மலங்களும்நீங் கிச் சிவத்தோடு கூடி அவ்விச்சா ஞானக் கிரியைகள் எங்கு மாய் வியாபித்து விளங்கும் அவதரம் சுத்தம் எனப்படும்.

கன்மமாவது மந்திர முதலிய அத்துவாக்களினிடமாக முறையானே மனே வாக்குக் காயம் என்னும் மூன்ருன் ஈட்டப் பட்டுத் தூல கன்மமாய் ஆகாமியம் எனப்பெயர்

பெறும். பின்னர்ப் பக்குவமாங்காறும் சூக்கும கன்மமாய்ப் புத்தி தத்துவத்தினிடமாக மாயையிற் கிடந்து சாதி ஆயுள் போகம் என்னு மூன்றற்கும் ஏதுவாகி முறையே சனகம், தாரகம், போக்கியம் என மூவகைத்தாய் அபூர்வம், சஞ்சிதம் புண்ணியபாவம் என்னும் பரியாயப் பெயர் பெறும். அது பின்னர்ப் பயன்படுங்கால் ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பலதிறப்பட்டுப் பிராரத்தம் என்னும் பெயர் பெறும். கன்மத்தின் பயன் இன்பம் துன்பம்.

இவ்வினை, புத்தி தத்துவத்தைப் பற்றிநின்று சங்கார காலத்திற் புத்திதத்துவம் மாயையின் ஒடுங்கியவழி அம் மாயை பற்றுக்கோடாக நின்று புனருற்பவத்தில் தநு கரண முதலியவற்றிற்கு ஏதுவாய் வரும்.

ஈட்டப்பட்ட ஆகாமியங்களுள் புண்ணிய பாவங்கட் கேற்ப முறையே துறக்க இன்பமும் நரகத் துன்பமும் அநுப வித்து எஞ்சிக் கிடப்பன சஞ்சிதங்களாம். பின்னர்ப் பக்குவ மாங்காறும் புத்தி தத்துவத்தைப் பற்றி நிற்றலின் சூக்கும கன்மம் எனப்பட்டது.

இருவினைகள் பசுநல்வினை, தீவினை என்றும் சிவநல்வினை, தீவினை என்றும் இருவேறு வகைப்படும். அவையும் பொது வும் சிறப்புமெனப் பகுக்கப்படும். இவை மேலும் அபுத்தி பூர்வம் புத்திபூர்வம் என்று இரு வகைப்படும். அபுத்தி பூர்வமாகச் செய்யப்படும் சிவ புண்ணியமும் பலனும் "நிறைமறைக்காடு தன்னின் நீண்டெரி தீபந்தன்னைக் - கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட - நிறைகடன் மண்ணும் விண்ணு நீண்டவா னுலக மெல் லாங் - குறைவறக் கொடுப்பர்" என்னுந் திருநாவுக்கரசு சுவாமிகளின் வாக்கானறியப்படும். இவ்வாறே மற்றவை களும் கண்டு கொள்ளப்படும்.

மாயையாவது பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாய், நித்தமாய்ச், சடமாய், முதல்வனுக்கு பரிக்கிரக சத்தியாய், முதல்வனின் வியாப்பியமாய், மெய்ப்பொருளாய், அருவாய் உள்ளது.

இது சுத்தமாயை அசுத்தமாயை என இருவகைப்படும். சுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சுத்தமாயையும் அசுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் அசுத்தமாயையு மாம். துன்பத்தோடு விரவுதலின்றி இன்ப மாத்திரையே பயத்தற்கேதுவாயது சுத்தம். ஏனையது அசுத்தம்.

மாயா காரியங்களாகிய தநு கரண முதலியவை மாயேயம் எனப்படும். இவைகளும் ஆன்மாக்களைப் பந்தப் படுத்துவன. திரோதான சக்தியும் மலமென உபசரித்துக் கூறப்படும். எனவே ஆணவம், கன்மம், மாயை, திரோ தான சக்தி, மாயேயம் என்னும் ஐந்தும் பாசங்கள் என்று கூறப்படும்.

முப்பொருளுண்மை துணியுமாறு:— இவ்வுடம்பு சடம் ஆகலான் இதன்கண் இன்ப துன்பங்களை அறிந்து நுகர்தற்கு இதனின் வேறாய் ஆன்மா என்றொரு பொருள் உண்டு. ஓர் உடம்பின் நிகழும் இன்ப துன்பங்கள் மற்றொருடம்பின் அறியப்படாமையின் உடம்புதோறும் ஆன்மாக்கள் வெவ் வேறு உண்டு. அவை இவ்வுடம்பிற் கட்டுண்டு நிற்றற்கு மூலமாய் ஒரு பந்தம் அநாதியே உடையவாதல் வேண்டும். வேண்டவே, காரணவத்தை மூன்று உளவாகும். நாடோ றும் நனவும் கனவும் உறக்கமும் பேருறக்கமும் உயிர்ப் படங்குதலுங் காணப்படுதலான் உடம்பினும் ஐந்தவத் தைப் படும். புலன்களை உணரும் நனவிடத்து நினைப்பும் மறப்பும் முறையானே மாறி மாறி நிகழ்தலின் ஆண்டும் ஐந்தவத்தைப் படும். இவ்வான்மாக்கள் உடம்பிற் கட்டுண்டு தம் வயத்தனவன்றி நிற்றலின் இவற்றிற்கு உடம்பு முதலியவற்றைப் படைத்து நடாத்தி ஒடுக்கு தற்குப் பரமான்மா ஒருவன் உண்டு. அவன் இம்மூன்றனுள்

ஒரோவொரு தொழில்செய்யும் கடவுளர்க்கு மேலாய் இவர் களையுந் தொழிற்படுத்தி நிற்பன் அவன் உலகத்தைப் படைக்குங்கால் விகாரமின்றி உடனாய் நின்று தனது சமவேத சத்தியான் இருவினைகட்கேற்ப மாயை என்றொரு சடசத்தியினின்றும் தோற்றுவித்து ஒடுக்குவன். அவன் அமலனாய் நின்றே இவ்வான்மாக்களுக்கு இன்பத் துன்பங் களைக் கருவிகளின் வழியான் நுகர்விப்பன். அவன் அழி பொருள் போலச் சுட்டியறியப்படுவானுமன்றிப் பொய்ப் பொருள் போல அறியப்படாதவனு மன்றி வேறாயறியப் படுவன். அங்ஙனம் அறிகின்றவன் ஆன்மா. இவ்வாறு ஆகமவளவை சார்பாகத் தலை நின்று வழியளவையான் ஆராய்ந்து துணியப்படும்.

இனிச் சிவ ஆன்ம சம்பந்தம் அத்துவிதம் எனப்படும். இவ்வத்துவிதம் அபேத சம்பந்தமாகிய ஐக்கியமின்றிப் பேதாபேத சம்பந்தமாகிய தாதான்மியமுமின்றிப் பேத சம்பந்தமாகிய சையோகமுமின்றிக் கலப்பும் உடனாதலும் வேறாதலும் ஆகிய மூன்றுந் தன்கட்டோன்ற நிற்றல் பற்றி அம்மூன்றற்கும் பொதுவாகக் கூறப்படும். எனவே பொருண்மையால் பேதமென்பதும், கலப்பினால் அபேத மென்பதும், உடனாதலினால் உயிர்க்குயிராய் நிற்குமென்ப தும் பெறப்படும். இச்சம்பந்தம் பெத்த காலத்தில் ஆன் மாவால் அறிந்து கொள்ள இயலாதாகலின் மெய்யுணர்வு தோன்றுங்காலத்து விளங்கித் தோன்றும்.

முதல்வனோடு ஆன்மாவுக்கு எச்சம்பந்தம் அச்சம்பந்தம் ஆன்மாவின் வியாப்பியமான மாயைக்கும் உண்டென்றும் அங்ஙனமாயினும் சித்தென்னுஞ் சாதி யொருமையான் ஆன்மாவுக்கு விசேட உரிமை உண்டென்றும் கொள்ளப் படும். மூலமலமும் அவ்வாறு வியாப்பியமாயினும் ஒளிமுன் இருள் போல முதல்வனுக்கு மறுதலைப் பொருளாகலின் சம்பந்தமின்றாயிற்று.

ஆன்மா அநாதியே தனக்குரிமையில்லாத மலத்தின் மறைப்புண்டு தனது சத்தி மடங்கிச் சூனியம் போற்கிடக்கு

நிலை கண்டு இரங்கிப் பெருங் கருணையாளனாகிய சிவ பெருமான் சகச மல சத்திகளைக் கெடுத்து ஆன்மாக் களுக்கு வீடு பேறு அடைவிக்கத் திருவுளங் கொண்டு அஞ் ஞானமாகிய மூலவினைக்கேற்ப ஆன்மாக்களைப் பிரித்து ஆடையிலுள்ள அழுக்கை நீக்கும் பொருட்டு உவர்மண்ணைச் சேர்த்து ஆடையின் அழுக்கை நீக்குமாறு போல மாயை யோடு கூட்டுவன்.

அவ்வழி அசுத்த மாயையில் அநந்த தேவரால் கலக் குண்ட பாகமாகிய காரண சரீரத்தைப் பொருந்தி அறி விச்சை செயல்கள் பொது வகையாற் சமட்டி ரூபமாய் விளங்கப் பெறும் அதன்பின் அம்மாயா தத்துவத் தினின்றும் தோன்றுங் கலாதிகளாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி அவை வியட்டி ரூபமாய்ப் பிரிந்து தோன்றிச் சிறப்பு வகையான் விளங்கப் பெறும். அதன்பின் அந்தக் கரண முதலியவற்றைத் தம்முள் அடக்கி நிற்கும் குண சரீரத்தைப் பொருந்தி அறிவிச்சை செயல்கள் வரும் விடயங்களின் வியாபரிக்கப் பெறும். அதன் பின் சூக்கும சரீரத்தைப் பொருந்திப் போக்குவரவு செய்து சூக்கும வினைப் பயன்களை ஈட்டுதலும் நுகர்தலுஞ் செய்யும். பின் தூல சரீரத்தைப் பொருந்திப் போக்குவரவு செய்து தூல வினைப் பயன்களை ஈட்டுதலும் நுகர்தலுஞ் செய்யும். இவ் வைந்தும் முறையே ஆனந்த மயகோசம். விஞ்ஞான மய கோசம், மனோமய கோசம், பிராணமய கோசம், அன்னமய கோசம் எனவும் பெயர் பெறும்.

இவ்வாறு தநு கரணாதிகளோடுங்கூடி உருவினைக் கொண்டும், இச்சையுற்றும், நால்வகை வாக்குக்களான் நிகழும் அறிவுற்றும், வரப்பட்ட தொழில்கள் உற்றும், சத்தமாதி விடயத்தில் விருப்புற்றும், இருவினைகளைப் புரிந் தும், தோற்றக் கேடுகளிற் புக்குழன்றும், ஏகதேசியாய், சுவர்க்க நரக பூதலங்களில் சுழற்சியுடையனாய் இருப்பன்.

இங்ஙனந் தன்வயனெனக் கொண்டு தேகாதிகளே தானென விசாரித்து புறச்சமய நெறி நின்று செய்த

புண்ணியங்களான் அகச்சமயம் புக்கும், புகன் மிருதி வழி யுழன்றும், புகலு மாச்சிரம அறத்துறைகளவையடைந்தும், அருந்தவங்கள் புரிந்தும், அருங்கலைகள் பல தெரிந்தும், ஆரணங்கள் படித்தும், சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும், வேதசிரப் பொருளை மிகத் தெளிந்துஞ் சென்றால் முடிவில் சித்தாந்த சைவத்தை அடைவர்.

இவ்வாறு பல்வேறு பிறவிகளின் ஈட்டப்பட்ட அபுத்திபூர்வம் புத்திபூர்வம் என்னும் பொதுச் சிவபுண்ணியத்தான் ஆன்மா பக்குவமடையும். அதனுன் பசு நல்வினை தீவினைகள் தம்முள் ஒத்தலாகிய இருவினையொப்பு நிகழும். அவ்வழி மலபரிபாகத்தைத் தோற்றுவிக்கு முகத்தான் மந்ததரத்துள் மந்ததரமாகிய முதலாஞ் சத்திநிபாதம் நிகழும்.

பக்குவமாவது ஆசாரியன் அறிவித்தவாறே அறிய வல்லுஞ் செவ்வித்தாதல். இருவினையொப்பாவது ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலின்றப் புண்ணியப் பாவ மிரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து விடுவோனது அறிவின் கண் அவ்வாறொப்ப நிகழ்தல், மலபரிபாகமாவது மலந்தனது சத்தி தேய்தற்குரிய துணைக் காரணங்கள் எல்லாவற்றோடுங் கூடிப் பதனழியுஞ் செவ்வித்தாதல்.

சத்திநிபாதம் என்பது சத்தியின் வீழ்ச்சி என்னும் பொருட்டு. உலகத் துழனியின் அச்சம் நிகழ்ந்து அவ்வுலக வாழ்க்கையினின்று வெருவிப் போந்து உண்மைக் குரவனை நாடிச் செல்லுமாறு செய்வித்தலின் சத்திநிபாதம் எனப் பட்டது.

சத்திநிபாதமும் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைப்பட்டு மேலும் பலவேறு வகைப்பட விரியும். மந்ததரத்தாற் சாதக நிலையும், மந்தத்தாற் சீவன் முத்தி நிலையும், தீவிரத்தான் அபரமுத்தி நிலையும், தீவிர தரத்தான் பரமுத்தி நிலையும் பயக்கும்.

முதல்வன் வியாபகமாய் நின்றவாறே விளக்கினும் ஆன்மாக்களின் அறிவு தூலமாகலான் அவ்வாறு விளங்க மாட்டாது தத்தமக்கேற்ற சோபான முறையே சிறிது சிறிதாக ஏகதேசமாய் விளங்கி விளங்கி மேம்பட்டு வந்தே வியாபகமாய் விளங்குவதோர் இயல்பிற்றுகலான், அத்தன்மை நோக்கி அதற்கேற்பச் சோபான முறையாய்த் தானேமுதல்வனது சிற்சத்தியும் முற்பக்கத்துத் (வளர்பிறை) திங்கள் போலத் திரோதான சத்தி ரூபமாய் நின்றறிவிக்கும். ஆன்மாக்களின் அறிவு அங்ஙனம் விளங்காதபடி நிகழும் அறியாமையாகிய மலமும் பலபல சக்திகளுடையதாய் அம்முறையே முற்பக்கத்து இருள் போலக் கீழ்பட்டுத் தேய்ந்து தேய்ந்து முடிவின்கட் பற்றறக் கழியும். அது தேயத் தேய அதற்கேற்பத் திரோதான சத்தியும் அம்முறையே சிறிது சிறிதாகத் தன் தன்மை நீங்கிச் சிற்சத்தி ரூபமாய் பதிந்து பதிந்து முடிவின் கண் அதி தீவிர சத்தியாய்ப் பதியும். அது பதிய பதிய விடய வெறுப்புண்டாகும். அஃதுண்டாக உண்டாக அம்முறையே வீட்டின் கண் விருப்பம் நிகழும். அது நிகழ நிகழ அதற்கேற்ப ஆண்டாண்டுப் பலவேறு வகைப்பட உபதேசங்கள் சோபான முறையான் மேற்பட்டு உளவாகும். அதற்கேற்ப ஆன்மாவின் அநுபவ ஞானங்களும் அவ்வாறு மேற்படும்.

இவ்வாறு பக்குவம் பார்த்து உண்ணின்றுணர்த்திய பரம்பொருளே குருவடிவாய் எழுந்தருளி வந்து சிவதீக்கை செய்து உபதேசமுகத்தானும் நூன்முகத்தானும் அநுபவ முகத்தானும் உணரும்படி செய்வன். ஆசிரியன் காட்டுஞ் சைவாகம நெறியிற் சமய தீக்கையுற்றுச் சரியை நெறியைத் தலைப்பட்டு அது முற்றிய பின்னர் விசேட தீக்கையுற்றுக் கிரியை நெறியைத் தலைப்பட்டு அது முற்றிய பின்னர் யோக நூல் கேட்டு யோக நெறியைத் தலைப்பட்டு இம்மூன்றும் முறையான் முற்றிய பின்னர் நிர்வாண தீக்கை பெற்று ஞான நெறியைத் தலைப்பட்டு இவ்வாறு படிவழிச் சென்று சென்றேறி ஞானத்தாற் சிவனடியைச் சேர்வன்.

சமய விசேடங்களை அங்கமாகக் கொண்ட நிர்வாண தீக்கையானது இறைவனது கிரியா சத்தி விருத்தி ரூப மாகும். சிவாகமங்களின் உண்மைப் பொருள் ஆராய்ச்சிக்கு அதிகாரம் அளிப்பது. அத்துவ சுத்தியின் வாயிலாக அத்துவாக்களின் நிரம்பிக் கிடந்த சஞ்சித கன்மங்களை வறுத்த வித்துப்போலாக்குவது. அதனுனே ஆன்மாவை ஞானத்திற்கு உரியன் ஆக்குவது.

ஞானமாவது புறத் தொழில் அகத் தொழில் இரண்டு மின்றி அறிவுத் தொழின் மாத்திரையானே அம்மூன்று திரு மேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்த வியாபகச் சச்சி தானந்தப் பிழம்பாய் நிறைந்து நின்ற சிவபிரானிடத்திற் செய்யும் வழிபாடு ஆகும்.

ஞானமும் சரியை கிரியை யோகம் ஞானம் என நான்கு வகைப்படும். அறிதலொப்புமையால் நான்கும் ஞானமே யாம். ஆயினும் அரும்பு மலர் காய் கனியாதல் போலச் சோபான முறையாகிய தம்முள் வேறுபாட்டான் முறையே ஒன்றற்கொன்று அதிகமாய் நான்காமெண்ணுக்கணின்ற ஞானமே முடிவாகிய ஞானமாம். இந்நான்கினும் அறிவு நுணுகி வர வர அறியாமையாகிய மலமும் அம்முறையே தேய்ந்து தேய்ந்து வரும். இவற்றின் பயனுகிய சாலோக முதலிய நான்கும் முத்தியேயாயினும் ஒன்றற்கொன்று ஏற்றமாய் இறுதிக்கணின்ற சாயுச்சியம் ஒன்றே முடிவாகிய முத்தியாகும்

மேற்கூறப்பெற்ற நான்கும் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை எனவும் பெயர் பெறும். ஞான நூல்களை ஞானுசிரியன் பால் ஓதல் கேட்டல் பிறர்க்கு ஓதுவித்தல் கேட்பித்தல் என்பன கேட்டலாகும். தானும் உடனுயவரோடும் அப்பொருளைச் சிந்திப்பது சிந்தித்தலாம். இவ்வாறு கேட்ட காலத்து முதல்வனியல்பு பொருட்டன்மை பற்றிப் பேதமாய்த் தோன்றிச் சிந்தித்தகாலத்து

அபேதமாய்த் தோன்றும். இவ்விரண்டுமின்றி நேரியனும் பரியனுமாயதோர் முறைமை பற்றி எவற்றினும் ஒற்றித்து நின்றே ஒன்றினும் பற்றிலனாய் வேறு தோன்றுவது தெளிதலாம். இவ்வாறு அவனோடு ஏகனாகி நிற்க ஏகதேசச் செலவு இன்றாய் ஒழியும். நிட்டையாவது கரணங்களின் வயத்தனாதலின்றி மேலங்ஙனந் தோன்றிய இறைவனது வியாபகத்தைத் தலைப்பட்டு ஒருவாற்றானுங் குறைவின்றி இம்மையே சீவன்முத்தனாகி மாசுநீங்கிய வழி ஆடையின் வெண்மை ஆடை முழுதும் விளங்கினாற் போல, இங்குளி வாங்குங் கலம் போலுழல்வதாகிய இவ்வுடம்பு நீங்கப் பெறும் பரமுத்தி நிலையில், வியாபகமெங்ஙணும் அறிவு விளங்கப் பெற்று முதல்வனோடு ஒத்து நிற்பன் என்பதாம்.

இவ்வாறு இருவினையொப்பால் சத்தமாதி விடயந் தன்னின் பற்று நீங்கும். சத்திநிபாதத்தால் போக போக்கியக் கருவிகளின் செறிவு கழியும். குருவருளால் உருக் கழியும். தீக்கையால் சஞ்சித வினை கழியும். ஞான சாதனத்தால் எல்லா யோனிகளிலும் புக்குழல்தல் கழியும். ஞானப் பெருக்கத்தால் பாச அறிவிச்சை செயல்கள் கழியும். இறைவனது ஞான சத்தியால் அநாதி மறைப்பாகிய ஆணவமலமும் வாதனைபற்றி நிகழும் ஆகாமிய வினையும் ஒழியும். கிரியா சத்தியான் சஞ்சித வினைக்குப் பற்றுக்கொடுத்து நிற்கும் முன்னிலையாகிய மாயேய மலமும் ஒழியும். உடம்பு முகந்து கொண்ட பிராரத்த கன்மம் அநுபவத்தால் ஒழியும். மும்மல நீக்கத்தால் ஏகதேசத் தன்மை கழியும். வாதனை நீக்கத்தால் விடயந் தன்னின் நுகர்வது கழியும்.

இவ்வாறு சகல உபாதிகளும் கழிந்து சிவஞானம் விளங்கப் பெற்று மாணிக்கத்தைச் சார்ந்த படிகம் மாணிக்கமாய் ஒழியாது, மாணிக்கத்தின் ஒளியும் நிறமும் பெற்றுத் தன் ஒளி அதுவதுவாயடங்கி அம்மாணிக்கத்திற்குச் சமமாய் நிற்குமாறு போலப் பரமான்மாவினுடைய எண் குணங்

களுமே தன் குணமாகக் கொண்டு தன் குணம் அவையேயா யடங்கிப் பரமான்மாவே போல ஒற்றித்து நின்று அப்பர மான்வே தனக்கு விடயமாக அயராவன்பு செய்து சிவாநந்த அநுபவம் பெற்று அந்நிலேயிலும் மீளா அடிமையே என்று திருவருள் கண்ணுகத் (தன்முனேப்பின்றி) அநுபூதியிற் காண்பன்.

சிவம்

---

உ

சிவமயம்

# ஸ்ரீ பெரும்பூதூர் ஸ்ரீ பூதபுரீச்வரன்

## அருட்கவி மஹேந்திரவாடி ரா. உமாசங்கரன்

பூதங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு நகரை ஏற்படுத்தின. அதுவும் சிவகணங்களாயிருந்த பூதங்கள் அவை. அவ்வூருக்குப் பிற்காலத்தில் பூதபுரி என்ற பெயர் ஏற்பட்டது. இவ்வூர் சென்னைக்கு மிக அருகாமையில் உள்ளது என்றால் வியப்பில்லையா! தற்காலத்தில் வழக்கில் ஸ்ரீபெருமந்தூர் என்று அழைக்கப்படும் ஸ்ரீபெரும்பூதூர் என்ற ஊர் தான் புராண காலத்தில் 'பூதபுரி' என்றும் 'அருணாரண்யம்' என்றும் அழைக்கப்பட்டது. பிற்காலத்தில் வைணவ மதாசாரியான ராமானுஜர் அவ்வூரில் அவதரித்ததால் காலப்போக்கில் அவ்வூர் வைணவத் தலமாக வளர்ந்து விட்டது. சென்னையிலிருந்து சுமார் 25 கல் தொலைவில் உள்ளது இவ்வூர். பஸ் வசதி நிறைய உண்டு. காலையில் சென்று இறை வழிபாட்டைச் சிறப்பாக முடித்து மாலையில் எளிதில் திரும்பலாம்.

புராண வரலாற்றிற்கு வருவோம். ஒரு சமயம் திருக்கயிலையில் பிரதோஷ காலத்தில் ஈசன் தன் சடையை விரித்து ஆனந்தக் கூத்தாடிய வேளையில் அங்கேயிருந்த சில பூதகணங்கள் அவரை மதியாது சிரித்தனவாம். இது கண்ட பெருமான் தன் சந்நிதியை விட்டு அக்கணங்களை விலகியிருக்க ஆணையிடுகிறார். தாங்கள் செய்த தவறுக்கு என்ன பரிகாரம் என்று நான்முகனை பூதகணங்கள் கேட்ட பொழுது அவர் சத்யவிரத க்ஷேத்திரம் என்றும் நகரேஷு காஞ்சி என்றும் புகழப்படும் காஞ்சி நகருக்கருகாமையில் உள்ள இவ்வூரில் தவம் செய்து நாராயணனை வழிபட்டு சாப

விமோசனம் பெறலாம் என்று கூறுகிறார். அதபடி பூதன் கணங்கள் இவ்வூரில் வந்து தவம் செய்து மஹாவிஷ்ணுவின் அன்பிற்கு அடிமையாகின்றனர். மஹாவிஷ்ணுவின் கட்டளைப்படி அனந்தன் என்னும் ஆதிசேஷன் ஒரு பெரிய திருக்குளத்தை இங்கு ஏற்படுத்துகிறார். அக்குளம் ''அனந்த சரஸ்'' என்ற பெயரில் இன்றும் உள்ளது. பூத கணங்கள் இதில் மூழ்கி எழுந்து சாபவிமோசனம் பெற்று மஹா விஷ்ணுவுடன் கயிலையை அடைகின்றன. நாராயணன் ஈசனிடம் கணங்கள் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டி பூத கணங்களை கயிலையில் திரும்பவும் பணிவிடை செய்யக் காரணமாகிறார்.

இத்தகைய அரிய உதவிக்கு நன்றிக் கடனாக பூத கணங்கள் தாங்கள் தவம் செய்த இடத்திலேயே ஒரு நகரை அமைத்து அதற்குத் தங்கள் பெயரையே இட்டு ''பூதபுரி'' என்று அழைக்கின்றனர். பூதங்களுக்கு உதவி செய்த நாரணன் இங்கே ''ஆதிகேசவப் பெருமாள்'' என்ற திரு நாமங் கொண்டு கோயில் கொள்கிறார். ஈசனும் ''பூதபுரீச் வரன்'' என்ற பெயரில் இங்கே அமருகின்றார்.

இவ்வளவு புராணப் பெருமைகள் நிறைந்த இவ்வூரில் அமைதியும் அழகும், நீர், நிலவளம் மிக்க சூழ்நிலையில் ஈசன் கோயில் அமைந்திருக்கின்றது. கோயிலின் வாயில் மேற்கு நோக்கி அமைந்திருக்கின்றது. ராஜகோபுரம் ஏதும் இல்லாத சிறிய வாயில். இறைவன் சந்நிதி அமைந்திருக் கின்ற உட்கோயில் வாயில் தெற்கு நோக்கியுள்ளது. இறைவி சௌந்தர்ய நாயகியின் சந்நிதி வெளிப்பிராகாரத்தில் கிழக்கு நோக்கியுள்ளது. இது போன்று அன்னையின் சந்நிதி கிழக்கு நோக்கியிருந்தால் அத்தலத்தில் இறைவி தவம் செய்த சிறப்புடையது என்று முன்னோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். திருப்பாலைவனம், சங்கரன்கோயில், மாங்காடு ஆகிய ஊர்களில் அன்னை கிழக்கு நோக்கியே காட்சியளிக்கிறாள்.

இக்கோயிலில் உள்ள கல்வெட்டில் ஐயங்கொண்ட சோழ மண்டலத்து செங்காட்டூர்க் கோட்ட பெரும்பூதூர் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. கருவறை நல்ல சோழர் கால கற்றளி கோயில் கட்டி ஈராயிரம் ஆண்டுகளாவது ஆகியிருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது. தெற்கு பார்த்த வாயில் வழியாக ஈசன் கோயிலுக்குள் நுழையும்போதே வாயிலுக்கு இடது, வலது புறங்களில் காட்சியளிக்கும் விநாயகரும் வில்லேந்திய வேலவனும் நம்மை அருள் வழங்கி வரவேற்கின்றனர். வாயிலுக்கு நேர் எதிரே உட்புறத்தில் நடராஜர் சந்நிதியுள்ளது. ஆனல் நடராஜரின் உற்சவ மூர்த்தி இக்கோயிலில் தற்பொழுது இல்லே. நடராஜர் சந்நிதியின் வாயிலுக்கு மேற்புறம் ஆடும் கூத்தனின் கோலத்தை சிறிய சிற்பங்களாக சிற்பி வடித்திருக்கிருர். கருவறையில் ஸ்ரீ பூதபுரீச்வரனேக்கண்டு வணங்கி விட்டு அர்த்த மண்டபத்தில் உள்ள சந்திரசேகரர், வள்ளி தெய்வ யானேயுடன் கூடிய சுப்ரமணியர் ஆகிய உற்சவ மூர்த்திகளேயும் தொழலாம். கருவறைக்கு வெளியே உள்ள மஹா மண்டபம் ஒரு சிற்பக் கூடமாகவே காட்சியளிக்கிறது! அங்கு என்னதான் இல்லே? ரசிக்க மனமிருந்தால் அங்கு உள்ள சிற்பங்களே நாள் முழுதும் தங்கி பார்த்துக் கொண்டேயிருக்கலாம். கருவறை வாயிலுக்கு மேற்புறம் அன்னே காமாட்சி கம்பா நதிக்கரையில் மணலில் ஈசனே லிங்க வடிவத்தில் அமைத்து ஆலிங்கனம் செய்யும் காட்சி வெகு அழகாக அமைந்துள்ளது.

மண்டபத் தூண்களில் எண்ணற்ற சிற்பங்கள் அந்தப் பட்டியலேயே இங்கு தருகிருேம். காராம்பசு லிங்கத்தின் மீது பால் சொரியும் காட்சி, காலசம்ஹார மூர்த்தி, ராமர், மீனுட்சி திருமணம், வீரபத்திரர், அர்த்தநாரீச்வரர், பிட்சாடனர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், நடராஜரின் ஊர்த்துவ தாண்டவம், காளியின் நடனக் கோலம், பஞ்சமுகத்துடன் கூடிய சதாசிவர், வில்லேந்திய வேலவன், மூஷிக வாகனத்தில் கணபதி, சாஸ்தா, லிங்கோத்பவர் பைரவர்,

விருஷபாரூடர், பதஞ்சலி, வியாக்கிரபாத முனிவர்கள் ஆகிய இவ்வளவு சிற்பங்களையும் கண்டு களிக்கலாம்

அம்மண்டபத்தின் நடுநாயகமாக மேற்புறம் கமல மலரும் அதைச்சுற்றிக் கிளிகளும், நான்கு மூலைகளில் முனிவர்களின் உருவங்களும் காணப்படுகின்றன.

கருவறை வாயிலுக்கு வெளிப்புறத்தில் இடது வலது புறங்களில் வீரபத்திரர், நாகம், விநாயகர், பைரவர், சுப்ரமணியர் ஆகிய தெய்வத் திருவுருவங்களும் உள் நந்திக் கருகில் பைரவர், சூரியன், நவக்கிரகம் ஆகிய தெய்வங்களும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. மஹா மண்டபத்திற்கு வெளியில் உள்ள தூண்களில் கண்ணப்பர்; அர்ச்சுனன் தவம், கஜஸம்ஹாரமூர்த்தி, ஒற்றைக் காலில் தவம் செய்யும் முனிவர், புலிக்கு பயந்து சிவராத்திரி தினத்தில் வில்வ மரத்தின் மீதேறிய வேடனின் கதை ஆகிய சிற்பங்கள் உள்ளன.

நீண்டுயர்ந்த கொடி மரம் ஈசனை நோக்கி பெரிய பிரகாரத்தில் நிற்கிறது. விநாயகர் முருகர் நவக்கிரக சந்நிதிகள் புதியதாக வெளிச்சுற்றில் கட்டப்பட்டு சிலைகள் இன்னும் நிறுவப்படாமல் இருக்கின்றன.

காஞ்சி மடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் இவ்வூருக்கு சமீபத்தில் விஜயம் செய்தபொழுது கிழக்குப் புறம் ஒரு வாயில் ஏற்படுத்த ஆணையிட்டார்களாம். அப் பணி இன்னும் நிறைவேறவில்லை. அவ்வாயிலை நிறுவ வேண்டிய இடத்தில் ஒரு பெரிய புற்று காணப்படுகின்றது. தடைக்கு இதுவும் ஒரு காரணம் என்று தெரிகிறது.

இவ்வூருக்கு அருணாரண்யம் என்ற பெயரும் உண்டு என்று கட்டுரையின் ஆரம்பத்தில் கண்டோம். இவ்வூருக் கருகே பல ஆரண்யங்கள் உள்ளன. திருவள்ளூர் என்னும் வீக்ஷாரண்யமும், கூவம் என்னும் தர்பாரண்யமும், திருவாலங்காடு என்னும் வடாரண்யமும், திருப்பாசூர் என்னும்

வேணுவனமும், மாங்காடு என்னும் ஆம்ராரண்யமும், திருவேற்காடு என்னும் வடவேதாரண்யமும் அவற்றில் முக்கியமானவை.

இவ்வூர் தல வரலாற்ருேடு சம்பந்தப்பட்ட சில நிகழ்ச்சிகள் காஞ்சிப் புராணத்திலும் ஷடாரண்ய க்ஷேத்திர புராணத்திலும் உள்ளன. ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் காஞ்சியிலிருந்து மயிலே செல்லும் பொழுது பூதபுரீச்வரரை வணங்கிச் சென்ருர்கள் என்று கூறப்படுகிறது. இவ்வளவு சிறப்புகள் கொண்ட இக்கோயில் அர்ச்சகர் சுந்தரேச குருக்கள் எளிமையும், அடக்கமும், நிறைந்த சிறந்த பண்பாளர். போதிய வருவாயின்றி இருக்கும், அவருக்குதவும் வகையில் சைவ மெய்யன்பர்கள் ஈசனேத் தரிசித்து அவன் அருள் பெறுவதோடு அர்ச்சகரின் வறுமையையும் துடைத்து புண்ணியம் பெற வேண்டுகிறேன். வருங்காலத்தில் இப்பூதபுரி சிறந்த சிவத்தலமாக விளங்க சிவ பக்தர்கள் தொண்டுபுரிய வேண்டுமென்று கரம் கூப்பி வேண்டுகிறேன்.

சிவம்

---

## உள்ளூர்க் கோயில்களைப் பாதுகாப்பீர்

உள்ளூரில் இருக்கும் கோயிலில் பூஜை இல்லாமல் விளக்கு எரியாமல் இருக்கும் போது 50 ரூபாய் டூரிஸ்ட் பஸ் டிக்கட் வாங்கி க்ஷேத்திராடனம் செய்தால் நிச்சயம் பயன் கிடைக்காது. பெற்றதாய் வயிற்றுப் பசியால் அழும் பொழுது மகன் கும்பகோணத்தில் கோதானம் செய்தானும் என்று ஒரு பழமொழி இருக்கிறது. அதுபோல உள்ளூர்க் கோயில்களைப் பராமரிக்காமல் வெளியூர்க் கோவில்களைத் தரிசனம் செய்து புண்ணியம் சம்பாதிக்கலாம் என்று கருதாதீர்கள்.

ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள்
ஆதாரம்—வானதிபதிப்பகத்தாரின் தெய்வத்தின் குரல்
பக்கம் 278

---

உ
திருச்சிற்றம்பலம்

# திலகவதியார்

வித்துவான் ச. இரத்நவேலன்
சங்கரன்கோவில்

'செங்கமல நிரையிதழின் அகவயினிற் றிகழ வருந் திருவனைய திலகவதியார்' சரித்திரம் பெரிய புராணத்தில் திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் வருவதைச் சைவ மக்கள் யாவரும் அறிவர். இவரது அரிய வாழ்க்கை ஒழுக்கம் சைவ மக்கள் உளங்கொளப் பயில வேண்டிய-பயின்று பின்பற்ற வேண்டிய-ஒன்றாம்.

திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் மிக்க மனையறம் புரிந்து விருந்தளிக்கு மேன்மையினர் புகழனார் என்னும் வேளாளர். அவர்க்கு மனைவியாராம் மாதினியார் மணி வயிற்றில் திலகவதியார் பிறந்தார். சிலமுறை ஆண்டு அகன்றபின் மருணீக்கியார் திருஅவதாரம் செய்தார். திலகவதியார்க்கு ஆண்டு பன்னிரண்டு ஆயிற்று. அப்பொழுது வேளாண்குடித் தலைவராம் கலிப்பகையார், புகழனார்பால் மகள் கொள்ள மேலோரைச் செலவிட்டார். புகழனார் குலம் பேசிக் குணம் பேசித் திலகவதியாரை மணம் நேர்ந்தார்.

திலகவதியார் வயதினைத் தெளிவாகக் குறிப்பிட்ட புராணம் கலிப்பகையார் வயது பற்றி ஒன்றும் பேசவில்லை. ஆனால் வேளாண் குடித்தலைவர், மின்னார் செஞ்சடை அண்ணல் (ஸ்ரீ சிவபிரான்) மெய்யடிமை விருப்புடையார், புரவலன் பால் அருளுடையார், அடல் அரி ஏறு என உள்ளார், பெருவனப்பினர் கலிப்பகையார் என்பனவற்றைக்

கூறுகிறது. அவருக்கு 16 வயது வைத்துக் கொள்ளலாம் எனின் அவர் அரசருக்கு சேனுபதியாம் தகுதி அத்துணை இளைய வயதில் பெற்றிருக்க நியாயமில்லை. ஆதலான் உலகியலுக்கு ஆண்வயது ஏறக்குறையவிருக்கலாம் என்று தெரிகிறது. பெண்ணிற்குக் கலியாண வயது பன்னிரண்டுக்கு மேலிருத்தல் கூடாதென்பதுந் தெரிகிறது. ருதுவுக்கு முன் நடப்பது வேளாளரின் மணமுறை என்பது விகசிதம்.

கலிப்பகையாரின் சிறப்பினை நான்கு வகையாகப் புராணம் பேசியது மேலே காட்டப்பட்டது. அதாவது கலிப்பகையார் சிவப்பணியில் விருப்புடையார், உத்தியோகத்தில் திறமையுடையார், அதனுல் அரசரின் அபிமானம் பெற்றவர், பெருவீரர், அழகர்.

பழைய கல்யாண முறையில் பிள்ளை வீட்டாரே பெண் பேச ஆளனுப்புதல் மரபு, சைவமரபும் அது தான் என்பதனைச் சிவபிரானே பார்வதி தேவியாரை மணம் பேச சப்தரிஷிகளைச் செல்ல விட்டமையைக் கந்தபுராணத்தில் கண்டு தெளியலாம்.

புகழனுர் மணமிசைவு தெரிவித்த பின் வதுவை வினை முடிக்கும் முன் கலிப்பகையார்க்குச் செய்ய வேண்டிய பிறிதொரு பெருங்கடன் குறுக்கிட்டது. படைத் தலைவராம் கலிப்பகையார் அரசியலிற் பெரும் பொறுப்புடையவர். ஆதலின் அரசர் ஏவ, மாறு ஏற்ற வடபுலத்தாருடன் போர் செய்யச் சென்ருர். மணத்தினும் உத்தியோகக் கடனே முதன்மை எனக் கொண்டார் கலிப்பகையார்.

கலிப்பகையார் நெடுநாள்கள் நிறை வெம்போர்த்துறை விளைத்தார். அதற்கிடையில் நிலையாமையால் புகழனுர் இவ்வுலக வாழ்வை நீத்தார். மாதினியார் சககமனம் செய்தார். கற்பு நெறி வழுவாத மாதினியார் நற்சுற்றம் வாய்க்கப் பெற்றவர், நன்மக்கள் பேறுடையார். ஆயினும் அவ்விரண்டனையும் துகளாகக் கருதிக் கணவனுருடன் சென்றது

அவரது கற்பின் திண்மையைப் புலப்படுத்துகிறது. இல்லற வாழ்வின் பயன் நன்மக்கள் பேறு. அவரையும் துகளாகக் கருதிச் செல்லும் மனத்திண்மை அம்மம்ம! சொல்லு தற்கரிது.

கணவனுருடன் செல்லுதல் என்பது தம் உடலையும் உயிரையும் அவருடல் உயிர்களோடு இயைவித்தலாம்.

திலகவதியாரும் அரிய தம்பியாரும் ஒருவாறு பெருங் கிளைருர் தேற்ற, இரு முதுகுரவர் கடன் செய்து இருந்த பின், கலிப்பகையார் போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார். செம்மலர் மேல் திருவனைய திலகவதி யார் இது கேட்டார்.

மாதினியார் மகளார் அல்லவோ திலகவதியார்? 'என் தந்தையும் அன்னையும் அவர்க்கு (கலிப்பகையார்) என்னைக் கொடுக்க இசைந்தார்கள். அந்த முறையால் அவர்க்கே உரியவள் நான் ஆதலினுல் இந்தவுயிரை அவர் உயிரோடு இசைவிப்பேன்' எனக்கூறித் துணிந்து எழுந்தார்.

திலகவதியார் கலிப்பகையார் உயிரோடு தம் உயிரை இயைவிக்கக் கருதிய காரணம் என்ன? உடலோடு உடலை யும் இயைவிக்கக் கருதாதது ஏன்? என எழும் ஐயங்களைத் தெளிவிக்க வேண்டும். கலிப்பகையார் யுத்த களத்தில் இறந்தார். திலகவதியார் வீட்டில் இருந்தார். அன்றியும் இருவரும் ஒருங்கிருந்தாராயினும் திருமணத்துக்கு முன் இருவருடல்களும் இயைதல் தருமமன்று. மரபுமன்று. திரு மருகலில் வணிகன் ஒருவன் கன்னி ஒருத்தியை உடன் கொண்டு அணைந்தான். ஒரு மடத்தில் தங்கியிருந்த பொழுது வணிகன் அரவு தீண்டி இறந்தான். உடன் வந்த கன்னி அவ்வணிகனையே அடைவாகக் கொண்டு வந்தவ ளாயினும் இறந்து போன அவன் உடலையும் தீண்டிலுளில்லை. அவன் அருகில் வீழ்ந்தே அரற்றினுள் எனத் திருஞான சம்பந்தர் புராணம் கூறுவதையும் இவ்விடத்தில் இணைத்து

நோக்குக. ஏனெனில் அக்கன்னி, தனக்கு உரிமையாளன் எனினும் திருமணத்துக்கு முன் அவன் உடலைத்தீண்ட ஒருப் படவில்லை. அவ்வுயரிய, திண்ணிய மனப்பாங்கே திருஞான சம்பந்த பிள்ளையாரின் திருவுள்ளத்தில் கருணை சுரக்கச் செய்தது என்பதனை அச்சரித்திரம் படித்து அறிந்துகொள்க.

காதல் மணம் எனத் தமிழ் இலக்கியங்களில் பேசப் பெறுவது உலகியலன்று. 'இல்லது, இனியது, நல்லது (Ideal not practical) எனப் புலவரால் நாட்டுவிக்கப்பட்ட தொன்ருகலின்' எனக் களவியலுரைகாரரும் கூறினர். தொல்காப்பியரும் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெருர்' என்ற சூத்திரத்தால் இவ்வுண்மையை வலியுறுத்தினர். காதல் மணத்துக்குச் சரித்திரச் சான்றில்லை. உளவாயின சான்றுகளும் அதாவது சான்றுகள் போல்வனவும் இனக் கவர்ச்சி அடிப்படையில் நிகழ்ந்தனவே.

அன்றியும் உடலுக்கிறைவன் கணவன்; உயிருக் கிறைவன் சிவனே. இதனைக் காஞ்சிப்புராணம் இரேணு கீசப்படலத்து

'கொழுநன் யாரினும் இனியவன் என்றுகூ றுவர்அக்
கொழுநன் இவ்வுடற் குரியவன் குறிக்கில்ஆ ருயிர்க்குக்
கொழுநன் தந்தைதாய் செல்வமும் ஏனவுங் கொன்றைக்
கொழுந னைத்தொடைக் குளிர்சடைச் சிவபிரான் என்றும்'.

என்ற பாடலால் தெளியலாம். அப்படியாயின் திலக வதியார் உயிரைச் சிவனேடன்றே இயைவிக்க வேண்டும் என்று கேட்பின் அஃது ஒக்கும். கலிப்பகையார் மின்னர் செஞ்சடையண்ணல் மெய்யடிமை விருப்புடையார் ஆதலி ஞல் அவருயிரோடியைவிப்பது சிவனேடியைவிப்பதேயாகும்.

பெற்ரேர் செய்த நிச்சயத்தால் திலகவதியாரின் உள்ளந்தான் கலிப்பகையாரிடம் சென்றதே தவிர உடல் மணத்திற்குப் பிறகே செல்ல வேண்டும் ஆகையால் உயிரோடு உயிரை இயைவிக்க ஒருப்பட்டார் திலகவதியார்.

காதலித்துப் பின் மணந்து கொள்வதா? மணந்து பின்னர் காதலிப்பதா? (Marriage after love or love after Marriage) என வினவின் மணந்தபின் காதலிப்பதே முறை. அதற்கு முன் காதலிக்கப் பெண்ணுக்குரிமையில்லை. தமிழகத்து நேரிய கற்பொழுக்கமுடைய எப்பெண்ணும் மணந்த பின் காதலித்தவளே.

திலகவதியார், மணம் நேர்ந்தபின் தம்மைக் கலிப்பகையாரின் உரிமைப் பொருளாக முடிவெடுத்தார். ஆதலால் கற்பின் மிக்க அவர் கலிப்பகையார் உயிரோடு தம்முயிரை இயைவிக்கும் காதல் மேற்கொண்டார்.

கண்ணகி முதலியோர்க்கு மணந்த பிறகே கற்பு மாண்பைக் காட்ட இடமேற்பட்டது. திலகவதியார்க்கு கற்பு மாண்பை மணம் நிகழும் முன்னரே காட்டும் வாய்ப்பு ஏற்பட்டது.

திலகவதியாரின் பிறிதொரு சிறப்பு மாதா பிதா வாக்கிய பரிபாலனம் ஆம். 'எந்தையும் எம் அனையும் அவர்க்கு எனைக் கொடுக்க இசைந்தார்கள், அந்த முறையால் அவர்க்கு உரியது நான்' என மேற்கொண்டு 'இந்த உயிர் அவருயிரோடிசைவிப்பேன்' என ஒருப்பட்டமையால் மாதாபிதா வாக்கியத்தை அவர் பரிபாலித்தமை தெள்ளிதின் புலனாகும்.

இராமன் தந்தை சொல்லைப் பேண அரசை விட்டான். அதுவும் பதினான்கு ஆண்டுகளே. பரசுராமன் தந்தை சொற் கேட்டு தாயைக் கொன்றான். அதுவும் தந்தையின் ஆற்றலை அறிந்து அவனைக் கொண்டே தாயை எழுப்பிக் கொள்ளலாம் என்று நன்கு அறிந்து கொண்டுதான். பின்னர் தந்தையைக் கொண்டு தாயை உயிரோடு எழுப்பிக் கொள்ளவும் செய்தான். ஆனால் திலகவதியார் மாதாபிதா வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு வாழ்க்கையையே தியாகம் செய்தார். திலகவதியார் செயலே மேலிருவர் செயலினும் சிறப்புடைத்தன்றோ?

திலகவதியார் தம்முயிரைக் கலிப்பகையார் உயிரோடு இசைவிக்க முற்பட்டபொழுது அவர்தம் அருமைத் தம்பி யார் மருணீக்கியார் மிகப் புலம்பினர். 'அன்னையும் தந்தை யும் அகன்ற பின் உம்மை வணங்கப் பெறுதலினல் உயிர் தரித்தேன். என்னைத் தனியே விட்டுச் செல்வீராயின் யானும் உமக்கு முன் உயிர் நீப்பேன்' என்று திலகவதியார் அடியிணையில் விழுந்து மருணீக்கியார் கூறினர் திலகவதி யார் உள்ளம் சகோதர வாத்ஸல்யத்தால் நிரம்பியது. தம்பி யார் உளராக வேண்டும் எனனும் தயையினை உள்ளத்தில் வைத்தார் திலகவதியார்.

சகோதர வாஞ்சைக்குப் பரதனையும் இராமனையும் கூறுவர். பரதன் தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்தீவினை எனநீத்தான். ஒரு வகையால் பரதன் பழிக் கும் அலர்தூற்றுதலுக்கும் அஞ்சியே அவ்வாறு நீத்தான் என்னலாம். 'தொல்குலம் பரதன் என்றொரு பழி படைத் தென்னுமால்' என்ற கம்பர் வாக்கும் இதனை மெய்ப்பிக்கும். ஆகையால் உண்மையான சகோதர வாஞ்சை பரதன் காட்டினன் என்பதிலும் அலருக்கும் பழிக்கும் அஞ்சினன் என்னலாம். ஆனல் திலகவதியார் - மருணீக்கியாருக்குள் அப்படிப்பட்ட ஒரு நிலை எழ வாய்ப்பே இல்லை என்னலாம். தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயா திலகவதி யாரை உம்பர் உலகணைய மேற்கொண்ட முடிவை மாற்றச் செய்தது. எனவே அவர் உடலை விட்டுச் செல்ல இருந்த உயிரைத் தாங்கினர். அம்பொன்மணி நூல் தாங்கினரில்லை; மனிதர்க்கு மட்டுமேயல்லாமல் அனைத்துயிர்க்கும் அருளைத் தாங்கினர். இவ்வுலகில் மனையில் இருந்து தவம் புரிந்து திலகவதியார் இருந்தார்.

ஆனல் என்னே திருவருளின் திருவிளையாடல்! நம்பர் அருளாமையால் மருணீக்கியார் சமண சமயம் புக்கார். உடனே கவலை கொண்ட திலகவதியார் சுற்றங்களை விட் டார் திலகவதியார் வீட்டிலிருந்து தவம் புரிந்ததற்குக்

காரணம் தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயாவே. தம்பி சமண் சமயம் புகவே தமக்கையாரும் வீட்டை விடத் துணிந்தார். மற்றைச் சுற்றத்தாரைப் பொருட்படுத்தவில்லை.

திலகவதியார் திருவதிகை திருவீரட்டானஞ் சேர்ந்தார். திருவீரட்டானஞ் சேர்ந்து அங்கிருந்த செம்பவளக்குன்றை அடிபணிந்தார். குற்றமற்ற சிவசின்னங்கள் தாங்கிக் கைத் தொண்டு காதலித்து திருப்பணிகள் பல செய்தார். புலர்வதன் முன் எழுந்து திருக்கோயில் உள்புகுந்து திருஅலகிட்டார்; திருமெழுக்கிட்டார்; மலர் கொய்து கொண்டு வந்து மாலைகளுந் தொடுத்தமைத்து எம்பிராற்குச் சூட்டக் கொடுத்துப் பணிகள் பல செய்தார்.

திருவீரட்டானஞ் சேர்ந்த பின்னர் தான் திலகவதியார் சிவசின்னந் தாங்கினுரோ? இல்லில் அவ்வுயரிய சின்னங்களை தாங்கினுரில்லையோ? எனச் சிலர் அறியாது வினவலாம். இல்லில் அச்சின்னந்தாங்கினுர். ஆனுல் திருவதிகையில் தபோதனியானுர். ஆகையால் இங்குச் சிவசின்னம் என்பது சடைமுடியும் காஷாய வஸ்திரதாரணமுமென்பதைக் குறித் தனவாம் இதனைத் திருவீரட்டானத்தில் 'கோதில் சிவ சின்னம் அன்று முதற்ருங்கி' எனப் பெரியபுராணம் கூறுவ தால் அறியலாம். இல்லில் விபூதி ருத்திராக்ஷமாகிய சிவ சின்னங்கள் தாங்கி வாழ்ந்தார்.

திலகவதியார் 'கேளுறும் அன்புற ஒழுகும் கேண்மை யினுர்' ஆயினும் தம்பியார் சமண் சமயம் புகுந்தபின் 'தொன்னெறியின் சுற்றத் தொடர்பு ஒழியக்' காரணம் என்னையோவெனின் அனைத்துயிர்க்கும் அருள் தாங்கியதே யாம். கேளிர் (தொடர்புடைய சுற்றத்தார்) பால் நிகழ்வது அன்பு. அனைத்துயிர்கள் பாலும் நிகழ்வது அருள். அன்பு அருளில் அடக்கம்.

திலகவதியார்க்கு அடுத்தடுத்து நிகழ்ந்த துயரங்கள் சகிக்குந்தகையன அல்ல. பெற்ருேர் மரணமும், அதற்கு

அடுத்துத் தம்மை மணக்க இருந்த கலிப்பகையார் பிரிவும், தம்பியார் பரசமயம் புகுந்ததும் அவர்க்கு அடுத்தடுத்து வந்த பெருந்துயரங்கள்.

இவ்வுலகை நீத்தவர்களை உயிர்ப்பிக்க அவர் விரும்பினாரில்லை. ஆனால் தம்பியாரைப் பரசமயத்திலிருந்து மீட்டல் ஒன்றையே பெரிதும் விரும்பினார். அஃது ஏன்? உரியார்கள் சாவதிலும் பரசமயம் புகுவது மிகவும் இழிவு. அதனைப் பார்த்துக் கொண்டிருத்தல் சிவாபராதமாகும். தம்பியார் உளராக வேண்டும் என்பது திலகவதியார் கொண்ட இலட்சியம். அதற்கடையாளம் அவர் சமண் புகுந்ததும் திலகவதியார் தம் வீட்டை விட்டார். இப்போது தம்பியார் மீள வேண்டும். எப்படி மீள்வது? பரசமயியாயிருந்து கொண்டே மீளலாம். 'தம்மை உள்ளவாறு உணர்ந்தார் சங்கரர்க் கடிமை செய்யும் சால்பு மேற்கொள்வார்'. தம்மை உள்ள வாறு உணர்ந்த திலகவதியார் தம்பியார் சமண் சமயத்தி லிருந்து சங்கரர்க்கடிமை செய்யும் சால்பினை உடையராதல் இயலாது என்பதையும் உணர்ந்தார். எனவே தம்பி சைவ ராகியே மீள முடியும் என உறுதி கூடினார். தம்பியார் சமண மன்னனின் பாதுகாவலில் இருக்கிறார். பிறர்யாருந் திருப்ப முடியாது தம்பியாரை. தம்பியாரைத் திருப்பவல்லார் சிவபெருமான் ஒருவரே. எனவே தூண்டு தவவிளக்கனைய திலகவதியார் திருவீரட்டானச் சுடரொளியைத் தொழுது 'என்னை அடிமைகொண்டு, அவ்வடிமைத் திறத்தைத் தேவரீர் அங்கீகரித்தீராயின் என் பின்வந்தவனைப் பரசமயக் குழியினின்றும் எடுத்தாள வேண்டும்' எனப் பலமுறையும் விண்ணப்பஞ்செய்தார்.

இக்காலத்தில் பணத்திற்கும், பதவிக்கும், பாவையர்க்கு மெனப் பரசமயம் புகும் சைவசமயப் பிறப்புடையாரைப் போகாமலிருக்கும்படி தடுத்து வைப்பதே கஷ்டமாயிருக் கிறது. அம்மூன்று உலக சுகங்களையே பெரும்பேறாகக் கருதி வாழும் அப்பேதை நீரரைச் சைவத்திற் கொண்டு வருதல் சாமானியமா?

சிவனார் திருச்செவியில் அடியார் விண்ணப்பம் ஏறாது போமா? 'புத்தரும் சமணரும் புறனுரைக்கப் பத்தர்கட் கருள் செய்து பயின்ற' சிவபிரான் திலகவதியார் கனவில் போந்து அநுக்கிரகம் செய்து அருளினார். திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழத் திருவருள் பாலித்த பெருமான், கடுங்கனல் போல் அடுங்கொடிய மண்டு சூலை நோயை மருணீக்கியார்க்குத் தந்து ஆண்டான்.

மருணீக்கியார் நம்பர் அருளாமையினாலும் சமண் புகுந்தமையினாலும் தமக்கு நன்றி செய்த திலகவதியாரை அறவே மறந்திருந்தார். எப்பொழுது 'வடவனலும், கொடு விடமும், வச்சிரமும் பிறவுமாங்கொடியவெலாம் ஒன்றாகிக் குடரில்' துன்புறுத்தினாற்போல கொடுஞ்சூலை துன்புறுத்திய பொழுது அதனைத் தீர்க்க முடியாது சமண் குண்டர்கள் கை விட்டார்களோ அப்பொழுதுதான் பண்டையுறவு உணர்ந் தார்க்குத் திலகவதியாருளாராக் கொண்டார்.

திலகவதியார்க்குத் தூது அனுப்பினார் மருணீக்கியார். மருணீக்கியாரின் பரிசாரகன் அவர் ஏவல் வழி திலகவதி யாரைக் கண்டிறைஞ்சினான். அப்பொழுது திலகவதியார் அருந்தவத்தராய் பூங்கமழ் நந்தனவனத்தின் புறத்தணைந் திருந்தார். பரிசாரகன் 'ஈங்கு யான் உமக்கிளையார் ஏவலி னால் வந்தேன்' என்றபொழுது 'தீங்குளவோ?' என வின வினார். அவ்வினா முன்னர்க்கனவில் சிவபிரான் 'அன்னவனைச் சூலை மடுத்தாள்வன்' என அருளியதைக் கருதியிருக்கலாம். பிறர் யாவரும் கைவிட்டபின் பண்டையுறவு உணர்வு, தீங்கு உளவாயினபின் தானே தோன்றும் என்பதையும் உணர்த்தலாம்.

மருணீக்கியார்க்குச் சூலைநோய் குடர்முடக்கித் தீராமை யையும் எல்லாரும் கைவிட்ட செய்தியையும் பரிசாரகன் கூறினான். எந்த லட்சியத்திற்குத் திலகவதியார் உயிர் தாங்கி வாழ்ந்தாரோ அவ்விலட்சியம் சிதையும் நிலை (மருணீக்கியார் உயிர் ஆபத்தான நோய் நிலை) வந்துற்ற பொழுதும் 'நான்

அங்கு உன்னுடன் போந்து நன்றறியா அமண்பாழி நண்ணுகிலேன்' என்று கூறிய திட்பம் சைவ மக்கள் யாவருடைய உள்ளத்திலும் கொள்ளத்தக்கது. அம்மையார் உலகில் வாழ்ந்ததற்குரிய லட்சியத்திலும், சமய லட்சியத்தை எவ்வளவு உயர்வாகக் கொண்டிருந்தார் என்பது புலப்படுகிறது. பரிசாரகன் இவ்வார்த்தை கேட்டு அவ்வாறே மருணீக்கியார்க்கு அறிவித்தான். பின்னரே ஈசர் அருள் கூடியது. ஒவ்வாத புன்சமயத்தொழியா, சூலைத்துயர் ஒழிய, செவ்விய சிவநெறிபற்றி ஒழுகும் திலகவதியார் தாள் சேர மருணீக்கியார் முனைந்தார். மருணீக்கியார் திருவதிகையடைந்து திலகவதியார் திருவடி வீழ்ந்தார். 'நம் குலம் செய்த தவத்தின் பயன் போன்றவரே, கொடுஞ்சூலைக்கிடைந்து அடைந்தேன். இனி மயக்கமடையாது உய்ந்து கரையேறும் நெறி உரைத்தருளும்' என விண்ணப்பம் செய்தார் மருணீக்கியார். நோய் நீங்க வேண்டினாரில்லை தம்பியார். தமக்கையாரும் 'கொள்கையற்ற பரசமயக் குழியில் விழுந்து அறியாது மூண்ட அரிய துன்பத்திற்காளானவரே எழுந்திரும்' எனப் பேசி உய்யு நெறியாக 'கற்றை வேணியார், கழலடைந்தார் பற்றறுப்பார், அவர் தமைப் பணிந்து பணி செய்வீர்' எனக்கூறித் திருக்கயிலைக் குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்தோதிக் கொடுத்தார்.

திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெற்ற தம்பியார் பெருவாழ்வு தாம் மட்டுமோ பெற்றார்? நம்மையும் பெறச்செய்தார். இத்துணைக்கும் காரணம் ஈசனாரருள் எனினும் அது திலகவதியார் வழியாலே தான் நம்மை வந்து அடைந்தது.

இதுகாறும் திலகவதியார் கற்பின் தின்மையையும், மாதா பிதா வாக்கிய பரிபாலனத்தையும், சகோதர வாஞ்சையையும், சமய லட்சியத்தில் பிறழாதிருந்தமையையும் ஒருவாறு கண்டோம்.

சிவம்

உ

திருச்சிற்றம்பலம்

# புராணங்கள்

திருவாவடுதுறையாதீன வித்வான்

சித்தாந்த பண்டித பூஷணம்

சிவஸ்ரீ ஆ ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்கள்

சமயத்துறையில் பயிற்சியும் ஆர்வமும் உடையவர்கள் வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் என அடிக்கடி பேசி வருவார்கள். வேதம் 4, ஆகமம் 28, புராணம் 18. இதிகாசமோ இராமாயணம், மஹாபாரதம், சிவரகசியம் என 3. சிவரகசியத்துக்குப் பரமேதிகாசம் என்ற விசேட நாமம் உண்டு. (பரம, இதிகாசம்-பரமேதிகாசம், பரம-மேலான.)

அந்நூற்கள் அனைத்தும் வடமொழியில் மூலமாக உள்ளன. சைவசம்யப் பிறப்புடையார் அச்சமயப் பற்று உடையராயின் கூடியவரை அவற்றைக் கற்றல் வேண்டும். அஃது அவர்க்குக்கடன். சிவபரத்துவ புத்தியும், சிவபக்தியும் உண்மையிற் பெறவேண்டும் என்ற கருத்துடையார் அப்பேறின்றிப் போது போக்கிப் புறக்கணித்துக் கண்ணை மூடிக் கொள்வராயின் அவர் முதல்வனல் விசாரிக்கவே படுவர். தமிழிலுள்ள சைவநூற்களைப் படித்தால் போதும் என்பர் ஒற்றைக் கண்ணர். அவர் தாம் கெடுவதன்றிச் சைவ சமூகத்தையே வழிவழிக் கெடுப்பவர் ஆவர்.

மேலே விவரித்த நூல்கள் எல்லாம் சைவசமயத்தையே இருதயமாகக் கொண்டவை. வடமொழியில் வைணவ மாயாவாத முதலிய வேற்றுச் சமயநூற்களும் ஏராளமாய்

உள்ளன. அச்சமயங்களிற் பயிற்சி உடையாருட் பலர் அம் மொழியிலும் மிகத் தேர்ந்தவராய் இருப்பர். அவருக்குச் சைவ சமயத்திற் பற்றிருக்க முடியாது. சைவ சமயத்தில் மிகப் படித்தவராய் இருக்கும் சைவரோ சிலர். அவருட் பலர் வடமொழிக்கு வெகு தூரமாயினர். அது வேற்றுச் சமயத்தாருக்கு நன்கு தெரியும். அதனுல் ஆரம்பத்திற் சொன்ன வடமொழி நூல் வரிசையில் சிவபரத்துவ வாக்கி யங்கள் பலவற்றை அவர் தமக்கு ஏற்கு முறையில் அப்பரத் துவத்துக்கு விரோதமாகத் திரித்தும், புதுவாக்கியங்களைப் புகுத்தியும் உருக்கெடுத்துப் புத்தகங்கள் அச்சிடவுங்கூடும். அங்ஙனம் உருமாற்றி அச்சிடப்பட்ட புத்தகங்கள் சைவ சமயத்துக்கே பெருநஷ்டமாதல் திண்ணம். அவற்றில் ஸத்ஜன நம்பிக்கையும் இராது.

பேரறிஞர் பலர் இருமொழியிலும் வல்லவராய்த் தல புராணம் என்ற பெயரால் பல புராணங்களைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கின்றனர். அவையெல்லாம் மூல வாக்கியங்களோடு முற்றிலும் ஒத்திருப்பன. ஆனுல் உரு மாறிய புத்தகங்களோடு அம்மொழிபெயர்ப்புக்கள் பல விடங்களில் ஒத்திரா. அதனைக் காட்டி அம்மொழி பெயர்ப்பாசிரியர் எல்லாம் வடமொழியறிவு இல்லாதவ ரெனவும், அதனுல் அம்மொழிபெயர்ப்புகள் பிரமாண மாகா வெனவும், அவை சொல்நய முடையனவாயினும் பொய்களை உள்ளுறையாகக் கொண்டனவெனவும் உலகம் பலபல பேச இடனுக்குவார் அவ்வேற்றுச் சமயத்தார். அது தமிழ் இலக்கியக் கொலையுமாகும். ஆகவே அவ்வொற்றைக் கண்ணர் சைவத்துக்கும் தமிழுக்கும் கேடராவர்.

சைவ சமயத்துக்குரிய தமிழ்மொழிபெயர்ப்புப் பேரிலக் கியங்களின் உயரிய தரத்தைக் காப்பாற்று நிமித்தமாவது வடமொழி மூலங்களைச் சைவர்கள் காப்பாற்ற வேண்டும். அந்த அளவுக்கேனும் அவர்கள் அம்மொழியைக் கற்றல் வேண்டும்.

18 புராணங்களுள் 10 சிவபிரானையும், 4 விஷ்ணுவையும், 2 பிரமனையும், 1 அக்கினிக் கடவுளையும், 1 சூரியனையும் பற்றிப் பேசும். சிவபுராணம் பத்துக்கும் கிரந்தங்கள் 268000. விஷ்ணுபுராணம் நான்குக்கும் கிரந்தங்கள் 55000. பிரமபுராணம் இரண்டுக்கும் கிரந்தங்கள் 65000, அக்கினி புராணத்துக்குக் கிரந்தங்கள் 8000. சூரிய புராணத்துக்குக் கிரந்தங்கள் 12000. அப்புராணங்கள் வேத வாக்கியங்களையெடுத்துக் கதாரூபத்திற் பொருள் கூறுவன. ஆகலின் அவை வேத உபப்பிரும்மணம் எனத் தொன்றுதொட்டு ஆன்றோரால் கௌரவித்து அங்கீகரிக்கப் பட்டு வருகின்றன. 'புராணம் - பழமை' ஆகலின் அதற்குக் காலம் கணிப்பது செல்லாது. சமயத்துறை பற்றிய ஆராய்ச்சிக்கு அவையனைத்தும் பிரமாணமாகும். அவற்றுள் 268000 கிரந்தங்களைக் கொண்ட 10 புராணங்களால் வந்திக்கப்பட்டவன் சிவபிரான். வேற்றுமதத்தார் பொருள்கோள் முறையை உதாசீனம் பண்ணி மதாபிமானத் தால் சிவநிந்தை அப்படி மலிந்து கிடக்கிறது இப்படி மலிந்து கிடக்கிறது என வடமொழி மூல புராணங்களில் இருப்பன போலச் சிலபல வாக்கியங்களை எடுத்துக் காட்டு கின்றனர். சவாலும் விடுகின்றனர். அவ்வாக்கியங்கள் ஆண்டு உளவா, உளவாயின் அவற்றின் தாற்பரியம் சைவ சமயிகள் பரம்பொருளெனக் கொண்டு வழிபட்டு வரும் சிவபெருமானைப் பற்றிய நிந்தை தானு எனக் கண்டு ஆராய்ந்து முடிவுகூற வல்ல வடமொழிக் கண்ணைச் சைவ சமயம் படித்த பண்டிதருள் பெரும்பகுதியினர் பெறும லிருந்து வருவது அதற்கு ஒரு காரணம். அவர் அந்நிந்தைப் பிரசங்கத்தைத் தடுக்கும் ஆற்றல் இலராய் அதற்குத் துணை போகின்ற கேடரேயாவர்.

சாத்துவிகம், இராசதம், தாமசம் என்னும் முக்குண மும் உடையவன் பிரமன். அவன் சாத்துவிகியாய் இருந்த போது சாத்துவிக புராணங்களையும், இராசசியாய் இருந்த போது இராசத புராணங்களையும், தாமசியாய் இருந்த

போது தாமச புராணங்களையும் செய்தான். 18 புராணங்களையும் இப்படி ஒரு மதம் பிரித்துப் பேசும்.

விஷ்ணு புராணங்கள் சாத்துவிகம். அவற்றிற் பேசப்படும் விஷ்ணுவே சாத்துவிக மூர்த்தி, பரம்பொருள். அவனே சர்வ சாத்துவிக ஜனங்களும் (நன்மக்களு) வழிபடற்குரியான். சிவபுராணங்கள் தாமசம். அவற்றிற் பேசப்படும் சிவன் தாமசமூர்த்தி, ஜீவனே. அவன் தாமசகுணத்தரா(கீழ்மக்களா)ல் வழிபடப்படுவன். அவ்வழிபாட்டைச் சாதுக்கள் தள்ளுவர். அச்சிவபுராணங்கள் பிரமாணமுமாகா. அம்மட்டோ? ஸ்மிருதி முதலிய மற்ற நூற்களும் அம்முக்குணம் பற்றியனவாம். சுதர்சனம் 218 'ஸ்மிருதி விசாரம்' என்ற தலைப்புக் கட்டுரையைக் காண்க. விஷ்ணு பரத்வம் பேசுகிற சுவடி எதுவாயினும் அது சாத்விகம், அல்லாத அனைத்துச் சுவடிகளும் ராசத தாமசங்களெனத் தள்ளத்தக்கனவே என்பது அக்கட்டுரையின் முடிவு.

स्मृत्यनवकाशदोषप्रसङ्गः इति चेत्......

(ப்ரஹ்மசூத்ரம் 2-1-1) என்ற வியாச சூத்திரத்துச் சங்கர ராமானுஜ பாஷ்யங்களைக் கொண்டு

> '......வேத விருத்தமான ஸ்மிருதி புராணாதிகளைத் தள்ளி விட வேண்டியதே என்று வேதவியாஸர் கூறியிருக்க, ஆதிசங்கரரும் தம்முடைய ப்ரஹ்ம சூத்ர பாஷ்யத்தில் அதை ஆதரித்திருக்க......'

என 'ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்' 214 பக்கம் 5 அதனைத் தெரிவிக்கும்.

ஆனால் அந்த சூத்திரம் கபில சாங்கிய மதத்தை மறுக்க வந்த இடம். அதில் கபில ஸ்மிருதி மாத்திரம் மறுக்கப்படுகிறது. மறுக்கும் போது,

> 'இதொன்றுக்காக (இக்கபில ஸ்மிருதியை மறுமல் விட்டு
> வைத்தால்)........மற்றுமுள்ள அநேக ஸ்மிருதிகள்

இதிஹாஸங்கள் புராணங்கள் பகவத்கீதையாகிய இவ்வளவுக்கும் அப்ராமண்யம் சொல்வது சரியன்று.'

எனப் புராணங்களை ஆதிசங்கரர் ஆதரித்தே பேசியிருக்கிருர். அவ்விடத்தில் ராமாநுஜர் புராணங்களைப் பிரஸ்தாபிக்கவேயில்லை. அங்ஙனமாகப் புராணங்களைத் தள்ளிவிட வேண்டியதே என வேத வியாஸர் கூறியதாகச் சுதர்சனம் சொன்னது மிகையன்ருே?

புராணங்களை அம்மதம்.

'யஸ்மிந் கல்பேது யத்ப்ரோக்தம் புராணம்ப்ரஹ்மணு புரா |
தஸ்ய தஸ்யது மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே |
அக்நேச் சிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம் |
ராஜஸேஷுச மாஹாத்ம்ய மதிகம் ப்ரஹ்மணே விது: |
ஸம்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ருணும்ச நிகத்யதே |
ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்ய மதிகம் ஹரே: |

என்ற மச்சபுராண வாக்கியத்தை ஆதரவாகக் கொண்டு சாத்துவிக முதலியவாகப் பிரித்துப் பேசுகின்றது. எந்தப் புராணம் எந்தக் கற்பத்திற் சொல்லப்பட்டதோ அந்தப் புராணம் அந்தக் கற்பத்துக்குரிய குணத்தை விஸ்தரித்து, அவ்விஸ்தாரத்தோடு அப்புராணக் கடவுளின் மகிமையைக் கூறுகிறது என்பதே அதன் தாற்பரியம். பிரமன் அவ்வக் குணமிகுந்தவனுயிருந்து அவ்வப் புராணத்தைச் சொன்னுன் என்பதற்கு அதில் பதப்பிரயோகமில்லை.

தாமச கற்பத்துச் சீவகோடிகளின் தோஷ நிவர்த்திக்குச் சிவ மாஹாத்மிய படனமே பரம ஔஷதம். அங்ஙனமாயின் மற்றைக் குணங்கள் மிகுந்த கற்பங்களிலுள்ள சீவகோடிகளின் உய்தி அப்படனத்தால் விரைவில் சித்திக்கும் என்பதில் ஐயமும் உண்டோ? மற்றைப் புராணங்களின்

படனங்களால் தாமச கற்பத்தின் தோஷத்தைப் போக்க முடியாது.

வரதன் எனத் திருமாலைச் சொல்வதுண்டு. ஆனால் கலியுகத்தார்க்கு அவனால் வரங்கொடுக்க முடியாது. அவ் யுகம் அவ்வளவு தீயது. கலியுக வரதன் என்பது முருகனது திருநாமம். அவனை வழிபடின் கலிதோஷம் விரைவில் நிவர்த்தியாகும். அவன் வரங்கொடுப்பதும் நிச்சயம். அவ் வழிபாடு மற்றை யுகங்களுக்கு அந்நலஞ் செய்யாமற் போமோ? அப்படியே புராணங்களைக் குணம் பற்றிப் பிரிப்பதாலும் சிவபுராணங்களிலுள்ள சிவமாஹாத்மியம் முக்குண கற்பத்து மக்களுக்கும் பரம ஔஷதமாகும் என்க.

மச்ச புராணமும் சிவபுராணமே. ஆதலின் அம்மதக் கொள்கைப்படி அதனைத் தாமசம், சுருதி விருத்தம் எனத் தள்ளிவிட வேண்டியதே. அதனைச் செய்யாமல் அப்புராண வாக்கியத்தை அம்மதம் தன்கொள்கைக்குப் பிரமாண மாகக் கொண்டது. அஃதேன்?

வைணவ புராணங்கள் ஸாத்விகம், சைவ புராணங்கள் தாமஸமே என்பதைப் பலபடியாலும் சிவனே உமைக்கு விவரித்தாராம். அதற்கு ஆதாரமாகப் பாத்மோத்தரம் என்ற புராணத்திலிருந்து சில வாக்கியங்களைச் சுதர்சனம் 218 தன் 6, 10, 11-ஆம் பக்கங்களில் எடுத்துக்காட்டி உள்ளது. சிவனும் உமையும் சுதர்சனத்தின் கொள்கைப் படி தாமஸ தெய்வங்கள், அவர்களின் சம்பாஷணையும் தாமஸபுத்தியுடன் கூடியதாய்த் தானிருக்கும் அது சுதர்சனத்துக்கு எப்படி பிரமாணமாயிற்று?

அன்றியும் பாத்மபுராணம் பிரமனுக்குரியது, ஆகலின் ராஜஸம், அதனைப் பிரமாணமாக எடுப்பது சுதர்சனத்துக்கு எப்படித் தகும்?

இன்னும் History of civilization in Ancient India based on Sanskrit Literature by Romesh Chandra Dutt of the

Bengal Civil Service, and of the Middle Temple, Barrister-at-law; Member of the Asiatic society of Bengal; Author of a Bengali Translation of the Rig Veda Samhita and other works.

People's Edition, Complete in one Volume, Calcutta, Tacker Spink & Co,. 1891, Page 664.

'Padma Purana:—The Uttara Khanda which is probably later than the other portions of the Purana, is intensely Vaishnava in its tone; the nature of Bhakti or faith in Vishnu, the use of the Vaishnava marks on the body, the legends of Vishnu's incarnations and the construction of images of Vishnu are all explained by Siva to his consort Parvati and they both fiinish by adoring Vishnu! We are also told that of the Hindu Trinity, Vishnu alone is entitled to respect! There can be no doubt much of this sectarian controversy has been added after the Moslem conquest of India. There is mention, even in the earlier books of this Purana, of *mlechchas* flourishing in India, while to the last portions of the work Dr. Wilson gives the 15th or 16th century A. D. as the probable date' (பாத்ம புராணத்தின், உத்தர கண்டமானது அப்புராணத்தின் மற்றைப் பாகங்கள் தோன்றிய நெடுங்காலத்திற்குப் பிறகு பெரும்பாலும் வைஷ்ணவ நடையில் எழுதப்பட்டதாகவே இருக்கிறது. விஷ்ணு பத்தியின் சொரூபமும், வைஷ்ணவ புண்டரதாரணப் பிரயோசனமும், விஷ்ணுவின் அவதார சரித்திரங்களும், விஷ்ணு விக்கிரகங்கள் செய்யும் விதிகளும் சிவனால் தன் தேவியாகிய பார்வதிக்குக் கூறப்பட்டனவென்பதும், அவ்விருவரும் இறுதிக்கண் விஷ்ணுவை வணங்கி நின்றனரென்பதும் வரையப்பட்டுள்ளன. இந்துக்கள் வணங்கும் திரிமூர்த்திகளில் விஷ்ணுவே வணக்கத்திற் குரியாரென்றுங் கூறுகிறது. (ஆகையால்) இந்தியாவை முஹம்மதியர் ஜயித்துக் கைக்கொண்ட காலத்திற்குப் பிறகு

தான் மதச்சண்டைகள் நடந்ததற்கு அறிகுறியாகிய இவ் விஷயங்களெல்லாம் எழுதப்பட்டனவென்பது சந்தேகமற்ற விஷயம். இந்த உத்தர கண்டத்தின் சில பூர்வ பாகங்களில் இந்தியாவில் மிலேச்சர் விருத்தியடைந்தமையுங் குறிக்கப் பட்டது. உவில்சன் என்னும் பண்டிதரும், இந்த இறுதிப் பாகங்கள் பெரும்பான்மையும் கி.பி. 15-ம், 16-ம் நூற்று ஆண்டுகளில் உண்டாயிருக்கலாமென்று காலவரையறையுங் குறித்தனர் ப-664). ஆகவே பாத்ம உத்தர கண்டமானது மதாபிமானத்தால் நவீனமாக எழுதிச் சேர்க்கப்பட்ட தொரு கற்பனைச் சுவடியென்பது தெரிகின்றது. சமய வாராய்ச்சிக்கு அது சிறிதும் பிரமாணம் ஆகாது. அதனைத் தள்ளிவிடுவதே மேல். அம்மதாபிமானிகளாலும், அவரைச் சார்ந்தவராலும் மற்றைப் புராணங்களிலும் அப்படிப் பல அவைதிகங்கள் சேர்க்கப்பட்டிருக்கும், அல்லது உண்மைப் புராண வசனங்கள் அங்கங்கே தம் மதாநுகூலமாகத் திரிவு செய்யப்பட்டிருக்கும். அப்பகுதிகளிளெல்லாம் சைவசமய பண்டிதோத்தமர்கள் கூர்ந்த கவனஞ் செலுத்த வேண்டியது மிகமிக அவசியம்.

அப்பைய தீக்ஷிதர் செய்தசிவகர்ணாமிர்தம், பிரமதருக்க ஸ்தவம், அப்புசாஸ்திரி செய்த விஷ்ணு தத்வ ரஹஸ்ய கண்டனம் முதலிய வடமொழி நூற்களிலும், சிவஞான போத திராவிட மஹாபாஷ்யம் முதலிய தமிழ் நூற்களிலும் சிவபுராண தாமஸத்வ கண்டனத்தை விரிவாகக் காணலாம்.

பிரமன் விஷ்ணு உருத்திரன் ஆகிய திரிமூர்த்திகளுக்கும் அதீதமாகிய துரிய மூர்த்தியே சைவசமயப் பரதெய்வமாகிய சிவபரம்பொருள். அதனைப் பிராகிருதமாகிய முக்குணங் களில் எக்குணமும் பற்ருது. வேருன எட்டுக் குணங்களே அதற்குள. அவற்றையும் சாத்துவிகமெனச் சிலர் உபசார மாகச் சொல்வர்.

புராணங்களுள் அபகர்ஷம் (குறை) பேசப்படும் உருத் திரர் நீலலோஹிதர் முதலிய சிவகணத்தராகிய உருத்திரரே

யாவர். அவர் துரீயசிவமல்லர். நீலலோஹிதர் முதலியோர் வேருக உளரென்பதைக் கிருஷ்ணர் - அர்ச்சுனர் இருவரும் பாசுபதாஸ்திரத்தின் பொருட்டுக் கைலாசத்துக்குச் சென்ற அமையத்து,

'தத: பார்ச்வே வ்ருஷாங்கஸ்ய ப்ரஹ்மசாரீந்ய-
வர்த்தத |
பிங்காக்ஷஸ் தபஸ: க்ஷேத்ரம் பலவாந் நீலலோஹித: |'

(சிவபெருமானுடைய ஓர் பக்கத்தில் நின்ற பிரமசாரியும், பிங்கல நேத்திரரும், தபசுக்கு ஸ்தானமாயினரும், பலவானு மாகிய நீலலோகிதர் வந்தனர்) என்ற துரோண பர்வத் தாற் காண்க. அந்த முறையில்.

'சிவபுராணம் பத்தும் சாத்துவிகங்களாம். சத்துவ குணம் வெண்ணிறமுடையதும் சுகத்துக்கும் ஞானத்துக்கும் இடமுமாம், யோகிகளுக்கு ஞானம் உபதேசிக்கும் சிவபெருமான் தெளிபளிங்கு வடிவி னராய் எங்குமுறங்காது பிராமணுதிபதியாயிருப்பர்',

'விட்டுணு புராணம் நான்கும் தாமசங்களாம். தமோ குணம் கருநிறமுடையதும் உதாசீனரூபமும், கூட கிருத் திய சமர்த்தமுமாம். நித்திரை, சோம்பு, பிரமாதம், வஞ்ச னம் முதலியவைகள் தாமசங்கள். விட்டுணு கரியரும், சேஷசயனம் செய்வோரும் பக்தரை மோகிப்பிப்பவருமா யிருப்பர்,

'பிரமபுராணம் இரண்டும் இராசசங்களாம். இரசோ குணம் சிவந்த நிறமுடையதும் துக்கத்துக்கிடமும் சஞ்சல ரூபமுமாம். பிரமாச் செந்நிறமுடையராய்ச் சஞ்சல ரூபியாயிருப்பர்,

'அக்கினி புராணமும் சூரிய புராணமும் திரிகுணயுத்த மாம். அக்கினியுஞ் சூரியனும் முக்குண வடிவினரா யிருப்பர்.

ஆதலால், இப்பதினெட்டினுள்ளுஞ் சிவபுராணங்கள் பத்துமே உயர்ந்தனவாம். ஆகையாற் சிவனடியார்கள் சிவ புராணங்களையே விதிப்படி மெய்யன்போடு கேட்கக் கடவர்கள்'

என்றார் யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள்.

சிவபுராணம் பத்தனுள் ஸ்காந்தபுராணமும் ஒன்று. அதன் ஒரு பகுதியைக் கச்சியப்ப சிவாசாரியார் தமிழில் மொழி பெயர்த்து அழகு ததும்பிய 10345 செய்யுளாகப் பாடி கந்த புராணம் எனவே பெயரிட்டு வைத்தார். அது சுப்பிரமணிய சுவாமியின் பிரபாவத்தைச் சாங்கோ பாங்கமாய் எடுத்து விரிப்பது. தமிழிற் பேரிலக்கியமாய்த் திகழ்வது, சைவ சமய உண்மைகளைப் பலவிடங்களில் விளக்குவது, சிவபரத்துவ நறுமண மலராய் ஒளிர்வது. அவ் வாசிரியர் வடமொழி மூலக் கந்தபுராணத்தைப் பற்றிப் பேசும் போது அது சரித்திர சாகரம், கதைக் களஞ்சியம் எனப் புகழ்கிறார்.

'புதுமயி லூர்பரன் புராணத் துற்றிடாக்
கதையிலை யன்னது கணித மின்றரோ
அதுமுழு தறையவெற் கமைதற் பாலதோ
துதியுறு புலமைசேர் சூதற் கல்லதே'

என்றது அப்புராணத்து அவையடக்கம்.

கந்தபுராணத்தில் வந்துள்ள கதைக்குக் கணக்கில்லை. அக்கதைகளைச் சொல்ல வல்லவர் அறிஞரெல்லாந் துதிக்கத் தந்த புலமை மிக்க சூத முனிவரொருவரே யென்பது அச் செய்யுள் கருத்து. யாரேனும் ஏதேனும் ஒரு கதை சொன்னால் அதனைக் கேட்டவர் அதன் சிறப்பை அனுபவிக்கு முகத்தால் இந்தக் கதை கந்தபுராணத்திற்றானுங் கிடையாதே எனக்கூறி வியப்பர். அது கந்தபுராணத்தை வியந்தபடியாம். அதனால் 'காந்தம் புகாக் கதையில்லை' என்ற பழமொழி நல்லோர் அரங்கில் வழங்கி வரலாயிற்று.

ஆனுல் அச்செய்யுளைப் படித்திராத, படித்திருந்தால் அருத்தந் தெரியாத, அல்லது விஷமப் புத்தியுள்ள யாரோ ஓர் அறிவிலி அப்பழமொழியை 'எந்தப் புளுகும் கந்த புராணத்தில்' என மாற்றி வழங்கலானுன். ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் 214 பக்கம் 1இல் அவ்வபத்த மொழி ' 'என்பதற்கிடையில் வைக்கப்பட்டிருக்கிறது. அதற்கும்ஆநுசாரிகள் கிடைத்திருப்பது காலக் கொடுமை. அதனைப் புகலாகக் கொண்டு அப்பத்திரிகை

'லிங்கத்திலிருந்து பிறந்த முருகனை'

'ஆதி பரம் பொருளை ஈனத் தனமான முறையிலே தாக்கும் அபத்தக் கதைகளை'

அதிமானுஷ்யச் செயல்களைச் செய்யச் சக்தியற்றுக் கிடந்த சிவன் முதலான தெய்வங்கள்'

'பொய்க் கதைகள் பலவற்றைப் புனைந்து சிஷ்ட பரிக்ரஹமில்லாத தாமஸ புராணங்களிற் சேர்த்துக் கொண்டார்கள்'

'விஷ்ணு த்வேஷத்திற் கென்றே இட்டுப் பிறந்த நாயன்மார்களுடையவும், அவர்களைப் பின்பற்றியவர்களுடையவும் நூல்களில் தவிர வேறு எந்த நூல்களிலும் இக் கதைகளைக் காண முடியாது'

'ஸர்வ ம்ருதி விருத்தமான கந்தபுராணக் கட்டுக்கதைகளை'

'சிவனும் பார்வதியும் புணர்ந்ததனுல் சிவனின் வீரியம் விழுந்து அதனுல் உண்டான முருகன்'

முதலிய பலவற்றை எழுதியிருக்கிறது. அவையெல்லாம் சைவ சமய தெய்வத்தையும், நூற்களையும், அடியார்களையும் மிகக் கீழ்த்தரமாகப் பேசிய பேச்சுக்களல்லவா? பாவைக் கூட்டு மகாநாடுகள் வீண் வேலையும், வீண் செலவும், போது போக்குமேயாகும் என்பதற்கு அவை ஒரு சான்றுகும். பச்சை மண்ணும் சுட்ட மண்ணும் ஒட்டினுலும் ஒட்டும்

சைவ வைஷ்ணவங்கள் ஒரு நாளும் ஒட்டா. வெவ்வேறு சமயங்களைச் சமரசப்படுத்த முயவ்வது நாய் வாலை நிமிர்த்த முயல்வதோடொக்கும். அது கிடக்க.

மற்றைத் தெய்வங்களைக் கீழ்ப்படுத்திக் குன்றின் மேலிட்ட தீபமாய்ப் பிரகாசிப்பது சிவபரத்துவமொன்றே. 18 இல்10 புராணங்கள் அதனை அங்கீகரித்து அப்பெருமானை வந்திப்பதொன்றே அதற்குச் சாட்சி. நூற்புரட்டுக்களால் அவன் பரத்துவத்தில் ரோமக்கால் அளவு தானும் அசைக்க முடியாது. ஆனால் அவனது பரத்துவத்தை அறியு முறையில் அறிந்து ஊக்கங் குறையாமல் வந்தித்து ஆன்மலாபத்தைத் தேடிக் கொள்ள மாட்டாமல் சைவசமூகம் வாழ்நாளை வீழ்நாளாகக் கழிக்க நேரும். அந்நஷ்டம் இப்போதுள்ள தலைமுறைக்கு மட்டிலன்றி இனிவருந் தலைமுறைகளுக்கும் வந்து சேரும். சந்ததி விருத்திக்கு ஆசைப்படுவோர் முதலில் அந்நஷ்டம் உண்டாகாத வழியைத் தேடிக் கொள்ள வேண்டும். அஃதின்றிப் பெறப்படும் சந்ததிகள் சைவ சமயப் பிரக்ஞையின்றி வளர்ந்து வேற்றுச் சமய விலங்குகளுக்கே இரையாகும். அதற்காகவா அச் சமூகம் சந்ததி விருத்தி செய்ய வேண்டும்? அதை விடச் சந்ததி வறந்து போவது நலமன்றோ? பிறந்து பிறந்து அவ்வப் போதே எமனுக்கு இரையாய் விடும் என்பதை முன்னமே யறிய வல்லவொருவன் பிள்ளை பெறச் சிறிதும் ஆசைப்படுவானோ?

சைவ சமயத்தைப் பறிகொடுத்துக் கொள்ளப்படும் மொழிப்பற்றுச் சைவசமயியாவானுக்கு மொழி வெறியேயாகும். அவன் தன் சமயத்துக்குப் பிரதான ஸ்தானங் கொடுத்து, அதனைத் தொடர்ந்து மொழியைப் போற்ற வேண்டும். அதனால் அம்மொழிப்பற்று அவனுயிர்க்கே இன்பம்ஊட்டும். வடமொழியில் சைவசமய நூற்கள் கணக்கின்றியுள்ளன. அவை மற்றை மொழிச் சைவ நூற்களுக்குத் தந்தை தாய். அவற்றை உருமாறாமல் அவசியம் காக்க

வேண்டும். அதற்காகச் சைவ சமயத்தினர் தம் மாகாண மொழியைக் கற்பதோடு தேசியமாகிய வடமொழியையும் திறம்படக்கற்றல் அவசியம். அஃதின்றேல் தம் வாழ்க்கையை வீணே கழித்தவர், தம் புத்திரர்களையாவது அக்கல்வியிற் செலுத்தி அறிவுடையராக்குவாராக. இல்லா விட்டால் வேற்றுச்சமயிகள் நம் சமயத்தைச் சுற்றியிட்ட முற்றுகையை முறியடிக்க முடியாது. சைவ சமயிகளுக்கு இஃதொரு முன்னறிவிப்பாகும்.

[**கட்டுரை ஆசிரியர் பற்றிய குறிப்பு:** — 12-3-1897 இல் பேட்டையைச் சார்ந்த ஸ்ரீ த. ஆறுமுகநயினர் பிள்ளைக்கு ஈசுரவடிவு அம்மையார் பால் ஸ்ரீமாந் ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்கள் தோன்றினர்கள். காலஞ்சென்ற திருவாவடு துறையாதீன வித்வானும், திருநெல்வேலி இந்துக் கல்லூரி உயர்நிலைப் பள்ளித் தமிழ் போதகாசிரியருமாகிய ஸ்ரீமாந் வி. சிதம்பரராமலிங்கப் பிள்ளையவர்கள் இவர்க்கு சமய ஆசிரியராவர். இவர் தந்தையாரே சிறந்த கவிஞரும் நூலாசிரியருமாவார். இவர் 1922 முதல் 1958 வரை ஆசிரியர் பணியாற்றினர். பலநூறு மாணவர்களுக்குச் சமய சாத்திர போதக ஆசிரியராகவுமிருந்தார். சைவ சாத்திரங்கள் பலவற்றிற்கு தெளிந்த தமிழில் உரை இயற்றி வெளியிட்டுள்ளார்கள். செய்யுள் நூல்கள் நான்கு ஆக்கியுள்ளார். உரைநடை நூல்களாக 20 ஆக்கி வெளியிட்டுள்ளார்கள். 'சிவநேசன், சமயஞானம், செந்தமிழ்ச் செல்வி, சைவ சாஸ்திர பரிபாலனம், செந்தமிழ் சிவாகம வித்யா, குமர குருபரன்' போன்ற பல பத்திரிகைகளில் இவர் எழுதிய கட்டுரைகள் நூற்றுக்கணக்கிலாகும். 'சமயசாதனம்' எனத் திருநெல்வேலியிலிருந்து வெளிவந்த பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்தார். அதற்கென எழுதி வைத்திருந்ததே இக்கட்டுரை. இதுவரை பிரசுரமாகவில்லை. இவர் ஆக்கிய 'சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும்', 'நாடும் நவீனரும்' என்ற இரு நூல்களும் தமிழ் நாட்டில் ஒரு புரட்சியையே ஆண்மையோடு நிகழ்த்தின. தமிழக அரசு

பிறப்பித்த தமிழ் அர்ச்சனை உத்தரவு ஆகம விரோதமானது என சுப்ரீம் கோர்ட்டில் தொடுக்கப்பட்ட வழக்கில் இவ்விரு நூல்களும் சாட்சியங்களாய் நின்றிலங்குகின்றன.

திருவாவடுதுறையாதீனத்து 22-ம் குருமஹா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகமூர்த்திகள் 30-5-1968 அன்று கல்லிடைக்குறிச்சிக்கு வரவழைத்து ஸ்ரீமாந் ஆ. ஈ. பிள்ளையவர்களை ஆதீனவித்துவானாக நியமித்தருளினர்கள். இவர்கள் ஆக்கிய 'அத்வைதம்' என்ற உரைநடை நூலும் திருமடத்து நூலாக வெளி வந்தது. இடைவிடாது சமயப் பணியாற்றிய நமது ஆசிரியர் தம் 75-ம் வயதில் 19-10-71 அன்று சிவபிரான் திருவடியடைந்தார்கள்.

இக்கட்டுரை, இவ்வாசிரியரது மாணவராகிய வித்வான்-ஸ்ரீ ச. இரத்நவேலன் அவர்களால் நமது மலர்க்கு அனுப்பப் பட்டது.]

# கூர்மபுராணக் கதைகள்

Dr. ந. கங்காதரன், M.A., M.Litt., Ph.D.

## முன்னுரை

பதினெட்டு மஹா புராணங்களில் ஒன்ருன கூர்ம புராணம் இரு பகுதிகளாக உள்ளது. அதன் முதற் பகுதியில் 53 அத்தியாயங்களும் இரண்டாம் பகுதியில் 45 அத்தியா யங்களும் உள்ளன. திருமாலின் ஆமை (கூர்ம) வடிவினுல் கூறப்பட்டது என்பதனுல் இதற்கு அந்தப் பெயர்.

புராணங்களுக்கு இருக்க வேண்டிய ஐந்து முக்கியமான அம்சங்கள் பெரும்பான்மையான புராணங்களில் காணப் படுவதில்லே. கூர்ம புராணத்திலும் அந்த அம்சங்கள் குறை வாகவே காணப்படுகின்றன.

உலகின் படைப்பைப்பற்றியும், மனுவின் வமிசத்தைப் பற்றியும், சூரிய, சந்திரவம்ச மன்னர்களின் பரம்பரையைப் பற்றியும், பலவிதமான நோன்புகள், தானங்கள் இவற்றைப் பற்றியும் இங்கு கூறப்பட்டுள்ளது

சைவ சம்பந்தமாகக் கூறுங்கால் காசி க்ஷேத்திரத்தில் உள்ள பல்வேறு புண்ணிய தலங்களேப் பற்றி விரிவாகவும். இங்கு சுருக்கிக் கூறப்பட்டுள்ள சிவ வழிபாட்டின் மேன்மையை விளக்கும் கதைகள் விரிவாகவும் இந்தப் புராணத்தில் கூறப்பட்டுள்ளன.

இந்த புராணத்தின் தமிழ் பா வடிவாக்கம் அண்மையில் தஞ்சை சரபோஜி மன்னன் ஸரஸ்வதி மஹால் நூல் நிலேயத் தாரால் வெளியிடப்பட்டுள்ளது. தவிரவும் உரை நடையில்

திரு. கார்த்திகேயன் எழுதிய புத்தகமும் சென்ற ஆண்டு வெளி வந்துள்ளது.

இப்புராணத்தின் மேன்மை மும்மூர்த்திகளின் சிறப்பைக் கூறி அதிலும் முக்கண்ணனை மேலும் சிறப்பாகக் கூறியிருப்பதேயாகும்.

## (1) பிரம்ம விஷ்ணுக்களின் முன் தோன்றிய பரமன்

பலவிதமான படைப்புகளைப் பற்றி கேட்டறிந்த பின் நாரதர் முதலான முனிவர்கள் நான்முகனின் பிறப்பைப் பற்றியும் சிவனுர் அவருக்கு மகனுக ஏற்பட்டதையும் திரு மாலிடம் கேட்கின்றனர்.

ஒரு ஸமயம் பிரபஞ்சத்தில் ஜீவராசிகள் எதுவும் இல்லாதபொழுது திருமால் அனந்தன் என்னும் அரவத்தின் மீது படுத்து துயில் கொள்ளவும் விளையாட்டாக அவருடைய தொப்புளிலிருந்து ஒரு கமலம் தோன்றியது. அது பரந்து விரிந்திருந்தது. அந்த இளஞ் சிவப்பு மலரின் இதழ்கள் முதலியனவற்றிலிருந்த நறுமணம் நாற்றிசையிலும் பரவி யது. அவ்வமயம் தற்செயலாக அங்கு வந்த நான்முகன் படுத்துறங்கும் திருமாலை எழுப்பினர். மக்கள் நடமாட்ட மில்லாதிருக்க பிரமனைக் கண்ட திருமால் வியப்படைந்தார். பிரமனும் திருமாலின் கண்ணைக் கவரும் தோற்றத்தைக் கண்ணுற்று வியந்தார்.

நான்முகன்—இருள் சூழ்ந்து மக்கள் சஞ்சாரமற்ற இந்த நிலையில் படுத்துறங்கும் நீர் யார்?

திருமால்—(நகைத்தவண்ணம்) தேவலோகத்திற்குத் தலைவ னும், சிறந்த யோகியும், மிகவும் புகழ் பெற்றவனும், அழிவற்றவனுமான நாராயணன் நான் என்பதை நீர் அறிவீராக. என்னில் அனைத்து உயிர்களும் உறை கின்றன என்பதையும் அறியும்.

நான்முகன் --(நகைக்து) நானே பாட்டனுர். தானே தோன்றியவன். என்னில் உலகமனைத்தும் உறைகின்றன. உமது கூற்று மிகவும் வேடிக்கையாக இருக்கிறது.

இதைக் கேட்ட திருமால் யோக முறையினுல் நான் முகனின் உடலில் புகுந்து, அங்கு அவருடைய வயிற்றில் தேவர்கள், அரக்கர்கள், மனிதர்கள் இவர்களுடன் கூடிய மூவுலகையும் கண்டு வியப்படைந்தார்.

திருமால்—நீரும் இதேபோல் என் வயிற்றினுள் புகுந்து பல் வேறு உலகங்களையும் காணுவீர்.

அவ்விதமே திருமாலின் வயிற்றினுள் புகுந்த நான் முகனும் அதே உலகங்களைக் கண்ணுற்றபின் வெளியே வர வழி புலப்படாது குழப்பமடைந்தார். வெளிவரும் வழிகள் அனைத்தையும் திருமால் மூடி விடவே தொப்புள் துவாரத்தின் மூலம் மலர்ந்த தாமரையில் தோன்றினுர்.

நான்முகன்—என்னை வெல்ல வேண்டுமென்று நீர் என்ன காரியம் செய்தீர்?

திருமால்—படைப்பவர் நீர் என்று உம்மை நான் அறிவேன். பொருமையினுல் நான் வெளிவரும் வழிகளை அடைக்க வில்லை. நான் இதை விளையாட்டாகச் செய்தேன் என்று அறிந்து கொள்வீராக. நான் செய்ததைப் பொறுத்து தாமரையினின்றும் தோன்றியவர் என்று பொருள் கொண்ட 'பத்மயோனி' என்ற பெயருடன் என் மகனுகச் சிறப்படைவீர்.

நான்முகன்—நீரோ அனைத்துயிரிலும் குடி கொண்டவர். உலகங்களனைத்தும் என்னில் குடி கொண்டுள்ளன. நம் மிருவரைத் தவிர உலகிற்கதிபர் மற்று வேறெவரும் இல்லை.

திருமால்—இந்த உம்முடைய கூற்று உம்முடைய அழிவிற்கு அடிகோலும். சிறந்த யோகிகளும் உணர்ந்த பரம

சிவனை நீர் அறிந்தீர் இலரோ? அந்த பரம்பொருளை நீர் சரணடைவீராக.

நான்முகன்—(சினந்து)நான் என்னைப்பற்றி நன்கு அறிவேன். நம்மிருவரையும் தவிர மேம்பட்ட பரமேச்வரன் என்றொருவர் இல்லை. உம்முடைய துயிலை விட்டு நீர் உம்மையே நன்கு நோக்குவீராக.

திருமால் அந்தப் பரமனைப் பற்றி இழிவாகப் பேசாதீர். எனக்குத் தெரியாததல்ல. நான் மாற்றிப் புகலவில்லை. அந்தப் பரமனின் சக்தி என்னைக் கவருகிறது என்பதை நான் நன்கு அறிவேன்.

இவ்விதம் புகன்று திருமால் வாளாவிருக்க, தன்னைப் பற்றி உண்மையுணர்ந்திருந்த நான்முகன் எப்படி பரமன் யாவற்றிற்கும் மேம்பட்டவர் என்று வியந்திருக்கும் பொழுது நான்முகனுக்கு அருள விரும்பிய சிவனார் நெற்றிக்கண்ணுடனும், சடைமுடி அணிந்தும் கையில் சூலம் தாங்கியும், ஒளி திகழ்பவராகவும், மற்றும் சந்திரன் சூரியன் தாரகைகள் புடைசூழ அவர் முன் தோன்றினார். அவருடைய பேரொளியால் மயங்கிய நான்முகன் திருமாலிடம் கேட்டார்.

நான்முகன்—முக்கண்ணனாய் சூலமேந்தி ஒளிக்கிருப்பிடமாய்த் தோன்றும் இவர் யார்?

திருமால்—(பரமனையுணர்ந்தவராய் பிரம்மதேவனை நோக்கி) இவரே அழிவற்றவரும், உயர்ந்த சோதியும், உலகங்களனைத்திற்கும் தலைவரும், உலகினைப் படைத்து வளர்த்து அழிப்பவரும், உம்மைப் படைத்து மறைகளை உம்மிடம் அருளியவருமான பரமேச்வரன். இவருடைய ஒரு வடிவே நான் என்பதையும் அறியும்.

திருமாலின் கூற்றினைக் கேட்ட நான்முகனும் நுண்ணறிவு பெற்று பரமனின் மேம்பட்ட தன்மையை உணர்ந்து அவரைப்பணிந்தார்.

சிவனர்— (மகிழ்ந்தவராக) நீர் எனக்குச் சமமானவர் என்பதில் சிறிதளவும் ஐயமில்லே. என்னுடைய பக்தனை நீர் உலகினைப் படைக்கும் பொருட்டு என்னுலேயே படைக்கப் பட்டவர். நீர் வேண்டும் வரனைக் கொடுக்க விரும்புகிறேன். நீர் கேளும்.

நான்முகன்—(சிவனரிடம் மிகப் பணிவுடன்) தேவே! உம்மையே மகனைகப் பெற விழைகிறேன். இல்லையெனில் உம்மையொத்த மகனையாவது பெற அருள் தாரும். நுண்ணிய உமது மாயையினல் நான் கவரப்பட்டேன். பரமனே! உமது பக்தர்களுக்கு நீரே தாய், தந்தை, உடன்பிறந்தோர் முதலிய அனைவரும். நான் உம்முடைய திருவடிகளைப் பணிகின்றேன்.

சிவனர்—(பிரமதேவனைப் பார்த்து பின்னர்) நீர் வேண்டியதைச் செய்கின்றேன். நீர் அறிவிற்கு அதிபர். அனைத்துயிரையும் படைப்பவர் நீரே ஆவீர். அவர்களிடம் உம்முடைய மாயையைக் காண்பிக்கவும். என்னுடைய இன்னெரு வடிவான இந்தத் திருமாலும் உம்முடைய நலனைக் கண்காணிப்பவராக இருப்பார். (பின்னர் திருமாலின் பக்கம் திரும்பி) உம்முடைய பக்தியினல் மனம் மகிழ்ந்தேன். நீர் விரும்பியதைக் கேளும். உண்மையில் நம்மிருவருக்கிடையே பேதம் எதுவும் இல்லை.

திருமால்—நான் வேண்டுவது ஒன்றே ஒன்று தான். உம்மிடம் எனக்கு என்றும் குறைவற்ற பக்தி வேண்டும் என்பது தான்.

சிவனர்—அப்படியே ஆகட்டும்.

## (2) தக்கன் ஆணவம் அழித்தல்.

சுவாயம்புவ மனுவின் வமிசத்தில் தோன்றியவன் தக்கன். பிராசேதஸ்களுக்கும் மாரிஷை என்பவளுக்கும்

பிறந்தவன். முன்னர் நான்முகனுக்கு மகனுகத் தோன்றி பரமேச்வரனுடன் வாதம் செய்து சினந்த அவரால் சபிக்கப் பெற்று அதனுல் பிராசேதஸ் என்பவர்களுக்கு மகனுகப் பிறந்தவன். சிவனுருடன் தனக்கேற்பட்ட முன்பகைக் காரணமாக ஹரித்துவாரத்தில் தான் செய்யும் வேள்வியில் சிவனுருக்குப் பங்கின்றி திருமால் முதலான அனைவரையும் மட்டுமே அழைத்தான். ததீசர் என்னும் மாமுனிவர் அவனிடம் இதன் காரணத்தைக் கேட்டார்.

ததீசர்—தக்க! எந்த ஒரு தேவனின் ஆணைப்படி நான்முகன் முதற்கொண்டு பிசாசுகள் வரை செயல்படுகின்றனவோ அந்தப் பரமனுகிய ருத்திரனை முறைப்படி நீ ஏன் வணங்கவில்லை?

தக்கன்—மாமுனிவரே! வேள்விகள் அனைத்திலும் அவருக்கு பங்கு ஒதுக்கப்படவில்லை. அதனுல் நான் அவரை வழி படவில்லை.

ததீசர்—தக்க! எந்த ஒருவர் யாவருக்கும் மேம்பட்டவரோ, எந்த ஒருவரிடமிருந்து யாவும் செயல்படுகின்றனவோ, அந்த சங்கரனை அறிந்தும் கூட வேள்விகளின் மூலம் ஏன் வணங்கமாட்டேனென்கிருய்?

தக்கன்—மாமுனிவரே! இந்த ருத்திரன் நன்மை பயப்பவர் அல்லர். அழிப்பவர். தாமஸகுணமுடையவர். ஆடையின்றித் திரிபவர், மண்டை ஓட்டைத் தாங்குபவர். இவருக்கு உலகின் ஆன்மாவானவர் என்பது ஒவ்வாதது. பரமன் நாராயணரே, உலகினைப் படைக்கும் உத்தமர், உண்மையின் வடிவானவர் அவர் என்பதினுலே அவரை யாவற்றிலும் வழிபடுகின்றேன்.

ததீசர்—தலைவனே! ஆயிரம் கதிர்களுடைய இந்தப் பரமனை நீ காணவில்லையா? காலனின் வடிவான பரமேச்வரன் உலகமனைத்தையும் அழிப்பவர். பிரம்மனை உணர்ந்த அறிவாளிகள் எந்த ஒருவரை போற்றுகின்றனரோ

அந்தப் பரமன் யாவற்றிற்கும் ஸாக்ஷி ஆவார். முவ் வடிவுடைய இந்தப் பரமன் ஆதித்யன் முதலான அனை வரும் ஆவார்.

**யம் க்ருணந்தீஹ வித்வாம்ஸோ**
**தார்மிகா ப்ரஹ்ம வாதின: |**
**ஸோ(அ)யம் ஸாக்ஷீ தீவ்ரருசி**
**காலாத்மா சாங்கரீ தநு: ||**
**ஏஷ ருத்ரோ மஹா தேவ:**
**கபாலீச க்ருணீ ஹர: |**
**ஆதித்யோ பகவாந் ஸூர்யோ**
**நீலக்ரிவோ விலோஹித: ||**
**ஸம்ஸ்தூய தே ஸஹஸ்ராம்சு:**
**ஸாமகாத்வர்யு ஹோத்ருபி: |**

தக்கன்—மாமுனிவரே! வேள்வியில் தம் தம் பங்கைப் பெற வந்திருக்கும் இந்த பன்னிரு ஆதித்யர்களே சூரியர்கள் என்பவர்.

தக்கன் இம்மாதிரி கூறவும் அங்குக் குழுமியிருந்த மாமுனிவர்களுமே இருள் சூழ்ந்த மனமுடையவர்களாக சிவனுரைக் காணுமல் நாரணனின் மாயையினுல் மயக்க முற்றவர்களாக தக்கனின் கூற்றை மதித்தனர். இந்திரன் முதலான தேவர்களும் தம் பங்கினைப் பெற வந்து சேர்ந் தனர். வந்தவர்கள் நாரணனைத் தவிர பரமனைக் காண வில்லை. நான்முகனும் பிறர் காணும் பொழுதே நொடியில் அங்கிருந்து மறைந்தார். நான்முகன் மறைந்த உடன் தக்க னும் நாரணனைச் சரண் புகுந்தான். பின்னர் தக்கன் அச்ச மின்றி அந்த வேள்வியைத் துவங்கினுன். ததீசர் என்னும் மாமுனி மீண்டும் தக்கனுக்கு அறிவுரை கூறினுர்.

ததீசர்—தக்க! தகாதவரை வழிபடுவதினுலும், தகுந்த வரை வழிபடாததினுலும் மனிதன் பெரும் பாவத் தைச் செய்கின்றுன் என்பதில் ஐயம் எதுவும் இல்லை.

எங்கு நேர்மையற்றவர் போற்றப்பட்டும் நேர்மையுற்ற வர் ஏளனத்திற்கும் இலக்காகின்றனரோ அங்கு தெய் வத்தின் கடுமையான தண்டனை ஏற்படுகிறது.

(இவ்வாறு எடுத்துரைத்த மாமுனிவர் பின்னர் கூறிய வண்ணம் அவர்களைச் சபித்தார்).

எந்த ஒரு வேள்வியினின்றும் பரமன் உங்களால் புறக் கணிக்கப்பட்டாரோ அதன் பலனாக நீங்கள் அனைவரும் மூன்று மறைகளினின்றும் வழுவியவர்கள் ஆவீர்கள். மெய் அறிவின்றி கொடும் கலியுகத்தில் பிறந்து அந்த இன்னல்களை அனுபவிப்பீர்கள். அதனின்று விடுபட்டும் கூட நாரணன் உம்மிடம் பராமுகமாக இருப்பார்.

(இவ்வாறு கூறி முடித்த மாமுனி தன் மனத்தால் ருத்தி ரனைப் பணிந்தார்).

இதற்கிடையில் தேவியானவள் தன் கணவர் மஹா தேவரை அணுகி, நடந்தவை அனைத்தையும் அறிந்தவளாக வேண்டினாள்.

தேவி—நாத! முன் பிறப்பில் என் தந்தையான தக்கன் செய்யும் வேள்வியில் கூடியிருக்கும் பலர் முன்னிலையில் உம்மை இழிவாகப் பேசி இருக்கிறான். அந்த வேள்வியை உடனே சென்று அழியும். இதுவே என் வேண்டுகோள்.

இம்மாதிரி தேவியினால் வேண்டப்பட்ட பரமன் ஆயிரம் தலை உடையவனும், சினந்தவனும், ஆயிரம் கண்களை உடையவனும், ஆயிரம் நீண்ட கைகளை உடையவனும், அடக்க முடியாதவனும், யுகத்தின் முடிவில் தோன்றும் நெருப்பைப் போன்று ஒளிர்பவனும், அச்சுறுத்தும் பற்களை உடையவனும், சங்கு சக்கரம் முதலியனவற்றுடன் கூடிய வனும், வில்லைத் தாங்கி நிற்பவனுமான வீரபத்திரன் என்னும் ருத்திர வடிவானவனைத் தோற்றுவித்தார்.

ஸஸர்ஜ ஸஹஸா ருத்ரம்
தக்ஷயக்ஞ ஜிகாம்ஸயா |
ஸஹஸ்ரசிரஸம் க்ருத்தம்
ஸஹஸ்ராக்ஷம் மஹாபுஜம் ||
ஸஹஸ்ரபாணிம் துர்த்தர்ஷம்
யுகாந்தானல ஸந்நிபம் |
தம்ஷ்ட்ராகராலம் துஷ்ப்ரேக்ஷ்யம்
சங்கசக்ரதரம் ப்ரபும் ||
தண்டஹஸ்தம் மஹாநாதம்
சார்ங்கிணம் பூதிபூஷணம் |

தோன்றியவுடன் தன்னை வணங்கி நிற்கும் வீரபத்திரனை, தன்னை நிந்தித்து தக்கன் நடத்தும் வேள்வியை அழித்து வெற்றியுடன் திரும்பிவா என்று கட்டளையிட்டார். பிணைப்பினின்று விடுபட்ட ஒரு சிங்கம் போல வீரபத்திரன் தக்கனின் வேள்வியை அழிக்க விரைந்தான். உமாதேவியினால் படைக்கப்பட்ட பத்திரகாளியும் கணங்கள் பல புடைசூழ அவனுடன் புறப்பட்டாள். அனைவரும் தக்கன் வேள்வி நடத்தும் இடத்தை விரைந்து சென்றடைந்தனர். சிவனுருக்கான பங்கைத் தங்களிடம் கொடுக்கக் கோரி வேள்வியை பின்னர் பூர்த்தி செய்யுமாறு வீரபத்திரன் கூறியதைக் கேளாத தக்கன் ஏளனம் செய்யவே சினந்த வீரபத்திரன் வேள்விக்கான பொருள்களைக் களைந்து கங்கையில் எறிய, கணங்கள் மற்ற தேவர்களையும் பல விதமாகத் துன்புறுத்தி அவர்களுக்கு உதவ வந்த கருடனையும் விரட்டியடித்தனர். அதன் பின்னர் அங்கு வந்த நான்முகன் வீரபத்திரனை சாந்தப்படுத்தி சிவனுரைப் போற்றிப் பாடவும், சிவனுரும் அங்கு வந்து அவர்களுடைய புகழ் மாலையை ஏற்று தம்மை நிந்தித்த அனைவரையும் மன்னித்தருளினர்.

## (3) அந்தகாசுரன் சிவகணங்களில் ஒன்றுனது.

இரண்யகசிபுவின் மகனுன பிரகலாதன் யோக நெறியை கடைப் பிடித்தலில் மனம் லயித்ததால் அவனுடைய

பேரரசை அந்தகன் என்னும் அரக்கன் பெற்ருன். முன் ஞெரு சமயம் தாருக வனத்தில் ஏற்பட்ட கடும் வரட்சியின் காரணமாக அங்கிருந்த மாமுனிவர்கள் மாமுனிவர் கௌதமரை அண்டி தம்முயிர் காக்க வேண்டினர். அவரும் அவர்களுக்கு வேண்டிய மட்டும் உணவைப் படைத்துக் கொடுத்து மகிழச் செய்தார் பன்னிரண்டு ஆண்டுகள் இன்ப மாகக் கழிந்தன. பின்னர் ஏற்பட்ட பெரும் மழை காரண மாக மீண்டும் தங்களது முன்னர் இருப்பிடம் செழிப்படைய அம்முனிவர்கள் திரும்பிச்செல்ல கௌதம முனிவரிடம் அனு மதி கேட்டனர். அவர் அவர்களை இன்னும் சிறிது காலம் தங்கி விட்டுப் போகுமாறு வேண்டினர். அவருடைய வேண்டு கோளைப் புறக்கணிக்க முடியாத முனிவர்கள் ஒரு உபாயம் செய்தனர். அவர்களனைவரும் சேர்ந்து ஒரு மெலிந்த பசு வைத் தோற்றுவித்து அதனை அம்முனிவரிடம் அனுப்பினர். அவரும் அதனை அன்புடன் தடவிக் கொடுத்து கொட்டிலில் கட்ட முற்படுகையில் முனிவர்களின் மாயையினுல் அது இறந்தது. அம்முனிவர்கள் அனைவரும் எம்மட்டில் பசுவைக் கொன்ற பாவம் அவரை விட்டு அகலவில்லையோ அதுவரை தாங்கள் அவரளிக்கும் உணவை ஏற்க முடியாதெனக் கூறி தாருகவனத்திற்குத் திரும்பிச் சென்றனர். தன் நுண்ணறி வினுல் நடந்தவை யாவற்றையும் உணர்ந்த மாமுனிவர் மிகவும் சினந்து அவர்களுக்கு "நீங்களனைவரும் மிகவும் பாவிகளுக்கொப்பாக மூன்று மறைகளினின்றும் விலக்கப் பட்டவராவீர்" என்று சாபமிட்டார்.

அதற்கஞ்சிய முனிவர்கள் பரமனுன சங்கரரை அண்டி தங்களைக் காத்தருள வேண்டினர். சிவனும் பக்கத்திலிருந்த திருமாலிடம் இவர்களுக்கு என்ன வழி என்று கேட்டார். திருமாலும் மறைகளினின்றும் விலக்கானவர், பெரும் பாவத்திற்காளானவராகிய அவர்களுடையமதியை மயக்கும் கர்பாலம், பாஞ்சராத்ரம் முதலான நூல்களை படைப்பதே தகும் என்று திருமால் கூற அதன்படி நூல்களை படைத்து அவற்றை முனிவர் கடைப்பிடித்து பல முறை பிறந்து,

கொடிய நரக வேதனையை அனுபவித்து பின்னர் தம்மைப் பணிய திருமாலும், சிவனாரும் கூறினர்.

அவர்களுடைய நலனுக்காக சிவனார் பார்வதியைக் காக்கும் பொறுப்பை நாரணரிடம் விட்டு தான் சடைமுடியுடன் கூடியவராக மண்டை ஓட்டை அணிகலனாகச் சூடி யாசிக்கப் புறப்பட்டார். நாரணரும் பெண் உருவுடன் தன் பணியைச் செவ்வனே செய்து வந்தார். இதற்கிடையில் அந்தகன் என்னும் அரக்கன் பார்வதி தேவியை கவர்ந்து செல்ல நினைத்து மந்தர மலைக்கு வந்தான். அவர்களுடன் போரிட்ட கணங்கள் யாவும் அழிக்கப்படவே மிகவும் சினந்த நாரணர் மிக்க பலம் பொருந்திய சக்திமார்கள் நூறு பேரைப் படைத்து அனுப்பினர். அவர்களுடைய தாக்குதலினால் அந்தகனின் படைகள் அழிக்கப்படவும் பயந்த அந்தகன் ஓட்டம் பிடித்தான். தாருகாவனத்தில் தன் பணியை முடித்த சிவனார் மந்தர மலைக்கு வந்து நடந்ததை அறிந்து நாரணரை மெச்சினர். இவ்விதம் இனிதே காலம் செல்கையில் பார்வதியின் அழகில் மயக்கம் கொண்டு அந்தகன் மீண்டும் மந்தா மலைக்கு வந்தான். நாரணர், கணங்கள், தேவர்கள் முதலானவர்கள் புடைசூழ சங்கரனார் அந்தகனுடன் போர் புரிய புறப்பட்டார். தன்னைத் தவிர அவனை அழிக்கவல்லவர் எவருமிலர் என்று நாரணரால் புகழ்ந்து போற்றப்பட்ட சிவனார் தன்னுடைய சூலத்தை எறிந்து அந்தகனை அதன் முனையில் தூக்கிப் பிடித்தார். அவரது சூலத்தின் ஸ்பரிசத்தினால் தன் அரக்கத் தன்மை அழிந்த அந்தகன் சிவனாரைப் பலவிதமாகப் போற்றிப் புகழ்ந்தான்.

இவ்விதமாகப் பணிந்த அந்தகனை சூலத்தினின்று கீழே இறக்கிய பரமன் அவனைத் தன் கைகளால் தடவிக் கொடுத்து அவனை சிவகணங்களில் ஒருவனாக இருக்க அருள் செய்தார்,

## (4) வானளாவி நின்ற சோதி வடிவம்

மார்க்கண்டேய மாமுனிவருடன் லிங்க வழிபாட்டை முடித்த பின்னர் கண்ணன் மார்க்கண்டேய முனிவர் விரும்பிக் கேட்க பரமனின் சோதி வடிவின் தோற்றத்தைப் பற்றி விவரித்துக் கூறினார்.

முன்னொரு சமயம் அச்சுறுத்தும் இருள் சூழ்ந்த பரந்த கடலொன்றே பரவிக்கிடந்தது. அதில் சங்கு சக்கர கதையுடன் கூடி ஆயிரம் தலை கை கால்களுடன் நாரணர் சயனித்திருந்தார். இதற்கிடையில் மும்மறைகளினால் புகழ்பெற்றவரும், சிறந்த யோகியும், கரியமான் தோல் உடுத்தியவரும், ஆயிரம் கதிரவனின் ஒளியுடன் ஒளிர்பவருமான நான்முகன் அங்கு வந்தார். நாரணனைப் பார்த்து அவர் பின் வருமாறு கேட்டார்.

நான்முகன்—நீர் யார்? ஏன் இங்கு உறைகின்றீர்? நான் உலகைப் படைக்கும் நான்முகன். தானே தோன்றியவன்.

நாரணன்—நானே, உலகினைப் படைத்து பின்னர் அழிப்பவன்.

இம்மாதிரி தொடர்ந்து அவர்களுக்கிடையில் விவாதம் நடைபெறவும் பரமனின் மாயையினால் சிவனாரின் வடிவான உயர்ந்த லிங்கம் ஒன்று அவர்களுக்கு தெளிவுபடுத்த அவர்கள் முன்னர் தோன்றியது. அது பிரளய கால நெருப்பைப் போன்று சுடர் விட்டு ஒளிர்ந்தது. அது அழிவும் வளர்ச்சியுமின்றி வானளாவி நின்றது.

ப்ரபோதார்த்தம் பரம் லிங்கம்
ப்ராதுர்பூதம் சிவாத்மகம் |
காலாநல ஸமப்ரக்யம்
ஜ்வாலா மாலா ஸமாகுலம் ||

க்ஷய வ்ருத்தி விநிர்முக்த-
மாதி மத்யாந்த வர்ஜிதம் |

அப்பொழுது, நான்முகன் அன்னவடிவினனாய் "நான் இதன் முடியைக் கண்டு வருகிறேன். நீர் இதனின் அடியைக் கண்டு வாரும்" என்று கூறி மேலே சென்றார். பின்னர் அவ்விருவரும் பரமனின் மாயையையுணர்ந்து பரமனைப் போற்றிப் பணிந்தனர். அவர்களது புகழ்மாலையினால் மகிழ்ந்த பரமன் அவர்களிருவரும் தன்னுடைய மற்றிரு வடிவங்களே எனக் கூறி அவர்களுடைய குழப்பத்தைத் தெளிய வைத்தார்.

## (5) காலபைரவருக்கு ஏற்பட்ட பிரம்மஹத்தி தோஷம்.

மேருமலையின் உச்சியில் வீற்றிருந்த நான்முகனை அணுகிய முனிவர்கள் பரம்பொருள் யாதென்று வினவ, அவரும் பரமனின் மாயையின் வசப்பட்டவராய் தன்னையே பரம்பொருள் எனக் கூறிக் கொண்டார். உலகங்களனைத்தையும் படைத்து பின்னர் காத்து முடிவில் அழிப்பவர் தாமே என்றும் கூறிக் கொண்டார். அவருக்கு உண்மையை எடுத்துக் கூறி விளங்க வைக்க திருமால் அவரிருக்கும் இடம் விரைந்து வந்தார். தன் நாபியில் உதித்த பிரம்மன் எவ்விதம் பரம்பொருளாகும் என்று கடிந்துரைத்தார். அவர்களிருவருக்கிடையில் விவாதம் தொடர்ந்து நடைபெறுகையில் நான்கு மறைகளும் அவர்கள் முன்னர் தோன்றி பரம்பொருளைப் பற்றி எடுத்துரைத்தன.

ரிக்வேதம்— எந்த ஒன்றில் பொருள்கள் யாவும் உறைகின்றனவோ, எந்த ஒன்றிலிருந்து எல்லாம் தோன்றுகின்றனவோ, எந்த ஒன்றை பரம்பொருள் என்று கூறுகின்றனரோ அந்த தேவன் பரமேச்வரனேயாகும்.

யஜுர்வேதம்— எந்த ஒருவர் வேள்விகளனைத்தினாலும் வழிபடப்படுகின்றாரோ, எந்த ஒருவர் யோக நெறியின்

மூலம் தொழப்படுகின்ருரோ, எவரைத் தலைவன் என்று கூறுகின்றனரோ அந்த தேவனே பரமேச்வரன்.

ஸாமவேதம் – எவரால் இந்த பிரபஞ்சமானது சுழலும்படி செய்யப்படுகின்றதோ, எந்த ஒருவர் யோகிகளால் நித்தமும் தியானம் செய்யப்படுகின்ருரோ அந்த தேவனே சங்கரனும்.

அதர்வ வேதம் – எவரை தேவர்களுக்கெல்லாம் தலைவனுகக் கூறி சிறந்த துறவிகள் போற்றுகின்றனரோ அந்த தேவனே பவன், மஹேசன், ருத்திரன் என்றெல்லாம் அழைக்கப்படும் சிவனுர்.

நான்முகன் – (புன்னகை புரிந்து) பெண்ணெரு பாகமும் கூடி கணங்களுடன் மகிழும் அவர் எப்படி பற்றென்று மில்லாத பரமனுவார்?

இம்மாதிரி நான்முகன் கேட்கவும் வடிவற்ற பிரணவமும் வடிவுடன் கூடியதாக அவர் முன் தோன்றி பின்வருமாறு கூறியது.

பிரணவம் – உம்முடைய கூற்று தவருனது. சிவனும் சக்தியும் இணைந்து அருள் பாலிப்பதைச் சுட்டிக் காட்டவே அவரது அந்த வடிவம் என்பதை நீர் அறிந்திலரோ?

இம்மாதிரி பிரணவம் எடுத்துரைத்ததைக் கேட்டும் கூட நான்முகனின் மனமயக்கம் தெளியாமல் தான் கூறியதையே கூறிக் கொண்டிருந்தார்

இதற்கிடையில் வானளாவி நின்ற மாபெரும் சோதி வடிவினில் ஈசனைக் கண்ணுற்ற நான்முகனின் ஐந்தாவது சிரம் கோபத்திஞல் சிவந்தது. ஈசனை ஆணவத்துடன் கேட்டார்:—"என்னுடைய நெற்றியிலிருந்து முன்னர் நீர் தோன்றியது உமக்கு நினைவில்லையா என்ன? அதனுல் என்னைச் சரணமடையும்" பிரம்மனின் ஆணவத்துடன்

கூடிய இந்த சொற்களைக் கேட்ட ஈசன் தன்னுடையதொரு வடிவமான காலபைரவரை அனுப்ப அவரும் நொடிப் பொழுதில் பிரம்மனின் செருக்கு கொண்ட ஐந்தாவது தலையைக் கிள்ளி எறிந்தார். அந்த தலை களையப் பெற்ற உடனே தன்னகந்தை அடங்கிய நான்முகன் ஈசனின் காணக் கிடைப்பதற்கரியதான ஒளிரும் திவ்யமான தேவியுடன் கூடிய உருவைக் கண்டு களித்து பலவாருகக் துதித்துப் பணிந்தார்.

அதனுல் மகிழ்ந்த ஈசனும் அருகில் நின்ற ருத்திரனிடம் பிரம்ம தேவரின் மேன்மையைப் பற்றி எடுத்துக் கூறி அந்த கொய்த தலையை கையிலேந்தி பிரம்மஹத்தி தோஷமகல புவியில் பிக்ஷை எடுத்து அலையும் விரதம் பூணவேண்டு மென்று மொழிந்தார். அது முதற்கொண்டு பலகாலம் மண்டை ஓட்டை ஏந்திய கபால பைரவராக புவியில் பிக்ஷை எடுத்து நாரணரின் சொற்படி காசியை அடைந்து தன் விரதத்தை முடித்தார்.

## (6) சுவேத முனிவர் வரலாறு

காலஞ்சரம் என்னுமொரு புண்ணியத் தலமுள்ளது. முன்னெரு சமயம் சுவேதர் என்னும் மாமுனிவர் சிவனிடம் மிகவும் பக்தி கொண்டவராய் ருத்திர மந்திரத்தை எப் பொழுதும் ஓதிக் கொண்டு சிவனை வழிபட்டு வந்தார். அவரது காலம் முடிவடையவும் அப்பொழுது அவரை இட்டுச் செல்ல சூலமேந்தியவனுகக் காலன் வந்தான். அந்த அச்சுறுத்தும் வடிவைக் கண்ட சுவேதர் லிங்கத்தை இரு கைகளினுலும் அணைத்தவண்ணம் ருத்திரனை வணங்கி ருத்திர மந்திரத்தை ஓதத் துவங்கினுர். அதனைக் கண்டு நகைத்த வண்ணம் காலனும் அவரை அணுகி வா! வா! என்றழைத்தான். ஈசனை வழிபடுபவரை தவிர்த்து மற்ற வரைக் கொள்வாய் என சுவேதர் கூறியதைப் புறக்கணித்த காலன் ஈசனை வழிபடுபவரோ அல்லது வேறெவராயினும்

சரி. தன் வசத்தில் யாவருமே தப்ப முடியாது எனக் கூறி சுவேதரைப் பாசக் கயிற்ருல் கட்டினன்.

செய்வதொன்றுமறியாத சுவேதரும் சதருத்ரியம் என்னும் சிவபெருமானைப் போற்றும் மறையினை ஓதிக் கொண்டிருந்தார். பின்னர் வானில் பறந்து ஒளிரும் ஒளிப் பிழம்பினைக் கண்டார். அதன் மத்தியில் உமையுடன் கூடிய பரமனைக் கண்டு மட்டில்லா மகிழ்ச்சி கொண்டார். பரமனைக் கண்ணுற்ற காலன் தன் வேலையை முடிக்க விரைந்தான். அதைக் கண்டு சினந்த பரமனும் தனது இடது காலால் காலனை உதைத்துக் கொன்ருர். தன்னைப் பணிந்து போற்றிய சுவேதர் முன்னிலையில் சிவனுர் மறைந்தார். பின்னர் நான்முகன் விருப்பத்திற்கிணங்க சிவனுர் காலனை உயிர்ப்பித்தார். அவ்விடமே காலஞ்சரம் என்ற புகழ் பெற்ற தலமாயிற்று.

## (7) சிலாத முனிவர் வரலாறு

முன்னெரு ஸமயம் சிலாதர் என்ெருரு மாமுனிவர் இருந்தார். அவர் தரும நெறி வழுவாது வாழ்ந்து வந்தார். அவர் ஈசனைக் குறித்து கடுந்தவம் இயற்றினர். அவர் ஆயிரம் ஆண்டுகள் செய்த இடைவிடா தவத்தினல் உலகமே தகித்தது. கணங்கள் புடைசூழ உமையுடன் கூடியவராக ஈசன் அவர் முன் தோன்றி உளம் மகிழ்ந்து வரம் கொடுக்க சித்தமாய் நின்ருர். ஈசனின் அருள் மொழியினைக் கேட்ட சிலாதரும் ஈசனுக்கொப்பானதும், யோனியின் மூலம் பிறவாததும், இறப்பற்றதுமான மகவை வேண்டினர். ஈசனும் அவர் வேண்டிய வரனை அருளி மறைந்தார். பின்னர் சிலாதர் ஏரைப் பூட்டி நிலத்தை உழுதார். அப்பொழுது பிளந்த பூமியினின்று நெருப்பினைப் போன்று ஒளிரும் அழகு நிரம்பிய புன்னகை தவழும் பொலிவான முகத்துடன் கூடிய மகவினைக் கண்டு உள்ளம் மகிழ்ந்தார். குமரனைப் போன்றும் ஒப்பற்ற அழகின் வடி

வாயுமுள்ள அக்குழந்தை மேகத்தினைப் போன்ற கம்பீர மான குரலில், அப்பா! அப்பா! என்றழைத்தது. சிலாத முனிவரும் அந்த ஆசிரமத்திலிருந்த மற்ற முனிவர்களேயும் அழைத்து குழந்தையைக் காண்பித்தார். ஜாதகர்மம் போன்ற பிறந்த உடன் செய்ய வேண்டிய சடங்குகளை செய்வித்தார். காலக்ரமத்தில் தகுந்த வயதில் 'நந்தி' என்னும் அக்குழந்தைக்கு உபநயனம் முதலியவற்றை செய் வித்து மறைகளைக் கற்பித்தார்.

மறைகளை முறைப்படி பயின்ற நந்தியானவர் சிவனுரைக் கண்டு அவரருளால் காலனை வெல்வேன் என்று உறுதி பூண்டு கடற்கரையை அடைந்து ஒருமித்த மனத்துடன் பரமசிவனின் மீது ஈடுபாடுடையவராக இடையறுது 'ருத்தி ரம்' என்னும் மறையினை ஓதிக் கொண்டிருந்தார். அவர் கோடி முறை கூறி முடித்த பின்னர் கணங்களுடன் கூடிய சிவனுர் அவர் முன் தோன்றி அவர் வேண்டும் வரம் எதை யும் கொடுக்க இசைந்தார். ஒரு கோடி முறை அவரது பெயரை ஜபம் செய்து பின்னர் சிவபெருமான் அவர் முன்னர் தோன்றி அவர் வேண்டுவது யாது என்று கேட்க மீண்டும் சிவபெருமானின் பெயரை ஜபம் செய்வதே என்று 'நந்தி' கூறினுர். மூன்று தடவை இம்மாதிரி ஜபம் செய்த பின்னர் மீண்டும் ஜபம் செய்ய விரும்புகையில் ஈசன் மீண்டும் ஜபம் செய்ய தேவை இல்லை எனக் கூறி மூப்பைத் துறந்து தன் கணங்களுக்குத் தலைவனுக தன்னிடமே இருக்கு மாறு கூறி தன் கணங்களை அழைத்து 'நந்தி'க்கு புனித நீராட்டல் செய்வித்தார். அந்த இடமே காசியில் 'ஜப்யேச் வரம்' என்னும் புண்ணியத் தலமாக விளங்குகின்றது.

## (8) கிருத்தி வாஸேச்வரர்

காசியில் கிருத்திவாஸேச்வரம் என்ெருரு புண்ணியத் தலம் உள்ளது. அதன் மேன்மையைப் பற்றி வியாச முனிவர் மற்றவர்களுக்கு எடுத்துரைத்தார். முன்ெனுரு

ஸமயம் அரக்கனொருவன் அங்கு வாழ்ந்து வந்தான். அவன் யானை உருவு எடுத்து அங்கு ஈசனைத் தொழ வரும் அந்தணர்களைக் கொல்ல நினைத்தான். தன் பக்தர்களிடம் அன்பு பூண்ட முக்கண்ணன் சூலம் ஏந்தியவராய் அங்கு தோன்றி யானை உருவில் வந்த அரக்கனைக் கொன்றார். யானைத் தோலைத் தான் அணிந்து கொண்டதால் அதற்கு கிருத்தி வாஸேச்வரம் என்று பெயர் ஏற்பட்டது.

## (9) கபர்த்தீச்வரர்

பல புண்ணிய தலங்களை தரிசித்த பின்னர் முனிவர்கள் கபர்த்தீச்வரம் என்னும் தலத்திற்கு வந்து அங்கு மேன்மையான லிங்க வடிவினைக் கண்டு வழிபடலாயினர். அப்பொழுது அவர்கள் வியப்பைத் தரும் காட்சி ஒன்றைக் கண்டனர். அங்கு மேய்ந்து கொண்டிருந்த பெண் மானைக் கொல்ல அச்சுறுத்தும் புலி ஒன்று பாய்ந்து வந்தது. பயந்த அந்த மானும் ஓடி ஓடி லிங்கத்தைச் சுற்றி சுற்றி வந்து கடைசியில் புலியின் பிடியில் சிக்கியது. அந்த மானைத் தன் கூரிய நகங்களால் கிழித்துக் கொன்ற புலியும் வேறிடம் சென்றது. அந்த மான் லிங்கத்தின் முன்னர் விழுந்து மடிந்ததுமே வானில் கதிரவனின் ஒளியையொத்த ஒளியொன்று தென்பட்டது. வானவர்கள் அதன்மீது மலர்களைத் தூவினர். மறுகணமே அது ஒரு சிவகணமாக மாறி அதற்குப் பின்னர் புலப்படாமல் மறைந்தது.

ஜைமினி முதலான முனிவர்கள் நாரணரைப் பணிந்து அந்தத் தலத்தின் சிறப்பைப் பற்றி கூறுமாறு கேட்டுக் கொண்டனர். நாரணரும் கூறத் தொடங்கினார்.

முன்னொரு காலத்தில் சங்குகர்ணர் என்னும் சிறந்த தபஸ்வி ஒருவர் அந்தத் தலத்தில் நெறி தவறாது வாழ்ந்து வந்தார். அவர் இடையறாது சிவனாரை வழிபட்டு வந்தும் ருத்திர மந்திரத்தையும் பிரணவத்தையும் எப்பொழுதும்

ஓதிக்கொண்டும் ஆயுள்முழுவதும் பிரம்மசரியம் பூண உறுதி பூண்டும் இருந்து வந்தார். அம்மாதிரி அவர் யோக நெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்து வருகையில் ஒரு நாள் அவர் ஒரு பிரேதத்தைக் கண்டார். அந்த பிரேதமானது எலும்பு தோல் இவைகளைப் போர்த்திக் கொண்டும் பசியுடன் கூடியதாகவும் மீண்டும் மீண்டும் பெருமூச்சு விட்டுக் கொண்டும் இருந்தது, அதைக் கண்ணுற்ற அந்த மாமுனிவர் கருணையுடன் அந்த பிரேதத்தைக் கேட்டார்.

முனிவர்—நீ யார்? எங்கிருந்து இங்கு வந்தாய்?

பிரேதம் முன்பிறப்பில் நான் ஒரு செல்வவந்தனாக இருந்தேன். பிள்ளை பேரன் முதலியவருடன் கூடி குடும்பத்தைப் பேணி வந்தேன். ஆனால் இறைவழிபாடோ விருந்தினர்களுக்கு விருந்தோம்பலும் மற்றும் புண்ணியம் பயக்கும் நல்வினைகள் எதுவும் செய்யவில்லை. ஒரு முறை காசியில் விடை மீது வீற்றிருக்கும் பரமன், லோக நாயகரான சிவனாரை வணங்கினேன். உடனேயே எனக்கு மரணம் ஏற்பட்டது மிகவும் அச்சுறுத்தும் அந்தக் கொடிய காலனைக் காணும் வாய்ப்பு எனக்கு ஏற்படவில்லை. ஆனால் கொடிய பசியுடன் இந்த உருவத்துடன் ஒரு பிசாசாக அலைகின்றேன். தாகத்தினால் அல்லல்படுகின்றேன். நல்லது கெட்டது எதுவுமே எனக்குத் தெரியாது. இந்த நிலையிலிருந்து விடுபெற எனக்கொரு வழி கூறுமாறு பணிவுடன் கேட்கின்றேன்.

முனிவர் (சங்குகர்ணர்)— உன்னைப் போன்ற புண்ணியம் செய்தவர் உலகில் வேறெவருமிலர். உன்னைப் போல் வேறெவர் சிவனாரைக் கண்டு வழிபடும் பெரும்பேற்றை பெற்றவர்? அந்த நற்செயலின் பயனாக இவ்விடத்தை நீ இப்பொழுது அடைந்துள்ளாய், விரைவாக இதோ அருகிலிருக்கும் நீர்நிலையில் குளிப்பாயாக. அதனால் வெறுக்கத்தக்க தோற்றமுள்ள இந்த உருவைக் களைவாய் என்பது திண்ணம்.

இவ்வாறு சங்குகர்ணரால் கூறப்பட்ட பிரேதமும் கருணை வடிவான முக்கண்ணர் கபர்த்தீச்வரரை மனத்தில் நினைத்து அந்நீரில் மூழ்கி எழச் சித்தமாயிற்று. அதில் மூழ்கி எழுந்தவுடன் பழைய தோற்றம் மறைந்து பல்வேறு அணி கலன்களுடன் ஒளிர்ந்து கொண்டு சிறந்த யோகிகளால் சூழப்பட்ட ஒரு தலைசிறந்த தேஜோமயமான வடிவினைப் பெற்று வானில் காட்சி தந்தது. வானவர், தானவர் முதலான அனைவராலும் போற்றப் பெற்று தம் பழைய உருவினைக் களைந்து நிற்கும் விந்தையைக் கண்டு மகிழ்ந்த சங்குகர்ணர் பரமனின் (கபர்த்தீச்வரனின்) மேன்மையை புகழ்ந்து பாடி பணிந்து நின்றார்.

## (10) பிக்ஷை பெருது வருந்திய வியாச முனிவர்

பல புண்ணிய தலங்களுக்குச் சென்று வழிபட்ட பின்னர் வியாஸ முனிவர் கடைசியில் வாராணஸி (காசி)யை அடைந்தார். அங்கு அவர் முனிவர்களின் நெறியைக் கடைப்பிடித்து பிக்ஷை எடுத்து உண்பவராகவும் பரமனைப் போற்றி பணிபவராகவும் இருந்து வந்தார். ஒரு நாள் பிக்ஷைக்காக சுற்றி அலைந்தும் கூட அவருக்கு பிக்ஷை கிடைக்கவில்லை. அதனால் சினமடைந்த அவர் அங்கு வாழும் அந்தணர் அனைவருக்கும் தாம் விரும்பியது கைகூடாமல் போக தடை ஏற்படுத்துகிறேன் என்று நினைத்தார். அந்தக் கணமே சிவனாரின் உடலினொரு பாகத்தினளான உமை அன்னை அவர் முன் மனித வடிவில் தோன்றினாள். "ஓ மாமுனிவரே! இந்தப் பட்டணத்திற்கு நீங்கள் சாபம் கொடுக்க வேண்டாம். என்னிடமிருந்து பிக்ஷையை ஏற்றுக் கொள்ளும்" என்று கூறி பிக்ஷை அளித்தாள். மேலும், "நீங்கள் இப்பொழுது சினத்திற்கு இடங்கொடுத்தமையால் நீங்கள் இப்பட்டணத்தில் இனியும் தங்கக்கூடாது. ஏன் எனில் நீர் நன்றி மறந்தவர்," எனக் கூறினாள். இம்மாதிரி அன்னை கூறியதைக் கேட்ட வியாஸ முனிவரும் தியானத்தின் மூலம் தன் முன் மானிட வடிவில் வந்தது அகில

உலகிற்கும் அன்னையான உமாதேவியாரென்பதை உணர்ந்தவராக அன்னையைப் பலவிதமாகப் போற்றிப் பணிந்தார். பின்னர் அவர், அஷ்டமியிலும் சதுர்த்தசியிலும் மட்டும் அப்பட்டணத்திற்குள் நுழைய அனுமதிதாருங்கள்,'' என்று அன்னையிடம் வேண்டினர் அப்படியே ஆகட்டும் என்று அருளிய அன்னையும் அப்பொழுதே மறைந்தார். இம் மாதிரியாக வியாசமா முனிவர் அந்தந்த தலங்களின் சிறப்பையுணர்ந்தவராக அதன்படி நியமம் கடைப்பிடித்து பயனடைந்தார். இதனின்றும் அவிமுக்தம் என்னும் காசியின் சிறப்பு நமக்குத் தெரியவருகின்றது.

## (11) ருத்திர கோடி என்னும் தலத்தின் மேன்மை

முன்னொரு ஸமயம் கோடிக்கணக்கான பிரம்ம வித்துக்களான மாமுனிவர்கள் ஒரு புண்ணிய காலத்தில் ஒன்று கூடி 'ருத்திர கோடி' என்று பின்னர் பெயர் பெற்ற அந்தத் தலத்தை அடைந்து சிவனாரைக்காண அவாக் கொண்டனர். தானே அவரைக் காணும் பேற்றை முதலில் பெறுவேன் என்று ஒவ்வொருவரும் கூறவே அவர்களுக்கிடையில் பெரும் விவாதம் ஏற்பட்டது அச்சமயம் தன்னிடம் அவர்களின் சிறந்த ஈடுபாட்டைக் கண்ட யோகிகளின் முதன்மையான ருத்திரன் என்றழைக்கப்படும் சிவனார் அவர்கள் முன்னிலையில் கோடி ருத்திர வடிவில் தோன்றினார். அது முதற்கொண்டு அவ்விடம் 'ருத்திர கோடி' என்று அழைக்கப்பட்டது. தம் முன்னர் தோன்றிய கோடிக்கணக்கான ருத்திரரை வழிபட்டு மாமுனிவர்களும் மட்டிலா மகிழ்ச்சியடைந்தனர். அவ்விடம் சென்று வழிபடும் யாவரும் நான்கு விதமான முக்திகளில் ஒன்றான சிவனாருடன் 'ஸாமீப்யம்' அல்லது 'அவரது அருகில் இருத்தல்' என்னும் நிலையை அடைவர்.

## (12) பாணன் என்னும் அரக்கனின் வரலாறு

பலி என்னும் அரக்க மன்னனுக்கு நூறு பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் அனைவரிலும் பாணன் என்பவனே

சிறந்து விளங்கினுன். அவன் சிவனுரிடம் மிகவும் ஈடுபாடு உடையவனுக ஆட்சி புரிந்து வந்தான். மூவுலகையும் தன் குடைக்குக் கீழ் கொணர்ந்து இந்திரனுக்கும் இன்னல் செய்தான். இந்திரன் முதலான தேவர்கள் சிவனுரிடம் சென்று முறையிட்டனர். "உம்முடைய சிறந்த பக்தனுன பாணன் என்னும் அரக்கன் எங்களுக்கெல்லாம் தீங்கு விளை விக்கின்முன்" என்று கூறினர். அந்தப் பரமனும் தன்னிடம் தேவர்கள் முறையிட்ட அந்தக் கணமே ஒரே ஒரு அம்பை எய்து திருவிளையாட்டாகவே பாணனுடைய பட்டணத்தை எரித்தார். பட்டணம் எரியவே பாணனும் சிவனுரைச் சரண் அடைந்தான். அங்குள்ள சிவலிங்கத்தைத் தன் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு அந்தப் பட்டணத்தி னின்றும் வெளியேறி பரமனைப் பலவிதமாகப் போற்றிப் பணிந்தான். தன்னைப் பணிந்த பாணனை தன் கணங்களில் ஒன்முகச் செய்தார்.

## (13) யதுவம்ச அரசன் துர்ஜயனின் வரலாறு

யதுகுலத்தில் தோன்றிய 'துர்ஜயன்' என்ருெரு மன்ன னிருந்தான். அவன் சிறந்த கல்வி கற்றிருந்தான். அவனது மனைவி சிறந்த அழகுள்ளவளாகவும், நற்குணங்களனைத்தும் கொண்டவளாகவும், தரும நெறியில் தன் கணவனைப் பின் பற்றிச் செல்பவளாகவும் இருந்தாள்.

ஒரு ஸமயம் அந்த மன்னன் யமுனை நதிக்கரையில் இனிமையாகப் பாடிக் கொண்டிருக்கும் ஊர்வசி என்னும் தேவ மடந்தையைக் கண்டான். காம வேட்கை மிகுந்த வனுக அவளருகில் சென்று தன்னிடம் இன்புற்றிருக்க அவளை வேண்டினுன். அவனழகில் மயங்கிய அவளும் அவனுடன் பல காலம் இன்புற்றிருந்தாள். பின்னர் நினைவு கொண்டவனுகத் தன் நகருக்குத் திரும்பி செல்ல அவளிடம் விடை கேட்டான். இத்தனை காலம் இன்புற்றிருந்தும் தனது வேட்கை தணியவில்லை என்று கூறிய அவள் தன் னுடன் இன்னமும் ஓராண்டு காலம் தங்கியிருக்குமாறு

வேண்டினுள். அதற்கு அம்மன்னன் தன் நகரத்திற்குச் சென்று பின்னர் உடனேயே திரும்பி வருகின்றேன் என்று கூறி அவளிடம் அனுமதி கேட்டான். மீண்டும் மற்றெரு தேவ மடந்தையுடன் தங்கிவிடக் கூடாது என்று கூறி அவளும் அவனுக்கு தன் நகரம் செல்ல விடை தந்தாள். அப்படியே செய்கிறேன் என்று கூறிய அவனும் உடனேயே தன்னுடைய பட்டணத்தை அடைந்தான்.

திரும்பி வந்த அவனைக் கண்ட பதிவிரதையான மனைவி அவன் முகத்தில் ஏற்பட்டுள்ள கலக்கத்தைக் கண்டு அதற்கென்ன காரணமென்று இன்முகத்துடன் கேட்டாள். அவளது சொற்களைக் கேட்ட அவன் நடந்தவற்றைக் கூற நாணி வாளாவிருந்தான். தன் கற்பின் மேன்மையால் நடந்தது என்னவென்பதை அறிந்த அவள் "நீங்கள் கவலைப் படவேண்டாம். செய்த பாவம் அகல நீங்கள் செயல்பட வேண்டும். நீங்கள் கவலை கொண்டால் இந்தப் பெருங்குடியும் நாசமடையும்," என்று கூறினுள்.

பின்னர் துர்ஜயன் மாமுனிவர் கண்வரின் குடிலை அடைந்து அவரைப் பணிந்தான். கண்வர் வாயிலாகத்தான் கடைப்பிடிக்க வேண்டிய மாற்று நெறியை அறிந்து அவன் இமயமலைச்சாரலை நோக்கி புறப்பட்டான். செல்லும் வழியில் அந்த மாமன்னன் அழகிய மாலையை அணிந்து தன் பொலிவினுல் சுடரும் சிறந்த கந்தர்வன் ஒருவனை வானில் கண்டான். அந்த மாலையைக் கண்ட மன்னன் அது ஊர்வசிக்கு மிகவும் பொருத்தமாக இருக்கும் என்று எண்ணியவனுக காம வேட்கை மிகுந்தவனுக அந்த மாலையை அந்த கந்தர்வனிடமிருந்து கைப்பற்ற எண்ணி அவனுடன் போரிட்டு அவனை வென்று மாலையைக் கைப்பற்றினுன்.

முதலில் யமுனை நதிக்கரைக்குச் சென்று அங்கு ஊர்வசியைக் காணுத மன்னன் புவி முழுவதையும் சுற்றிப் பார்த்தான். இமயமலைப் பிரதேசத்தை அடைந்த மன்னன்

ஹேமகூடம் என்னும் இடத்தை அடைந்து அங்கு தேவ மடந்தையர் பலரைக் கண்டான். ஊர்வசி கூறியதை நினைவில் கொண்டவனாக அவளையே நினைத்துக் கொண்டு மற்றும் பலவிடங்களில் அவளைத் தேடி அலைந்தான். கடைசியில் தேவலோகம் சென்று மகாமேருவினை அடைந்து அங்கு மானஸம் என்னும் குளத்தின் கரையில் ஊர்வசியைக் கண்டான். அந்த மாலையை அவளுக்கு அணிவித்து அவள் அழகினைக் கண்டு மயங்கியவனாகப் பல காலம் செல்வதறியாமல் இன்புற்றிருந்தான். முடிவில் ஊர்வசி, "நீங்கள் உங்கள் பட்டணம் சென்ற பின் என்ன செய்தீர்?" என்று கேட்டாள். நடந்தவை யாவையும் கூறி, தன் மனைவி தனக்குக் கூறியது, கண்வர் தனக்கு வகுத்த வழி, கந்தர்வனுடன் போர் செய்து தான் மாலையைப் பெற்றது முதலான யாவற்றையும் கூறினான். அவன் மொழிந்தது யாவற்றையும் கேட்டு அவனுக்கு நன்மை பேணும் அவள் அவனைத் திரும்பிப் போகுமாறு கூறினாள். மேலும் கண்வமுனிவர் அவனுக்கும் தனக்கும் சாபமளிப்பார் என்றும் கூறினாள்.

அவள் பன்முறை வற்புறுத்தியும் கூட வேட்கை மிகுந்த அவன் அவள் கூறியதை ஏற்றுச் செயல்படவில்லை. பின்னர் அவன் மனதை மாற்ற எண்ணிய அவள் தான் விரும்பும் உருவெடுக்கத் திறமையுடையளாதலால் மிகவும் அருவருக்கத்தக்க உருவத்துடன் புலப்பட்டாள். அதனால் மயக்கம் தெளிந்த மன்னன் கண்வர் கூறியதை நினைவில் கொண்டு தன்னைத் தானே கடிந்து கொண்டு கடுந்தவம் மேற்கொண்டான். கிழங்குகள் முதலியனவற்றை புசிப்பவனாக பன்னிரண்டு ஆண்டு காலமும், மேலும் காற்றையே புசிப்பவனாகப் பன்னிரண்டு ஆண்டு காலமும் தவம் செய்த பின்னர் பயத்துடன் கண்வமுனிவரை அடைந்து நடந்தது அனைத்தையும் அவருக்குத் தெரிவித்தான். அவனைக் கண்டு மகிழ்ந்த மாமுனிவர் அவன் பாவத்தைக் களைய விரும்பி 'காசியில் விசுவநாதர் தன் பக்தரைக் காக்கக் குடிகொண்டு

உள்ளார். கங்கையில் புனித நீராடி முன்னோர்களுக்கான சடங்குகளைச் செய்து பின்னர் விசுவநாதரைத் தரிசிக்க உடனேயே பாவம் யாவும் அகலும். உடனேயே காசிக்குச் செல்,'' என்று கூறினர். கண்வரை வணங்கிய மன்னன் காசியை அடைந்து அவர் கூறிய முறைப்படி விசுவநாதரை வழிபட்டு தன் பாவங்களனைத்தும் களையப்பெற்றவனாக தன் நகரத்தை அடைந்து புவியை தரும நெறியுடன் ஆண்டு வந்தான்.

சிவம்

---

## ஞானிகளும் வழிபட வேண்டுமா?

ஜீவன் முத்தர்களாகத் திகழும் பெரியோர்கள், கோயிலுக்குப் போக வேண்டுமா? அவர்கள் உள்ளத்தில் தான் கடவுள் இருக்கிறாரே! அவர்கள் நடமாடும் தெய்வங்களாகப் போற்றப்படுகிறார்களே! அவர்களுக்கு வழிபாடு எதற்கு என்று சிலர் நினைக்கிறார்கள். உலோகப் பாத்திரங்களை அன்றாடம் விளக்க வேண்டும். விளக்கா விட்டால் அழுக்கேறி விடும் அதே போலத்தான் சாதனை பெற்ற உயிர்களும் நல்லவர்களுடைய கூட்டுறவும், இறைவழிபாடும் நாளும் செய்து வர வேண்டும். செய்யாது விட்டால் மீண்டும் அறியாமை அவர்களைப் பற்றி, சூழ் நிலையில் தள்ளி விடும். இது பற்றியே மெய்கண்டாரும் சிவஞானபோதத்தின் இறுதி நூற்பாவில்,

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடும் மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே.

என்று அருளிச் செய்தார்.

—திருத்தருமையாதீனம் 26-வது குரு மஹாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆதாரம்: ஞானசம்பந்தம் திங்கள் இதழ், 10-12-78, பக்கம் 160.

---

# ஞானப்பிரகாச மாலை

வித்துவான் கா. ம கண்ணப்பன், பி. லிட்.
திருத்தருமபுரம், மாயூரம்—609001.

## தருமைக் குருமுதல்வர்

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமையாதீனத்தைத் தோற்றுவித்தருளியவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர். ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்தவர். மதுரையில் அம்மையப்பர் அருளால் சிவபூசைப் பெட்டகம் பெற்றவர். திருவாரூரில் (கமலை) ஞானப்பிரகாசரிடம் தீட்சை பெற்று, உலகம் உய்ய எட்டு அருள் ஞான நூல்களை அருளிய அருமைப்பாடு உடையவர். இக்குரு முதல்வர் அருளிய நூல்களை 'ஸ்ரீ குருஞான சம்பந்தர் அட்டகம்'' என வழங்குவர்.

(அஷ்டகம்-எட்டு நூல்கள்) அவையாவன: —
1. சொக்கநாத வெண்பா 2. சிவபோக சாரம் 3. சொக்கநாதக் கலித்துறை 4. ஞானப்பிரகாச மாலை 5. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல் 6. சோடசகலாப் பிராசாத ஷட்கம் 7. முத்தி நிச்சயம் 8. நவரத்தின மாலை.

இந்நூல்கள் சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்குவனவாக அமைந்திருப்பதுடன் இலக்கிய இன்பம் பயக்கும் இன்சுவைத் தேனாகவும் விளங்குகின்றன. ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருளிய வெண்பாக்கள் மிகச் சிறப்பான முறையில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. வெண்பாக்களில் அமைந்துள்ள எதுகைத்தொடை அமைப்புச் சிறப்பான முறையில் உள்ளமை, இவர் பாடல்கள் எளிதில் மனப்பாடம் ஆதல் கொண்டு உணரலாம். இவரது கட்டளைக் கலித்துறைப் பாக்கள் ஓசை நயம் மிக்கன.

## ஞானப்ரகாச மாலை

இவ்வினிய நூல் 36 கட்டளைக்கலித்துறைகளைக் கொண்ட சிறந்த நூல். ஸ்ரீ குருஞானசம்பந்தர் தம் குருநாதர்மீது பாடியருளிய நூல். ஸ்ரீ கமலைஞானப்பிரகாசர் மீது தாம் கொண்ட பக்திப்பெருக்கை புண்ணிய கங்கையாக ஓட விட்டிருக்கிருர் ஆசிரியர். அகச்சான்றுகளும், சித்தாந்தக் கருத்துக்களும், உவமை, பழமொழி, மரபுத் தொடர்களும், செஞ்சொலாட்சியும் கொண்டு மிளிரும் இந் நூல், கற்போர்க்கு இலக்கியவிருந்து நல்கும் மாட்சியைக் காண்போம்.

## குருவருள்

ஸ்ரீ குருஞானசம்பந்தர் மதுரைப் பெருமான் திருவருளால் தாம் பெற்ற சிவலிங்கத்தை விதிப்படி பூசிக்க வேண்டும் என விரும்பினுர். சற்குருநாதர் தேவை என உணர்ந்தார். மதுரைச் சொக்கேசப் பெருமானை வழிபட்டுத் துயின்ருர். பெருமான் கனவில் தோன்றித் "திருவாரூரில் ஞானப்பிரகாசரிடம் சென்று அருள் பெருக" என அருளினுர்.

இங்ஙனமே குருஞானசம்பந்தருக்கு அருளுமாறு ஞானப் பிரகாசருக்கும் அறிவித்தருளினுர். திருவாரூர்க் கோயில் தட்சிணுமூர்த்தி சந்நிதியில் தமது குருநாதரைக் கண்ட குருஞானசம்பந்தர் காந்தம் கண்ட இரும்பென நெருங்கி, வணங்கி மகிழ்ந்து நின்ருர். கமலை ஞானப்பிரகாசரும் இவரைச் சீடராகக் கொண்டு பெருமான் திருவருளை எண்ணித் தம் திருவடியை முடிமேல் வைத்துத் தீட்சை நல்கி, உபதேசம் பல செய்து தம்மொடு இருக்கச் செய்தார். இக்காலை நிகழ்ந்த குருவருள் அனுபவத்தை நினைந்து நினைந்து பண்டாரக் கலித்துறையாகிய ஞானப்ரகாச மாலையில் பாடியுள்ளமை அகச்சான்ருக அமைதலைக் காணலாம்,

"ஞானப் பிரகாச உன்றன் மலர்ப் பதத்தை நாயேன் சிரத் தணிவித்தாள்" (பா. 21)

எனவும்,

"வரந்தரு பாதமென் சென்னியில் தோய்ந்திடவைத் தெடுத்தான்" (பா. 36)

எனவும் அவரது அனுபவங்கள் வெளிப்படுத்தப்படுகின்றன. மேலும் இந்நூல் 36 ஆம் பாடலில்,

"பரந்திரு கண்ணிணை தன்னினில் காட்சி பதித்து வைத்தான்"

என்ற தொடர்

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்"

என்பதனை விளக்குவதாகவும்

"தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே"

என்னும் மந்திர விளக்கமாகவும் அமைதல் கருதத்தக்கது.

"வல்லான் கமலையுள் ஞானப்ர காசன் வசனமுணர்ந்து எல்லாம் வெறும் மித்தை என்று கண்டேன்" (பா.7)

என்ற தொடரின் வாயிலாகக் 'குருவார்த்தை கேட்டுச் சிந்திக்கும்' பக்குவம் மிக்க நற்சீடரின் நல்லுணர்வை அறியலாம்.

## சமய நெறி

ஞானம் பெறுதலே வீட்டிற்கு நேர்வாயில், பாச வீடு பெற்றாலே ஞானம் சித்திக்கும். அந்த ஞானம் குருவருளால் கிடைப்பது. குருவும் சிவனே ஆவன். ஆன்மாக்களது பக்குவத்திற்கு ஏற்ப, சிவன் அருளுவன், பாச நீக்கம் பெற்றுக்குரு அருளில் திளைத்தோர் பிறவா நெறியுடையர் ஆவர். இது சைவ சமய நெறி.

ஸ்ரீ குருஞானசம்பந்தர் இந்நெறியை மிக அற்புதமாகத் தமது ஞானப்ரகாச மாலையில் விளக்கி அருள்கிறார்.

1. "ஞான ப்ரகாசன் திருவடிக் கீழ், வருவாரவர் வழி வாரான் சமனும்,
மலரயனும் கருவாய் இடுதற் கெண்ணுன்" (பா. 1)

2. "ஞான ப்ரகாசன் அடியவர் எனும் பேரே படைமின்
அதுபோதும் போதும் பிறப்பறவே" (பா. 8)

3. "ஞானப்ரகாசன் என் சிந்தையுள்ளே சிவானுபவம் தரப் பெற்றதனுல் வாராது சென்மமும்,
போகாது பேரின்ப வாரியுமே" (பா. 12)

4. "உள்ளத்தில் ஒன்றும் புறத்தொன்றுமாக உரைக்கும் அன்பில்
கள்ளத்தவர்க்கு இரங்காதளிக்கும் கடைப்பிறப்பே"

5. "ஞானப்ரகாச பரம என்றும் கடிதாய் வயிற்றினிலே யுறலோ? இனிக் காயமுற முடியாது" (பா. 23)

6. "கருராசி தீர்க்கும் கமலேசன்" (பா. 31)

7. "மதுரேசன் சம்பந்தன் வாழ் மடத்தின் திருவாசலிற் ...செல்பவர் கருவாசலிற் செல்வரோ"

என்னும் மேற்காணும் தொடர்கள் குருவருள் பெற்றுப் பிறவாப் பேரின்பநிலை எய்தலாம் என உணர்த்தும் சான்றுகளாக இந்நூல் மொழிவனவாம்.

## குருவே சிவன்

"குருவே சிவன் எனக் கூறினன் நந்தி" என்பது திருமூலர் திருவாக்கு. இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில் ஞானப்பிரகாச மாலை மொழிவன காண்போம்.

1. "ஞானப் பிரகாச சிவன்" (பா. 3)

2. "சற்குருத்தனை ஈசன் என்று எண்ணுர் நரகிற் குடி மக்களே" (பா. 6)

3. "புரமூன்று எரித்த வல்லாய்" (பா. 9)

4. "முப்பாசம் என்னைத் தடுத்தது என்றால் செப்பார் உனைச் சிவம் என்று" (பா. 10)

5. "இவுளி நரித்திரள் ஆக்கி வைத்தோன், இசைப் பாணனுக்குப்
பவுளி உரைத்தருள் ஞானப்ரகாசன்" (பா. 19)

6. 'சித்தம தென்ன எல்லாம் வல்லவன்" (பா. 20)

7. ......'கயிலை
வாசன் செழுமதி மானும் மழுவும் மறைத்துவைத்த நேசன்" (பா. 28)

8. "மதுரேசன் சம்பந்தன்" (பா. 34)

9. "கூடலில் வாழ் ஞானசம்பந்த போதகன்" (பா. 36)

என்னும் மேற்காணும் சான்றுகளில் இறைவன் செயல் களைக் குருவின் செயல்களாக்கி உரைத்த பாங்கு 'குருவே சிவன் எனும் கொள்கையை வலியுறுத்தும்.

இவற்றுள் 'மதுரேசன் சம்பந்தன்' 'கூடலில் வாழ் ஞான சம்பந்த போதகன்' என்னும் தொடர்கள் காசியில் ஸ்ரீ காசிமடத்தைத் தோற்றுவித்தவரும் தருமையாதீனம் நான் காம் குருமணியாகிய ஸ்ரீ மாசிலாமணித் தேசிகரிடம் ஞானதீட்சை பெற்றவரும் ஆகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமி கள், தம் குருநாதரைத் துதித்துப் பாடியருளிய பண்டார மும்மணிக் கோவையில் "தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் திருநகராக அரசு வீற்றருளி" என வழுத்தும் தொடருக்கு வழிகாட்டியமைதலை எண்ணி இன்புறலாம்.

## உவமைகள்

பக்குவம் என்பது எல்லாவற்றிற்கும் தேவை; நிலத்திற் கும் தேவை; புலத்திற்கும் வேண்டுவதே! பக்குவமற்ற பூமி பயன்தரல் இல்லை. பயன் தர வேண்டுமென்றால் செத்திப் பண்படுத்த வேண்டும். பண்பட்ட நிலத்தில் விதைக்கப் பெற்ற—நடப் பெற்ற செந்நெல் பயன் தரும்.

புத்தியும் அப்படித் தான்! கடின புத்தியில் எதுவும் ஏருது; பயனற்றது. புத்திக் கடினம் கரைந்து - மென்மை யுற்ருல் தான் உபதேசம் விளையுமாம்! குருநாதரே உழவர்- அவர் பண்படுத்துகிருர்; ஞானப் பயிர் விளைக்கிருர். எத்தனை அருமையான உவமையை எவ்வளவு அழகாகக் காட்டுகிருர் குருஞானசம்பந்தர்.

**"செத்திப் படுத்தித் தெளிவாக்கிச் செந்நெல் விளைப்பது போல்**

**புத்திக் கடினம் கரைத்த மன்னே"**

என்பது இனிய உவமைத் தொடரன்ருே!

சிவன், மாற்றுமிக்க பதிஞயிரம் பொன்ஞலாகிய நன் மாலையையும் அணிந்துள்ளான். புல்லையும் அணிந்துள்ளான், கல்லையும் ஏற்ருன்; எலும்பும் இறகும் கூட அவனுக்கு விலக்கு இல்லை! ஏற்கின்ருன் சிவன். கருதிப் பார்க்கிருர் குருஞான சம்பந்தர். 'ஞானப் பிரகாச சிவஞகிய ஆரூரன் அன்பர் உரைக்கும் துதியுரைகள் மட்டுமல்ல என் அன்பில் சொல்லும் ஏற்பன்' எனத்துணிகின்ருர். பாடல் மலர்கிறது.

**"பொன்பதி ஞயிரம் மாற்றுள்ள மாலையும் புல்லும் கல்லும் என்பும் இறகும் தரித்தது போல்'** என்ற இனிய உவமை

பொதிகின்றது. இப்பாடற் பகுதியில் 'புல்லும் கல்லும்' என்பதற்குப் பொருந்தும் கல் எனவும் பொருள் கொள்ள லாம்; சாக்கிய நாயஞர் வரலாற்றை இச் சொல் நினைவூட்டி யமைகின்றது. **'என் அன்பில் சொல்லும் இன்புடன் ஏற்றருள்"** என இப்பாடல் வாயிலாக வேண்டுகிருர் குரு ஞானசம்பந்தர்.

மேகம் மழை பொழியும், உலக நன்மை ஒன்றே மேகத் தின் பயன்! "கைம்மா, வேண்டாக்கடப்பாடு மாரி மாட்டு" உண்டு. மேகத்தைக் கண்டவுடன் மயில் ஆடும். மேகத்தின் தன்மை கண்டு மயில் மகிழ்வு கொள்ளும். குரு வின் திருவடிகள் மேகம்! அத்திருவடிகள் உலக நன்மையின்

பொருட்டு இன்னருள் மழை பொழிகிறது. இச்சிறப்பு மிக்க திருவடிகளைக் காணும் உலக உயிர்கள் மகிழ வேண்டாவோ? சிந்தனை பாடலாகிறது.

**"வான் கண்டு உளம்களிகூர் மஞ்ஞை போல் உன் மலர்ப் பதத்தை**

**நான் கண்டு உளம் களி கூர்வது எந்நாள்?"**

உயிர்களின் ஏக்கத்தை உவமையாக்கிக் காட்டி, உலக உயிர்கள் குருவருள் பெறத் துடித்திட விழைதல்வேண்டும் என்கிறார் குருநாதர்.

**'வானே எழுமதி காணுச் சகோர மனமது போல்**

**ஆனேன்"** என்ற மற்றோர் உவமையால் எப்போதும் குருநாதர் சந்நிதியில் இருக்கும் பேறு எய்த வேண்டும் என விண்ணப்பிக்கிறார்.

## பழமொழிகள்

கருத்து வெளிப்பாடுகள் உவமை, பழமொழி, மரபுத் தொடர்கள், செஞ்சொற்கள் வாயிலாக அமையும் போது தேனொடு பால் கலந்து அளித்த இன்சுவையுடைத்தாகும். இந்நிலையில் குருஞானசம்பந்தர் பழமொழி முதலிய வற்றைத் தக்க இடத்தில் சுவை பொருந்த அமைத்திருத்தல் சிந்தித்து மகிழத்தக்கதாகும்.

1. சற்குரு பராமுகமாக இருந்தால் சீடனின் நிலை வாயற்ற - செயலற்ற தன்மை உடையதாகும். குரு பரா முகமாய் இருத்தல் இல்லை என்பதைத்

**"தாயே கொல எண்ணில் ஆர்காப்பர் சேயினை?"** என்ற உலக வழக்கு நிலையில் எடுத்துக் கூறல் இன்பம் அளிப்பதாய் உள்ளது.

2. குருநாதரைத், தாயாகத், தந்தையாகக், குரு வாகத், தெய்வமாக எண்ணுதல் வேண்டும் என்பதை

"மாதா பிதா குரு தெய்வம் துணை என்பர் மக்கட்கு உன்றன்
பாதாரவிந்தம் அடியேற்கு அந்நான்கு"
என விளக்குகிறார்.

## செஞ்சொல் ஆட்சி

ஞானப்பிரகாச மாலைத் திருப்பாடல்கள் இனிய சொல்லாட்சி அமைந்தனவே. இந்நூற்கண் பிர்ட்டு (3) மித்தை (7) சங்கற்பம் (9) கள்ளத்தவர் (13) சந்தை (14) தேசன் (2, 14, 28) பவுளி, இவுளி, ஏகவுளி (19) வாசல் (34) என்னும் சொற்களை ஆண்டிருக்கும் திறன் ஆய்வுக்கு வித்தாய் அமைதல் காணலாம். மேலும் 'முத்திநிச்சயமே" (7) என்று அருளிய தொடரே பின்னர் நூற்பெயர் ஆதல் எண்ணவூட்டுத் தருவது. "முத்திக் கொடி கட்டினன்" (3) "முத்திக் கொடி ஆள்பவன்" (5) என்னும்தொடர்கள் குருநாதரின் பெருமை கூறும் நற்றொடர் ஆட்சிகளாம். "தித்திக்கச் சொன்னவன்" என்ற மரபுத் தொடர் தித்திக்கின்றதன்றோ!

## யாப்பு

நேரிசையில் தொடங்கும் கட்டளைக்கலித்துறைப் பாக்கள் 23ஐயும், நிரையசையில் தொடங்கும் பாக்கள் 13ஐயும் ஆக 36 பாடல்களைக் கொண்டு இம்மாலை ஞானப்பிரகாசமாக மிளிர்கிறது. நேர்அசைப்பில் தொடங்கும் கட்டளைக்கலித்துறைப் பாடல் (மெய், குற்றியலுகரம் நீங்கலாக) 16 எழுத்துக்களை உடைத்தாதல் வேண்டும். நிரையசையில் தொடங்கும் பாடல் (மெய், குற்றியலுகரம் நீங்கலாக) 17 எழுத்துக்களைக் கொண்டதாதல் வேண்டும். பதிப்புகளுள்,

"தேனே ககலையுள் ஞானப்ரகாச தேசிக நீ" நீ எனத் தொடங்கும் 33 ஆம் பாடலில் முதலாவதாகிய இவ்வடி

நேர் அசைத் தொடக்கம் கொண்டு **15** எழுத்துக்கள் பெற்றிருக்கிறது; இது சுவடிகளில் **16** எழுத்துப் பெற்றிருந்ததாதல் வேண்டும் பெயர்த்து எழுதுங்கால் மாறுபாடு நிகழ்ந்திருக்கக் கூடும்.

கட்டளைக்கலித்துறையில் எதுகையமைப்புச் சிறப்புடன் அமைந்திருக்கும் இந்நூலில் **'விதம்பர லோகன்'** (24) என்று தொடங்கும் பாடல் எதுகை நயமுடன் அமைந்திருக்கக் காணலாம். வடசொற் புணர்மொழி எதுகை இதன்கண் மிளிர்கின்றது. **'விதம்பர லோகன், சிதம்பரநாதன், சிதம்பரம் பதம்பரமானந்தம்** என அமைகின்றது. இத்தகைய எதுகை அமைப்புக் கடினமானது என்பதைப் பாப்புனை யாப்பினர் நன்கு அறிவர்.

## நிறைவுரை

தருமை முதற்குரவரது பாக்களின் இனிமையையும் பெருமையினையும் ஒரு சிறிய கட்டுரையில் அடக்க முயலல் **'கடலைக்குடத்துள் அடக்குவேன்'** என்றல் போல்வது. கடின யாப்பாகிய கட்டளைக் கலித்துறையில் இனிய சித்தாந்தக் கருத்துக்கள் பலவற்றை உவமை முதலிய நயங்களுடன் பாடியிருக்கும் திறன் குருவருளே! சமுதாயத்தில் நல்லுணர்வு வளர வேண்டுமெனில் குருவருள் விளக்கும் தலைமணி நூலாகிய ஞானப்பிரகாச மாலையைப் போற்றிப் பாராயணம் செய்தல் வேண்டும்.

**"குருவருள் போற்றிக் குவலயம் வளர்க"**

சிவம்



# கம்பன் காட்டிய கண்ணுதல் கடவுள்

வித்துவான் பெ. கு. வரதராசன், M. A., B. O L., B. T.
கிருஷ்ணகிரி

உலகில் அழியாது என்றுமுள்ள பொருள்கள் மூன்று என வேதாகமங்கள் கூறுகின்றன. அவை இறைவன், உயிர், தளை என்பனவாம்.

**சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்**
**மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன**
**ஆன்றதோர் தொல்பதி; ஆருயிர்த் தொகை**
**வான்றிகழ் தளையென வகுப்பர் அன்னவே.**

**—கந்தபுராணம்.**

இவற்றுள் உயிர் இறைவனல் படைக்கப்பட்ட பொருளன்று. இலது உள்ளதன்று; உளது இலதாகாது. இதனைச் சத்காரிய வாதமென்பர். இதுதான் நமது சைவசமயத்தின் உண்மை.

அற்பமான துன்பச் சேற்றில் ஆணவ இருளில் ஆன்மாக்கள் கட்டுண்டு அறிவின்றிக் கண்ணில்லாக் குழந்தைகள் போல் கிடந்தன. இறைவன் தனக்கேவுரிய அளப்பருங் கருணையால் உயிர்கட்கு உடம்பையும், உடம்பில் உள்ள கரணங்களையும், உலகத்தையும் உலக நுகர் பொருள்களையும் உண்டாக்கி வழங்கினன். குளிரால் நடுங்கும் ஒருவனுக்குச் சட்டை தருவது போலவும், கண்ணில்லாத ஒருவனுக்குக் கோல் தருவது போலவும் ஆகும்.

''காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போல்
கட்டுண்டிருந்த எமை வெளியில் விட்டு''

—தாயுமானவர்

ஆகவே இறைவன் என்று உள்ளானோ அன்றே உயிர்களாகிய நாமும் இருக்கின்றோம்.

'என்று நீ, அன்று நான் உன்னடிமையல்லவோ'

.. தாயுமானவர்

எல்லா நாட்டவரும் இறையென்று வணங்குகின்ற பரம்பொருள் சிவம். வள்ளுவர் செம்பொருள் என்பார்.

தெய்வம் சிவமே; சிவனருள் சமயம்
சைவம் சிவத்தொடு சம்பந்தம் என்றான்.

—சிற்றம்பல நாடிகள்.

சைவம் எல்லாச் சமயங்கட்கும் தாயகமாகவும் நாயகமாகவும் விளங்கும் ஒப்பில்லாத உண்மைச் சமயமாகும்.

'அரிது அரிது மானிடராதல் அரிது'

—ஒளவையார்.

அவ்வாறு பிறப்பதிலும் மக்கள் வாழும் நாட்டில் பிறப்பது அரிது. அதனினும் அரிது தெய்வம் உண்டு என்னும் நம்பிக்கையுடைய இந்திய நாட்டில் பிறப்பது அரிது. அதனினும் அரிது சிவத்தை வழிபடும் சைவ மரபில் பிறப்பது அரிது.

நரர்பயில் தேயந்தன்னில் நான்மறை பயிலா நாட்டில்
விரவுதல் ஒழிந்து தோன்றல் மிக்கபுண் ணியத்தானுகும்
தரையினில் கீழைவிட்டுத் தவஞ்செய் சாதியினில்வந்து
பரசம யங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணொணதே.

—சிவஞானசித்தியார்

**''வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பி**
**தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாம் சமயஞ்சாரும்**
**ஊழ் பெறல் அரிது''**

**—சிவஞானசித்தியார்**

இத்துணைச் சிறப்புப் பெற்ற சைவ சமயத்திலே நல்லூழ் வழிப் பிறந்தவரே கம்பர். ஏகம்பர் என்பது காஞ்சியிலே எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் திருநாமம். முதல் குறை அல்லது மருஉ என்ற இலக்கண விதிப்படி ஏகம்பர் தான் கம்பர் ஆனுர். சுந்தரமூர்த்தி சுவாமிகளும், அப்பர் அடிகளும், ஞானசம்பந்தப் பெருமானும் கச்சிக்கடவுளேக் கம்பன் என்றே குறிப்பிட்ட பாடல்களும் தேவாரத்துள் பல உள்ளன.

உவச்சர்குலம்-காளி கோயில்பூசாரி-கம்பரது தந்தையார். கம்பரை ஆதரித்த வள்ளலோ சடையப்பர். சடையன் என்பது சிவபெருமானேத் தான் குறிக்கும் என்பதை மறுப்பார் எவர்? கம்பரது ஒரே மகன் அம்பிகாபதி-சிவபெருமானுடைய திருப்பெயர்களுள் ஒன்று. இவ்வாய்வு கம்பர் சைவக் குடும்பத்தைச் சார்ந்தவர் என்பதை உறுதி செய்வதாகும்.

எனின் கம்பர் ஏன் வைணவக்காதையை எழுதினுர் என்ற ஓர் ஐயந்தோன்றுவது இயல்பே. பூனே பாற்கடலே நாவால் சுவைத்துக் குடிக்க விரும்புவது போல் இராம காதையை எழுத வேண்டும் என்ற ஆசையால் தொடங்கினேன் என்கின்முர். இது கம்பர் கூற்று. இராமாயணம் எழுத ஆசை காரணமாயிற்று. இவ்வாசை கம்பருக்கு சமயக் காழ்ப்பில்லே என்பதைத் தான் வலியுறுத்துகின்றது. அன்றிச் சைவத்தில் ஈடுபாடில்லே என்ற முடிவிற்கு வருதல் அன்று.

சைவத்தையும், வைணவத்தையும் சிறிதும் வேறுபாடு இன்றிப் பேசும் சமரசக் கவி - கல்வியில் பெரியனன்றே?

காவியத்தலைவன் இராமனை உயர்த்திக் காட்டுகின்றார். சிவனையும் திருமாலையும் ஒன்றாகக் கருதிச் சிறப்பாக மதிக்கும் புலவன் காவியத்தலைவனைப் பாராட்டுவது காவிய மரபாகும். மரபு கெடாவண்ணம் சிவபெருமானையும் புகழ்ந்து பேசும் இடங்கள் ஏராளமுண்டு. சிவனையும், சிவ பெருமானது அரிய செயல்களையும் இராமகாதை முழுதும் காணலாம்.

சிவபெருமானைக் கதைப் போக்கில் கூறுவதைக் காட்டி லும் கதாப்பாத்திரங்களின் வாயிலாக அறிமுகப்படுத்தும் சிறப்பு போற்றத் தக்கதாகும்.

அநுமன் சுக்கிரீவனிடம் இராமனது பெருமையைக் கூறுகின்றான். இராமனது வில்லொடித்த செய்தியைக் கேள்விப்பட்டுள்ளான். இராமன் ஒடித்த வில்லினது சிறப் பையும் அறிந்தவன் அநுமன். ஆகவே சுக்கிரீவனிடம் 'பொன்மயமான அவ்வில்லினை ஒடித்தவர் இவர்தான் எனின் இவர் திருமாலே' எனக் கூறுகின்றான். சொல்லின் செல்வன் மட்டுமல்லன் - சிந்தனைவல்லான். அவன் கூறு கின்றான். இவ்வில் சிவபெருமானுடைய வில்லல்லவா? இவ் வில்லையுடையவனது ஆற்றலை அவ்வில் மீது ஏற்றுகின்றான்- துன்புறுத்தும் மிக்க வலியுடைய முப்புரத்தைத் தீயால் எரியும்படி கோபித்தவன்: கடுங்கோபமுடைய யமனைக் காலால் உதைத்து அவன் வாழ்நாளை அழித்தவன் - 'காலனை யழித்து மார்க்கண்டேயனை வாழ வைத்தவன்' என்பது இங்கு தொனிப்பதாகும்.

வாலியால் வந்த துன்பம் அழிவுறும். இராமபிரானது நட்பால் சுக்கிரீவன் வாழ்வு பெறப்போகிறான் என்ற செய்தி களை முன்னே அறிவிப்பது போல இப்பாடலைக் கம்பர் அநுமன் வாயிலாகக் கூறுகின்றார்.

**செறுக்கும் வன்திறல் திரிபுரம் தீயெழச் சினவி**
**கறுக்கும் வெஞ்சினக் காலன்தன் காலமும் காலால்**

அறுக்கும் புங்கவன் ஆண்டபேர் ஆடகத்தனிவில்
இறுக்கும் தன்மையம் மாயவற் கன்றியும் எளிதோ?

அடுத்து, கவிக்கூற்ருக ஒரு நயத்தினைக் காண்போம்.

வானர சேனைகள் கடற்கரையை அடைந்தன. கடலைத் தாண்ட அநுமனைத் தேர்ந்தனர். அநுமன் மஹேந்திரமலை மீது நின்று கடலைக் காண்கின்ருன். தொலைவில் தோன்றிய இலங்காபுரியினையும் பார்க்கின்ருன். கடலைக் கடந்து செல்ல அம்மலை மீது நின்று ஓர் உந்து உந்துகின்ருன். அம்மலை அநுமனது பேருருவப் பாரம் தாங்கமாட்டாது நெக்குவிடுகிறது. மலை பிளவுபட்டு வெடிப்பேற்படுகிறது. இவ்வதிர்ச்சியால் தேவர்களை அவர்களது மயில் போலும் சாயலையுடைய மனைவியர் அச்சத்தால் இறுகத் தழுவிக் கொண்டனர். இச்செயலுக்கு ஓர் உவமை தருகின்ருர் கம்பர். அன்று இராவணன் கயிலையைத் தூக்கியபோது மலையசைவதால் நடுக்குற்ற உமாதேவி சிவபெருமானைத் தனதூடலையும் விட்டுத் தழுவிக் கொண்டாற்போல என்று. இதில் காட்டும் இன்னெரு நயம் உமாதேவிபோல தேவப்பெண்டிர் ஒவ்வொருவரும் தத்தம் கணவன்மாரைத் தழுவிக் கொண்டனர். ஆகவே தேவலோகத்தில் உள்ளார் அனைவரும் சிவனும் உமையுமாகவே காட்சியளித்தனர் என்பதாம். கம்பர் தம் உவமையணியால் இக்கருத்தினைச் சிறப்பிக்கின்ற பாடலை இதோ பாருங்கள்.

வெயில்இயல் குன்றம் கீண்டு
 வெடித்தலும், நடுக்கம் எய்தி,
மயில்இயல் தேவி மார்கள்
 தழீஇக்கொளப் பொலிந்த வானோர்;
அயில்எயிற்று அரக்கன் அள்ளத்
 திரிந்தநாள், அணங்கு புல்லக்
கயிலையில் இருந்த தேவை,
 தனித்தனிக் கடுத்தல் செய்தார்

அடுத்ததோர் நயம் :

அநுமன் பெருவடிவங் கொண்டு இலங்கையை நோக்கிச் செல்ல ஆயத்தமாகவிருக்கின்றான். மஹேந்திர மலைமீதிருந்து ஓர் இமயமலையே செல்வது போலத் தோன்றுகிறது. இமய மலை இலங்கையை நோக்கிச் செல்லுவதேன்! கம்பர் காரணம் கற்பிக்கின்றார். அன்று இராவணன் அசைத்த பொழுது சிவபெருமான் தன் பெருவிரலால் அழுத்த இராவணன் இமயமலையடியில் சிக்குண்டு வருந்தினான். அவ் வருத்தம் போதாது. இன்னுமவனை அமுக்குதல் வேண்டும் என்ற விருப்பத்துடன் செல்லுகிறது என்று தன் குறிப்பை ஏற்றிச் சொல்லுகின்ற திறம் பாராட்டுதற்குரியதாம். இன்னுங் கூட ஒரு நயத்தினைக் காண்போம். தாக்கப் பட்டது இமயம்; தண்டனை தந்ததோ சிவபெருமான். நமது பங்கு என்ன என நினைத்த கயிலை சிவபெருமானை விட்டு விட்டுத் தான் மட்டும் செல்லுகிறது என்பதாக அப்பாடல் சுட்டிக்காட்டுகிறது. அப்பாடலை நோக்குங்கள்.

**விண்ணவர் ஏத்த வேத**
**முனிவரர் வியந்து வாழ்த்த,**
**மண்ணவர் இறைஞ்ச, செல்லும்**
**மாருதி மறம்உட் கூர,**
**'அண்ணல்வாள் அரக்கன் தன்னை**
**அமுக்குவன் இன்னும்' என்னா**
**கண்ணுதல் ஒழியச் செல்லும்**
**கைலைஅம் கிரியும் ஒத்தான்.**

பாலகாண்டத்துள் ஆற்றுப் படலத்துள் ஒரு செய்தி யைச் சொல்லுகின்றார் கம்பர்.

மழை மேகமின்றி வான் வெண்மையாகக் காட்சியளிக் கின்றது. இந்த வெண்மையான வெளிக்காட்சியைக் கம்பர் வருணிக்கின்றார். மேனி முழுதும் வெண்ணீறணிந்த சிவ பெருமான் தோற்றம் போல என்று.

**"நீறணிந்த கடவுள் நிறத்த வான்"**

தன்மனதிலே ஊன்றியதாக உள்ள எண்ணங்களே வாக்கில் வெளிப்படுவன. சேரமான் பெருமாள் நாயனர் தம் பொன்வண்ணத்தந்தாதியில்

**''விரிகின்ற ஞாயிறு போன்றது மேனி,**
**அஞ்ஞாயிறு சூழ்ந்**
**தெரிகின்ற வெங்கதிர் ஒத்தது செஞ்சடை;**
**அச்சடைக் கீழ்ச்சரிகின்ற**
**காரிருள் போன்றது கண்டம்**
**அக்காரிருட் கீழ்ப்**
**புரிகின்ற வெண்முகில் போன்றுளதால்**
**எந்தை ஒண்பொடியே''**

இப்படியொரு பாடலைச் சொல்லுகின்ருர். இரண்டையும் ஒப்பு நோக்குக.

காவிய நாயகியை உயர்த்துவது போலவும் கதைத் தொடர்பு கெடாது சிவபெருமானை உயர்த்துவது போலவும் அநுமனைக் காட்டும் ஓர் அற்புதமான இடம். அநுமன் இலங்காபுரி சென்ருன். அவனை அரக்கர் பலர் காண்கின்றனர். அவனது வீரதீரச் செயல்களைக் கண்டு வியந்து இவன் யாராக இருக்கலாம் என யூகிக்கின்றனர். அரக்கர்களுடைய யூகமும் சரியாகவே அமைகின்றது என்று கற்பார் உணரும் வண்ணம் கம்பர் கவி இங்கு அமைகின்றது.

சீதை கற்பில் சிறந்தவள். அக்கற்பின் வண்மை சிவ பெருமானை இலங்கைக்கு வரப்பணித்தது. சிவபெருமான் இலங்கைக்குச் செல்வதற்குரிய தோற்றம் இப்படித்தான் இருக்கவேண்டுமென்று கூரிய பற்களோடு கூடிய அநும வடிவத்தில் சென்ருர். அநுமனை அனைவரும் சிவபெருமானே இவ்வடிவில் வந்துள்ளதாகக் கருதினர்.

**கயிலையின் ஒருதனிக் கணிச்சி வானவன்**
**மயில்இயல் சீதைதன் கற்பின் மாட்சியால்**

எயிலுடைத் திருநகர்ச் சிதைப்ப எய்தினன்
அயில்எயிற்று ஒருகுரங்கு ஆய்என் பார்பலர்.

மிதிலைக் காட்சிப் படலத்துள் ஓர் இயற்கை வருணனை. சூரியன் தனது கிரணங்களை விரிக்கின்றான். வானத்தின் மீது சூரிய கிரணங்கள் பரவுதல் வானத்தையளாவி ஓங்கி உயர்ந்த சிவபெருமானது செஞ்சடைவிரித்தலை யொக்கும். கின்னரர்கள் இசைபாட உலகோர் வழிபாடு செய்ய, முனிவர்களும் வேதியர்களும் கரம் கூப்பித் தொழ, கடல் தன் அலைகளால் முழவினை முழக்க, வானரங்கில் சிவபெருமான் நடனமாடுகின்றான் என ஓர் அரங்கினைக் கம்பர் நம் கண் முன் கொண்டு வந்து காட்டுகின்றார். பொருளறிந்து பாடலைப் படிக்கும் போது நம் கண்முன் அக்காட்சி தோன்றுகிறது.

எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட, உலகம் ஏத்த
விண்ணவரும், முனிவரரும் வேதியரும்
கரம்குவிப்ப வேலை என்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கில்
நடம்புரிவான் இரவி யான
கண்ணுதல்வா னவன்கனகச் சடை விரிந்தால்
எனவிரிந்த கதிர்கள் எல்லாம்.

இவைபோல பலப்பல. எதனை விளக்குவது எதனை விடுவது. விரிக்கின் பெருகுமாகையால் குறிப்புகள் சில தந்து இவ்வாய்வுக் கட்டுரையினை முடித்துக் கொள்ள ஆசைப்படுகின்றேன். சிவபெருமானைக் கண்ணுதற் கடவுள் என்றும் முக்கணன் என்றும், கங்கையணிந்தான் என்றும், உமையொரு பாகன் என்றும், நீலகண்டன் என்றும், தோற்றப் பொலிவினடிப்படையில் பல இடங்களில் கம்பர் தம் காவியத்துள் குறிப்பிடுகின்றார். திரிபுரமெரித்தவன், காலனைக் காய்ந்தோன், மன்மதனை அழித்தவன் எனச் சிவபெருமான் வீரச்செயல்களைக் குறிப்பிடும் இடங்கள் பல. மும்மூர்த்திகள்

எனக் கூறி அவர்களுள் முதல் சிவனே எனக் குறிப்பிடுகின்ற இடங்கள் பல.

இராமபிரானையே ஈசனும் ஒருவன் மூர்த்தி என்று சிறப்பிக்கின்ற இடங்களும் உண்டு. ஈசன் என்ற சொல்லைத் தலைவன் என்ற பொருளில் கையாண்ட இடங்களும் உள.

காவியத்துள் சிவபெருமானை கவி தம் வாக்காலின்றி பிற பாத்திரங்களின் வாயிலாகவும் பெருமைபடப் பேசியுள்ளார். வீடணன், இராவணன், இந்திரசித்து, மண்டோதரி, விசுவாமித்திரன், இராமன், அநுமன் ஆகியோருடைய கூற்றால் வெளிப்படும் சிவபெருமானின் பெருமைகள் அளவிலடங்கா.

பத்தாயிரம் பாடல்களுள் முந்நூற்றுத் தொண்ணூற்று ஐந்து இடங்களில் கம்பர் சிவபெருமானைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். ஆசைபற்றிப் பாடிய இராம காதையில் தொடர்ந்து முப்பது பாடல்களைக் கூட சிவபெருமான் நினைவின்றிப் பாடக் கம்பரால் முடியவில்லை. மொத்தப் பாடல்களில் நான்கு விழுக்காடு எனின் இருபத்தைந்து பாடல்களுக்கு ஒருமுறையேனும் சிவ நினைவோடு பாடிய பாடல்கள் இடம் பெறுகின்றன. இராமாயணம் சமயக் காழ்ப்பில்லாத சமரசக் காவியம்.

கம்பன் வாழ்க! கம்பன் இராமாயணம் வாழ்க !!

சிவம்



உ
சிவமயம்

# ஆங்கிலமாதுக்கு அருள்புரிந்த அண்ணல் சிவபெருமான்

நாடோடி

உஜ்ஜயினி நகருக்குப் பக்கத்திலுள்ள ஆகர் என்னும் நகருக்குப் பக்கத்தில் ஒரு சிவன் கோவில் இருக்கிறது. இந்தக் கோவிலுக்குப் பக்கத்திலுள்ள கண்டோன்மெண்டில் தான் ஆங்கிலத் துருப்புகளின் வீடுகள் இருந்தன.

1879-ம் ஆண்டு, அக்டோபர் மாதம் இந்திய - ஆப்கானிய யுத்தம் ஆரம்பித்தது. அப்பொழுது நம் நாட்டில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இருந்தது. பிரிட்டிஷார் இந்தியப் படைகளின் உதவி கொண்டு ஆப்கானியரை எதிர்த்து நின்றனர். ஆனல் ஆப்கானியர் வெகு வேகமாக முன்னேறவே, பிரிட்டிஷ் துருப்புக்கள் உஜ்ஜயினிக்குப் பக்கத்தில் இருந்த கண்டோன்மென்ட் துருப்புக்களையும் போர்முனைக்கு அனுப்பவேண்டி வந்தது. அப்பொழுது துருப்புகளுக்குத் தலைவராக அங்கிருந்த லெப்டினன்ட் மார்ட்டின் என்னும் ஆங்கிலேயரும் செல்லவேண்டி வந்தது. அவருடைய மனைவி ஸ்ரீமதி மார்ட்டின் கண்டோன்மெண்டிலேயே தங்கினர்.

சில நாட்களுக்கு ஸ்ரீமதி மார்ட்டினுக்குத் தம் கணவரிடமிருந்து கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. திடீரென்று கடிதங்கள் நின்றுபோகவே அவருக்குக் கவலையாகி விட்டது. அத்துடன் அந்தச்சமயத்தில் ஆப்கன் துருப்புகள் வெகு வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கின்றன என்றும், அவை பிரிட்டிஷ் துருப்புக்களை வெகு கொடூரமாக

நடத்துகின்றன என்றும் செய்திகள் கிடைத்தன. தம் கணவருக்கு என்ன ஆபத்தோ என்னவோ என்று ஸ்ரீமதி மார்ட்டின் கவலைப் பட்டார்.

ஒரு நாள் அவர் தம் குதிரையின் மீதேறிச் சென்று கொண்டு இருந்த போது அந்தச் சிவன் கோவிலைக் கண்டார். மக்கள் உள்ளே செல்வதையும், உள்ளே சென்று வழிபட்டுத் திரும்புவதையும் கண்டார்.

அவர் தம் குதிரையை அங்கிருந்த ஒரு மரத்தோடு கட்டி விட்டு, கோவிலுக்குள்ளே சென்றார்.

ஓர் ஆங்கில மாது கோவிலுக்குள் வந்ததைக் கண்டு பூஜாரி அவரைத் தேடிக்கொண்டு வந்தார்.

"இது என்ன கோவில்? இங்கு வந்து மக்கள் என்ன செய்கிறார்கள்" என்று ஸ்ரீமதி மார்ட்டின் பூஜாரியிடம் கேட்டார்.

"இது பைஜநாத் சுவாமியின் கோவில், அதாவது சிவன் கோவில். இங்கு மக்களுக்கு என்ன குறை உண்டோ அதைப் போக்க வேண்டும் என்று பகவானிடம் பூஜை செய்வார்கள். பகவானும் அவர்களுடைய குறைகளை நீக்குவார்" என்று சொன்னார் பூஜாரி.

"அப்படியானால் நான் சுவாமிக்குப் பூஜை செய்தால் அவர் என் மனக்கவலையைப் போக்குவாரா?" என்று ஸ்ரீமதி மார்ட்டின் கேட்டார்.

"யார் பகவானிடம் பக்தி செய்கிறார்களோ அவர்கள் மனக்கவலையை அவர் நிச்சயமாகப் போக்குவார்."

"என் கணவர் போர்முனைக்குச் சென்றிருக்கிறார். அவர் பத்திரமாகத் திரும்ப வேண்டுமே என்று எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது. இந்த சுவாமி என் கணவரைக் காப்பாற்றுவாரா?"

நீங்கள் 'நமசிவாய' என்ற மந்திரத்தை ஜபித்துக் கொண்டே இருங்கள். பகவானுக்கு ருத்ராபிஷேகம் செய்து வையுங்கள். பகவான் கட்டாயம் உங்கள் கணவரைக் காப்பாற்றுவார்'' என்ருர் பூஜாரி.

ஸ்ரீமதி மார்ட்டினுக்குச் சிவன் பேரில் பக்தி உண்டாகி விட்டது. பதினேரு உத்தமர்களைக் கொண்டு இந்த அபிஷேகம் பதினேரு நாள் நடந்தது. தினம் விடியற் காலையில் ஸ்நானம் செய்து விட்டு, ஸ்ரீமதி மார்ட்டின் இந்தப் பூஜையில் கலந்து கொண்டார்.

பதினேராம் நாள், பூஜையில் கலந்து கொண்டவர்கட்கெல்லாம் அவர் அன்னமும், தட்சிணையும் கொடுத்து விட்டு, வீடு திரும்பினது தான் தாமதம்; "அம்மா! போர் முனையிலிருந்து உங்களுக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது'' என்று வேலைக்காரன் ஒரு கடிதத்தைக் கொடுத்தான்.

ஸ்ரீமதி மார்ட்டின் அதை வெகு ஆவலாகப் பிரித்துப் பார்த்தார். அது அவர் கணவர் எழுதியிருந்த கடிதம் "சிவ பெருமானே! உன் கருணையே கருணை! என் கணவரை உயிரோடு வைத்திருக்கிருயே!'' என்று நினைத்துக்கொண்டு ஸ்ரீமதி மார்ட்டின் கடிதத்தைப் பார்த்தார்.

அவருடைய கணவர் எழுதியிருந்தார்:

"நான் சௌக்கியமாக இருக்கிறேன். ஆகவே என்னைப் பற்றிக் கவலைப்படாதே! எத்தனையோ ஆபத்துக்களில் சிக்கியும் எனக்கு ஒன்றும் நிகழவில்லை. பதினேரு நாட்களுக்கு எங்களை நாலாபுறமும் எதிரி சேனை சூழ்ந்து கொண்டது. அன்று நான் நிச்சயமாக எதிரிகளின் கையில் சிக்கிக் கொல்லப்படுவேன் என்ற நிலை இருந்தது. அப்பொழுது ஆச்சரியமான ஒரு சம்பவம் நிகழ்ந்தது. யாரோ தாடியும் ஜடையும் உள்ள ஒரு சந்நியாசி, கையில் திரிசூலம் ஏந்தியவர் என்னைக் காப்பாற்றினர். அவர் அடிக்கடி இந்த

மாதிரி ஆபத்துச் சமயங்களில் என்னை எத்தனையோ தடவை காப்பாற்றினர். நாங்கள் வெற்றி கொண்டோம்; நான் சீக்கிரம் வீடு திரும்புவேன்!''

சில நாட்களில் லெப்டினன்ட் மார்ட்டின் ஊர் திரும்பினர். திருமதி மார்ட்டின் நடந்த விஷயங்களைச் சொன்னபோது, காப்பாற்றிய அந்தச் சந்நியாசி சிவ பெருமான் தான் என்பதை மார்ட்டின் உணர்ந்தார்.

தம்பதிகள் இருவரும் சிவ பக்தர்களாயினர். தினம் கோவிலுக்குப்போவதை வழக்கமாக வைத்துக் கொண்டார்கள். ஒரு நாள், கோவில் ஒரு பக்கம் ஜீரணமாக இருப்பதைக் கண்ட மார்ட்டின் அதற்குப் பல ஆயிரம் ரூபாய் கொடுத்து, ஜீரணோத்தாரணம் செய்யச் சொன்னர்.

**பதிப்பாசிரியர் குறிப்பு:** இது லெப்டினன்ட் மார்ட்டின் என்ற தலைப்பில் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் 1981 வது ஆண்டு மணிவிழா மலரில் வெளியான விஷயம். அப்பதிப்பகத்துக்கு நன்றி தெரிவித்து இங்கு வெளியிடுகிறோம் சிவ பிரானின் அவ்யாஜமான கருணைக்கு அனைவரும் பாத்திரரே என்பதை அறிந்து அப்பெருமானிடம் திடமான பக்தியும் நம்பிக்கையும் கொள்வோமாக.

---

**சிவபுண்ணியத்தை வளர்த்துக்கொள்**

எந்த, எத்தகைய துன்பம் வந்தாலும் ஈச்வரனை நிந்தித்து மேலும் பாவத்தைத் தேடிக் கொள்ளாதே. உன்னுடைய முன்வினையின் பலன் என்று நினைத்து 'சிவசிவ' என்று சொல்லிக்கிட. குறைந்த சிவபுண்ணியம் செய்திருக்கிறாய் என்று நினைத்து மேலும் மேலும் சிவபெருமானை வணங்கிச் சிவபுண்ணியத்தை வளர்த்துக்கொள்.

—சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்கள்.

—உதவியவர்: திரு N. K. S. ராஜகோபால முதலியார், சங்கரன் கோவில்.

---

ഉ

# திருப்பனந்தாள் தாடகையீச்சரம்

சைவமாமணி
வித்துவான் பொன். முருகையன்,
திருப்பனந்தாள்

இத்தலம் சோழ நாட்டில் காவிரி ஆற்றின் வடபால் உள்ள தலங்களுள் ஒன்ருகும். திருஞானசம்பந்தரால் பாடப் பெற்ற பெருமையினையுடையது. திருக்கயிலாய பரம்பரை திருத்தருமபுர ஆதீனத்தின் பரிபாலனத்துக்குட் பட்ட இருபத்தேழு தேவஸ்தானங்களில் ஒன்ருக விளங்கி வருகிறது.

**அமைவிடம்:**—திருப்பனந்தாள் என்னும் பெயர் பெற்ற இவ்வூர், கும்பகோணத்திலிருந்து சென்னை செல்லும் பெரு வழியில் கும்பகோணத்திற்கு வடகிழக்கில் 12 கல் தொலை வில் அமைந்துள்ளது. மாயூரத்திலிருந்து குத்தாலம், ஆடு துறை வழியாகப் பேருந்து மூலம் இவ்வூரையடையலாம்.

**ஊர்ச்சிறப்பு:-** "தண்பொழில் சூழ் பனந்தாள்" என்ற ஞானசம்பந்தர் திருவாக்கிற்கேற்ப நாற்புறங்களிலும் சோலை கள் சூழப் பெற்றது. காவிரியின் கிளை நதியாகிய மண்ணி யாறு பாய்வதால் சிறந்த வளம் பெற்று விளங்குகிறது. இவ்வூரைச் சுற்றிலும் பனை மரங்கள் நிறைந்து உள்ளதால் இவ்வூருக்குத் திருப்பனந்தாள் என்ற பெயர் ஏற்பட்டது. திரு + பனை + தாள் = (அழகிய பனை மரத்தின் அடிப்பகுதி.) இவ்வூரில் பனைமரத்தின் கீழே சிவபெருமான் எழுந்தருளிய தால் இப்பெயர் பெற்றது. வடமொழியில் தாலவனம் என்று சிறப்பிக்கப்படுகிறது. (தாலம்—பனை. வனம் காடு) இத் தலம் ஏற்பட்ட காலத்தில் இவ்வூர் பனை மரங்கள் நிறைந்த

காடாக இருந்தமை புலப்படுகிறது. இத்தலத்திற்குப் பனசை, பனந்தாள் என்ற பெயர்களும் வழங்கி வருகின்றன.

**ஊர்அமைப்பு:-** திருக்கோயில் ஊரின் நடுவில் அமைந்துள்ளது, தாடகை என்பவளால் வழிபாடு செய்யப்பட்ட தலம் ஆகையால் இக்கோயிலுக்கு 'தாடகையீச்சரம்' என்ற பெயர் வழங்கி வருகிறது. திருக்கோயிலைச் சுற்றி திருச் சுற்றுகளையடுத்து நான்கு புறங்களிலும் மடவிளாகங்கள் அமைந்துள்ளன. அவைகளையடுத்து தேரோடும் பெரு வீதிகள் நான்கும் அமைந்துள்ளன. நான்கு வீதிகளின் மூலைகளிலும் நான்கு விநாயகர் கோயில்கள் உள்ளன. மேலவீதி 'இராசகம்பீரன் திருவீதி' எனக் கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ளது.

**கோவில்அமைப்பு:-** ஊரின் நடுவில் அமைந்துள்ள இக் கோயிலின் பரப்பு 'இருமா அரைக்காணி முந்திரிகைக் கீழ் நாலுமா நிலம்' எனக் கல்வெட்டு கூறுகின்றது. மேற்கு நோக்கிய சந்நிதியினையுடைய இக்கோயிலின் இராச கோபுரம் மிகப் பொலிவுடனும், சித்திர வேலைப்பாட்டு டனும், 7 அடுக்குகளுடனும் வானுற ஓங்கி நிற்கிறது. இராச கோபுரத்தையடுத்துள்ள பதினாறு கால் மண்டபமும், வட பால் உள்ள வாகனமண்டபமும் இரண்டாவது கோபுரத்தை யடுத்துள்ள வௌவால் நெற்றி மண்டபமும் சிற்ப ஓவிய மேம்பாடு உடையனவாய்த் திகழ்கின்றன. கோவிலின் மேற் பால் ஒரு கோபுரமும் உண்டு. சுவாமி சந்நிதியைச் சுற்றி உள் பிராகாரங்களும், அதனை அடுத்து வெளிப் பிராகாரங் களும் செம்மையுற அமைக்கப் பெற்றுப் பொலிவுடன் விளங்குகின்றன.

**இறைவன் திருப்பெயர்:-** இறைவனின் பெயர் ஸ்ரீ அருண ஜடேச்வரர். செஞ்சடையப்பர் என்றும் வழங்குவர்.

**இறைவி திருப்பெயர்:-** இறைவியின் பெயர் பிரகந்நாயகி. பெரியநாயகி என்றும் வழங்குவர்.

தல வரலாறு:- தாடகை மகப்பேறு விரும்பித் தவம் இயற்றுங்கால் பிரமதேவன் தோன்றி, 'நீ தாலவனம் சென்று பூசித்து வழிபட்டால் விரும்பிய பேற்றைப் பெறுவாய்' எனப் பணித்தனன். தாடகையும் அவ்வாறே இத்தலத்திற்கு வந்து நியமம் தவறாது விதிப்படி இறைவனைப் பூசித்து வந்தாள். ஒரு நாள் பூஜை முடிவில் மாலையைச் சாத்த எழுந்த காலத்து அவள் அன்பை வெளிப்படுத்த இறைவன் அவளுடைய ஆடையை நெகிழச் செய்தனன். தாடகையும் ஆடையை இரு முழங்கைகளாலும் இடுக்கிக் கொண்டு அண்ணலே! யாது செய்வேன்; எவ்வாறாயினும் இம்மாலையை ஏற்று அடியேனை ஆதரித்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தாள். இறைவனும் தனது திருமுடி சாய்த்து மாலையினை ஏற்றுக் கொண்டனன். உடனே அவளுக்குப் பதினாறு கரங்கள் தோன்றின. அவளும் பெருமானது கருணையை வியந்து தோத்திரிக்கப் பெருமானும் இடபாரூடராய்க் காட்சி தந்தனன். அப்போது அவள் பணிந்து வணங்கி, 'அடியேனுக்கு மகப்பேறு அளிப்பதோடு அடியேனுக்குத் தேவரீர் அருள் பாலித்ததை யாவரும் நினைவு கூர்தற்காக இத்தலத்துக்கு அடியேன் பெயர் வழங்கி வர வேண்டும்? என விண்ணப்பித்தனள். பரமனும் 'அவ்வாறே ஆகுக' எனப் பணித்து மறைந்தனன். தாடகையும் ஆலயத்திற்கு வடபால் ஓர் தீர்த்தமமைத்துத் தென் கரையில் வீரியம்மனையும், கீழ்க் கரையில் வைரவரையும் காவலாகப் பிரதிட்டித்து வணங்கி மகப்பேற்றையும் அடைந்தாள்.

இத்தலத்தின் மீது மிகுந்த பற்று கொண்ட சோழ அரசனாகிய வீரசேனனென்பவன், இத்தலத்திறைவன் தாடகையின் அன்புக்காகத் திருமுடி சாய்ந்திருப்பதைக் கேள்வியுற்று இறைவன் திருமுடியை நிமிர்த்தி வழிபட எண்ணினான். யானை குதிரை முதலியவைகளைக் கட்டி இழுப்பித்தான். முயற்சி பயனளிக்கவில்லை கவலைக்கடலில் ஆழ்ந்தான். இச்செய்தி திருக்கடவூர் குங்குலியக்கலய நாயனாருக்கு எட்டியது. அவரும் இத்தலத்திற்கு வந்தார்.

தாமும் அத்திருப்பணியில் ஈடுபட விரும்பினர். யானை களை அவிழ்க்கச் செய்து தம் கழுத்தில் அரிகண்டமும் இறை வர் கழுத்தில் மெல்லிய கயிறும் பூட்டி இழுத்தார். அரி கண்டம் கழுத்தை அறுக்கத் தொடங்கியது. உடனே பெரு மான் தமது திருக்கரத்தைத் தோற்றி சிரசின் மீது வைத் தருள, அறுபட்ட சிரசும் பொருந்தியது. இறைவன் திருமுடி யும் நிமிர்ந்தது. அது கண்ட அரசன் அன்புக் கயிற்றால் நாயனர் இழுத்து நிமிர்த்ததைக் கண்டான். வணங்கினன்.

தன்னுடைய முயற்சிக்குத்தலை நிமிராது, குங்குலியக் கலயனர் அன்புக்குத் தலை நிமிர்ந்த இறைவனின் செயல் கண்ட சோழ மன்னன் மனம் வருத்தமடைந்தாகவும், அதனல் செஞ்சடையப்பரை வழிபடுதலைத் தவிர்த்து, திருப் பனந்தாளின் மேற்கே ஒரு இடத்தில் இதே போன்ற ஒரு பெருஞ் சிவாலயத்தை எழுப்பி வழிபட்டதாகவும் ஒரு செவிவழிக் கதை வழங்கி வருகிறது. பிற்காலத்தில் ஏற் பட்ட மண்மாரியால் அச்சிவாலயம் அழிந்ததாகவும் கூறப் படுகிறது. (இந்தக் கதைக்கு சேக்கிழார் பெரிய புராணத் தில் ஆதரவு இல்லை.)

**தலப்பெருமை:**—இத்தலம் உமையம்மையார் சிவ பூசை யியற்றி ஞானேபதேசம் பெற்ற சிறப்புடையது. தாழை மலரைச் சான்று காட்டி சிவபெருமானின் திருமுடியைக் கண்டதாகப் பொய் கூறிய பிரமனுக்கு அதனலேற்பட்ட பாதகத்தைப் போக்கியது. இந்திரனுக்கு விருத்திரா சுரனைக்கொன்ற பாதகமும், கௌதமர் மனைவியைக் களவாற் சேர்ந்த தோஷமும் போக்கி அருள் பாலித்தது. பிருந்தை யைப் புணர்ந்த திருமாலுக்கு அருள் செய்தது. தக்கனுடன் கூடிச் சிவத்துரோகத்தில் ஈடுபட்ட சூரியனுக்கு அத் துரோகத்தால் உண்டான பாவத்தைத் தீர்த்தது.

குருபத்தினியைக் கூடின சந்திரனுக்கு மாபாதகத்தை நீக்கியது. அகத்தியரால் பூசித்து வழிபடப் பெற்றது.

ஆதிசேடனுல் பூசிக்கப் பெற்றது. தாடகை சிவ பூசையின் போது அணிவித்த மாலையை ஏற்றுக் கொள்ளத் திருமுடி சாய்த்தருளிய இறைவனைக் குங்குலியக்கலய நாயனுர் அன்புக் கயிற்ருல் இழுத்து நிமிர்த்தி வழிபட்டது. வாசுகியின் மகளாகிய சுமதி என்னும் நாக கன்னிகையால் பூசிக்கப் பெற்றது மேற்கூறிய ஒவ்வொருவரும் தத்தம் பெயரால் தீர்த்தங்கள் அமைத்து சிவலிங்கப் பிரதிட்டையும் செய்துள்ள பெருமை மிக்கது. அவ்வத் தீர்த்தங்களில் அன்போடு மூழ்கியவர்களின் பவப்பிணி மாய்த்துப் பெரும் பேறடையச் செய்வது இத்தலம்.

**வழிபட்டோர்கள்:** பிரமன், திருமால், இந்திரன், ஐராவதம் அகத்தியர், சந்திரன். சூரியன், ஆதிசேடன், நாககன்னிகை, தர்மசேனன், ஏக்ஞகுப்தன், தாடகை குங்குலியக்கலய நாயனுர், சங்குகன்னன், நாகுகன்னன் முதலியோர் பலரும் வழிபட்டுப் பேறு பெற்ருர்கள்.

**அம்மையார் ஞாஞேபதேசம் பெற்றது:** — முன்னெரு கற்பத்தில் அம்மையார் இறைவனை வணங்கி ஞாஞேபதேசம் புரிந்தருளல் வேண்டும்' எனப் பிரார்த்திக்க, இறைவன் ' நீ தாலவனம் சென்று எம்மை பூசித்தால் அருள் செய்வோம்'' என்று உரைத்தனர். அம்மையாரும் இறைவன் ஆணைப்படி இத்தலத்து வந்து எதிர்முகமாக வடபுறத்தமர்ந்து தவஞ் செய்தார். இறைவன் காட்சியளித்து அம்மையாருக்கு ஞானத்தை உபதேசித்து அருள் செய்தனர். இவ்வுண்மையினையே இறைவர் மேற்குமுகமாக எழுந்தருளியிருப்பதும் இறைவி கிழக்கு முகமாக எழுந்தருளி இருப்பதும் வலியுறுத்தும். அம்மையார் உபதேசம் பெறுமுன் பாலாம்பிகை எனவும், உபதேசம் பெற்றபின் பிரகந்நாயகி எனவும் பெயர் வழங்கப் பெறுகின்ருர்.

**ஐராவதம்:**— அசுரர்களின் அல்லலுக்கு ஆற்ருராகிய அமரர்கள் ஓடிவந்து இந்திரனிடம் முறையிட்டார்கள்.

செவியேற்ற இந்திரன் 'போர் புரிதற்கு ஐராவதத்தைக் கொண்டு வருக' எனக்கூறினன். ஐராவதம் போகத்தை விரும்பி மண்ணுலகத்துள்ள மந்தரமலையை அடைந்திருக்கிறது என்பதை உணர்ந்த இந்திரன், தனது சமயத்துக்கு உதவாத காரணத்தால் 'தெய்வ வலிமையையிழந்து காட்டானையாகுக.' எனச் சபித்தான். ஐராவதமும் மண்ணுலகத்தில் காட்டானையாகத் திரிந்தது. தன் எதிர்பட்ட நாரதரை வணங்கி, அவராணைப்படியே இத்தலத்திற்கு வந்தது. தாலவனநாதரை வணங்கித் தன் சாபத்தைப் போக்கிக் கொண்டது. தன் பெயரினல் மேற்பால் ஓர் தடாகமும் சிவலிங்கப் பிரதிட்டையும் செய்து பூசித்துத் தன்னுலகடைந்தது (ஐராவத ஆனை தங்கி இறைவனை வணங்கிய இடம் ''ஆனைகோயில்'' என்று தற்போது வழங்கப் படுகிறது. இது செஞ்சடையப்பர் கோயிலுக்கு மேற்கே மண்ணியாற்றின் கரையில் உள்ளது.)

**குங்கிலியக்கலயனர்:—** கலயனர் இவ்வூரில் தங்கியிருந்த காலத்தில் அவரது மகன் இறந்தான். தன் மகன் இறந்த செய்தி தெரிந்து வீடு சென்று இதுவும் திருவருட்செயல் போலும் என எண்ணி மகனை எடுத்துக் கொண்டு ஈமக்கடன் முடிக்கச் சென்றர். வழியில் உள்ள விநாயகர் அசரீரியாக அருளியபடி நாயனர் அவ்வுடலைக் கொண்டு வந்து நாக கன்னிகை தீர்த்தத்தில் நனைக்க, மகனும் உயிர் பெற்று எழுந்தான். (பெரியபுராணத்தில் இதற்கு ஆதரவு இல்லை) இவ்விநாயகர் இன்றும் 'பிணமீட்ட விநாயகர்' என்ற திரு நாமத்துடன் திரு வீதியின் வாயுமூலையில் எழுந்தருளியுள்ளார்.

**நாகன்னிகை:—** நாகலோகத்தில் வாசுகி தன் மகள் சுமதிக்கு மணஞ் செய்விக்கக் கருதிய காலை 'சுமதி அதைப் பற்றிய முயற்சி தங்கட்கு வேண்டாம்' எனக் கூறி கன்னி மாடத்தமர்ந்திருந்தாள். இறைவன் அவளது கனவில் தோன்றி 'நீ தாலவனமடைந்து பூசிப்பாய்' என அருள் செய்தனன். சுமதியும் அவ்வாறே பிலத்தின் வழியாக வந்து

அம்மையார் சந்நிதானத்திலுள்ள கூபத்தில் தோன்றி இறைவனை வழிபட்டு வந்தாள். தலயாத்திரை செய்து வரும் அரித்துவசன் என்னும் அரசனும் இத்தலத்தையடைந் தான். சுமதி அவனைக் கண்டு விருப்பமுற்று, நாகலோகத் திற்கு அழைத்துச் சென்று மணமுஞ் செய்து கொண்டாள். சில நாள் அங்கிருந்து மீண்டும் பிலத்தின் வழியாக வந்து அம்மையாருக்கு மேல்புறம் ஓர் தடாகமமைத்துநாடோறும் வழிபாடியற்றி வந்தாள். அரித்துவசனும் ஆலயத்திற்குத் தென்பால் ஓர் தடாகமும் இலிங்கமும் அமைத்தான். இவ்வாறு இருவரும் பூசித்துப் பல திருப்பணிகளும் செய்து முத்தியின்பம் பெற்றார்கள்.

**சங்குகன்னன்:**—இவன் வேடுவர் தலைவன். நாரதர் ஆணைப்படி இத்தலத்து வந்து, தீர்த்தங்களில் நீராடி, தாலவன நாதரைப் பூசித்து விரும்பியபடி மகப்பேற்றை அடைந்தான்.

**நாகுகன்னன்:**-இவன் அந்தணர் குலத்தில் உதித்தவன் பிதிர்க்கடனுக்காக வைத்திருந்த பொருள்களை அபகரித்த தால் நரகத்துன்பமடைந்து இறுதியில் வேடுவனாகப் பிறந் தான். வழிப் போவார் பொருள்களைக் கவர்ந்து உயிர் வாழ்ந்து வந்தான். ஒரு நாள் தலயாத்திரை செய்து வரும் முனிவர்களுடைய பொருள்களை அபகரிக்க எண்ணி அவர் களைப் பின்றொடர்ந்து வந்தான். இத்தலத்தெல்லைக்கு வந்ததும் தனது நல்வினைப் பயனாலே, வந்தகாரியத்தை மறந்து மூன்று நாட்கள் தாலவன நாதரைப் பூசித்துத் திருவாதிரைத் திருநாளன்று சிவலோகம் சார்ந்தான்,

**தீர்த்தங்கள்:** — பிரமதீர்த்தம், ஐராவத தீர்த்தம், தாடகை தீர்த்தம், விட்டுணு தீர்த்தம், சூரிய தீர்த்தம், சந்திர தீர்த்தம், ஆதிசேட தீர்த்தம், அரித்துவச தீர்த்தம், நாககன்னிகை தீர்த்தம், தருமசேன தீர்த்தம், கூபதீர்த்தம், மண்ணியாறு முதலாகிய பல தீர்த்தங்கள் ஆலயத்தின் உள்ளும் புறமும் இருக்கின்றன.

**நாககன்னிகை தீர்த்தம்:**—இது சுவாமி சந்நிதியில் மேலே இராஜ கோபுரத்தின் வடபால் கோயிலுக்குள் அமைந்துள்ளது. நாக கன்னிகையால் தோற்றுவிக்கப்பட்டது. இதில் மூழ்கினோர் சகலபிணிகளும் நீங்கப் பெறுவர்.

**மண்ணியாறு:**— அம்மையார் விருப்பத்தின்படி, முருகப்பெருமானால் அழைக்கப்பட்டது. இறைவனது சந்நிதானத்தின் இரண்டு பர்லாங் தொலைவில் வடக்கு நோக்கி ஓடுகின்றது. வடக்கு நோக்கி ஓடுவதால் உத்தரவாகினி என்ற சிறப்போடு போற்றப்படுகிறது.

**தலவிருட்சம்:**— இது இரண்டாவது பிராகாரத்தில் அம்மையார் ஆலயத்தின் எதிரிலுள்ளது. இரண்டு மரங்கள் இருக்கின்றன. இவை தலம் தோன்றிய காலம் முதல் இன்றளவும் செழுமையாகவுள்ளன. இதன் பக்கல்பெருமான் தாடகையினது அன்புக்கு இரங்கி திருமுடி சாய்த்து அருள் பாலித்த (அவசரம்) மூர்த்தம் இருக்கிறது.

**சுற்றுக் கோயில்கள்:**— ஆலயத்திற்குத் தென் மேற்கு மூலையில் ஊருடையப்பர் கோயில் இருக்கிறது. மேலும் ஐயனார், மாரியம்மன் முதலிய தெய்வங்களுக்கும் சிறு சிறு கோயில்கள் இருக்கின்றன. ஊருடையப்பர் ஆலயம் பிரமதேவன் வழிபட்டது. இது பிரமனால் அலங்கரிக்கப்பட்ட அலங்காரங்களை அகற்றி விட்டு சாப விமோசனத்தை விரும்பிய ஐராவதம் வழிபட்டு வந்தது. அதனைக் கண்டு கலக்கமுற்றான் பிரமன். திருமாலைக் குறித்துத் தவம் இயற்றி அவன் அருளால் சிங்கமுகத்துடன் இம்மாடக் கோயிலை அமைத்து வழிபட்டு வேண்டியன பெற்றான். இந்த ஐதிகத்தில் இதன் மேற்கில் விஷ்ணு ஆலயம் ஒன்றும் அமைந்திருக்கிறது. ஊருடையப்பர் திருக்கோயில் தருபுர ஆதீனத்தாரால் நிர்வகிக்கப் படுகிறது

**நித்திய பூசை:**—காரண, காமிக ஆகமப்படி ஆறுகால பூஜைகள் நாடோறும் நடைபெறுகின்றன.

விழாக்கள்:— சித்திரை மாதத்தில் பிரமோற்சவம் நடைபெறுகிறது. கந்த ஷஷ்டி, ஆடிப்பூரம், நவராத்திரி முதலிய விழாக்களும் நடத்தப் பெறுகின்றன.

கோயில் பராமரிப்பு:—இக்கோயிலுக்கு நன்செய், புன் செய்யாக சுமார் ஆயிரம் ஏக்கர் நிலமும் இருக்கிறது. கால நிலைக்கேற்பவும், வருமானத்திற்கேற்பவும் அவ்வப்போது சில திருப்பணிகள் செய்யப்பட்டு வருகின்றன. திருவிழா காலங்களில் இறைவன் எழுந்தருளுபடிக்காக செய்யப்பட்ட வாகனங்கள் தனிச் சிறப்புடையன. இக்கோயிலிலுள்ள வெள்ளி இடபவாகனங்கள் இரண்டும், மரத்தால் செய்த யானை வாகனமும் தனிச் சிறப்பு வாய்ந்தன. இதுவன்றி கண்ணாடி பதித்த மயில் வாகனம் காண்போர் கண்ணைக் கவரும் தன்மையினை உடையது. இக்கோயிலுக்கு உரிமை யாக உள்ள இரண்டு தேர்களும் ஸ்ரீ காசி மடத்தினரால் உபயமாக அளிக்கப்பட்டவையாகும்

கல்வெட்டுக்கள்:- இக்கோயிலின் மண்டபங்களிலும், சுவர்களிலும் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவைகளெல்லாம் சென்னை அரசு தொல்பொருள் துறை யினரால் படியெடுக்கப் பெற்றுள்ளன.

கல்வெட்டு வரலாறு:- இத்திருக்கோயிலைக் கட்டியவன் திருப்பனந்தாள் நக்கன் தரணி என்பவனாவான். அவனே இதனைக் கருங்கல்லால் அமைத்தவனாவான். இதனைக் கோயில் கருப்ப இல்லின் அடிப்புறச் சுவரில் பொறிக்கப் பட்டுள்ள கல்வெட்டால் அறியலாம். சோழ மன்னன் இரண்டாம் இராசராசன் இத்திருக்கோயிலை எடுப்பித்த தாகத் தெரிகிறது.

கல்வெட்டுக்களில் இறைவன் பெயர், திருத்தாடகையீச் சரத்து மஹாதேவர், திருத்தாடகேச்சரத்துப் பெருமான், திருத்தாடகேச்சுரமுடைய நாயனார் என வழங்கப்படுகிறது. முதற் குலோத்துங்கசோழன் காலத்துக் கல்வெட்டிலிருந்து

இறைவியின் பெயர் பெரிய நாச்சியார் என்பது தெரிய வருகிறது. இறைவியின் கோயிலைக் கட்டியவன் வெண்கூருடையார் அன்பர்க்கரசு மருத மாணிக்கமான வில்லவராசன் என்ற செய்தி, இக்கோயில் மஹா மண்டபத்து வாசலில் தென்பாலுள்ள கல்வெட்டால் புலனுகிறது. இக்கோயிலின் உள்நுழை வாயிலின் இரு புறங்களிலும் உள்ள துவாரபாலகர்கள் சிற்ப வேலைப்பாடுடையன. அவற்றின் பின் பக்கம் சுவரில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறு கூறும் சிற்பங்கள் காட்சியளிக்கின்றன. இக்கோயிலில், குங்குலியக் கலயநாயனுருக்கென தனிக் கோயில் உண்டு. அதனை எடுப்பித்தவர் அவர் பால் ஈடுபாடு கொண்டு விளங்கிய திருப்பனந்தாள் குங்கிலியக் கலயர் என்பவராவர். இக்கோயில் இரண்டாவது கோபுரத்தை அடுத்து உள்புறம் தென்பால் மண்டபத்துடன் அமைந்துள்ளது.

**சோழ மன்னர்களின் கோயில் பராமரிப்பு முறை:**—சோழ மன்னர்களும் அவர்களது சேனைத்தலைவர்களும் இக்கோயிலுக்கு அடிக்கடி எழுந்தருளி கோயிலைச் சுற்றிப் பார்த்தும், பண்டாரத்தைச் சோதித்தும் வந்த செய்தி கல்வெட்டுக்களால் புலனுகிறது.

**கோயில் திருட்டு:**—சோழமன்னர்கள் அதிராசேந்திர தேவன், குலோத்துங்க சோழன் ஆகியோர் காலத்தில் கோயில் நன்கு போற்றிப் பாதுகாக்கப்பட்டு வந்த செய்தி புலனுகிறது. அக்காலத்தில் இக்கோயிலில் இருந்த தேவ கன்மிகள் கோயில் பண்டாரத்திலிருந்த திருவாபரணம், பரிகலச் சின்னம் முதலியவைகளைத் திருடிக் கொண்டதாகவும், அதனைக் கண்டு பிடித்த மன்னன் அவர்களுக்கு அபராதம் விதித்ததாகவும் தெரிகிறது. அவர்களால் அபராதம் கட்ட முடியாமையால், அவர்கள் தங்கள் கோயில் உரிமையை விற்று அபராதம் செலுத்தியதாகவும் கல்வெட்டால் அறியலாம். இதனை 'ஸ்வஸ்திஸ்ரீ யாண்டு கச (14)நாள் முந்நூற்றி ... ... ...திருபுவனர் சக்கரவர்த்திகள்

ஶ்ரீ குலோத்துங்க சோழர் திருப்பனந்தாள் உடையாரைக் கும்பிட்டு திருச்சுற்று மாளிகையில் எழுந்தருள, நீலாயி குங்கிலியக் கலயர்க்கு .... சாத்தியருளும் திருவாபரணமும் பரிகலச்சின்னமும் அழித்துக் கொண்டு கடமை செய்தியென திருவாய் மொழிந்தருள அவர்களுக்குக் காசு கொடுக்க உபாயமில்லாமையால்' எனத்தொடங்கும் கல்வெட்டால் அறியலாம்.

இவ்வூரில் பாயும் மண்ணியாற்றிற்கு 'குஞ்சர மல்லன்' எனவும், ஊருடையப்பர் கோயிலுக்கு 'அசனீச்சரம்' எனவும், குங்கிலியக் கலயனுர் மனைவி பெயர் 'நீலாயி' எனவும் பெயர் வழங்கியமை கல்வெட்டுக்களால் புலனுகிறது.

**பாடல் சிறப்பு:**—இத்தலம் திருஞானசம்பந்தரால் வழிபட்டுப் பாடப் பெற்ற பெருமையினையுடையது. ஞானசம்பந்தர் பாடிய பதிகம் 3-ம் திருமுறையிலுள்ளது. இதுவன்றி திருநாவுக்கரசர் பாடிய தலத் தொகுப்புப்பாடல் ஒன்றிலும், பதினேராம் திருமுறையில் ஐயடிகள் காடவர் கோன் நாயனுர், நம்பியாண்டார் நம்பி ஆகியோர் பாடிய இரண்டு பாடல்களிலும், குங்குலியக் கலய நாயனுர் புராணத்திலும், திருப்புகழிலும், க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழிலும், இத்தலம் பற்றியும் இறைவனைப் பற்றியும் பல செய்திகள் குறிப்பிடப் பெற்றுள்ளன. காளமேகப் புலவர் பாடிய பாடல் ஒன்றிலிருந்து அக்காலத்தில் 'திருப்பனந்தாள் பட்டன்' என்ற பெயரினையுடைய ஒருவன் தண்ணீரும் சோறும் தடையின்றி வழங்கிய செய்தி தெரிய வருகிறது. செஞ்சடை வேதிய தேசிகர் அவர்களால் தலபுராணமும் பாடப் பெற்றுள்ளது.

திருஞானசம்பந்தர் பதிகம் 'கண்பொலி நெற்றியினன்' என்று தொடங்கிறது. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் தாடகையீச்சரத்தின் சிறப்புபேசப்படுகிறது. இரண்டாவது

பாடலில் வல்வினையும் பல் பிணியும் பாழ்பட விரும்பினால் இறைவனை ஏத்துமின் என ஞானசம்பந்தர் அருளுகிறார். 'ஞானசம்பந்தன் நல்ல பண்ணியல் பாடல் வல்லார் அவர் தம் வினை பற்றறுமே' எனப் பாடுவார் பெறும் பயனும் பேசப்படுகிறது. இப்பதிகத்தின் முதல் பாடல் வருமாறு:—

**கண்பொலி நெற்றியினான் திகழ் கையிலோர்வெண் மழுவான்**
**பெண்புணர் கூறுடையான் மிகு பீடுடை மால்விடையான்**
**விண்பொலி மாமதி சேர் தரு செஞ்சடை வேதியனூர்**
**தண்பொழில் சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே**

(இத்திருப்பதிகம் 11 பாடல்கட்கும் விரிவான உரை நமது மூவர் தமிழ் மாலையில் மாலை—8 ல் காணலாம்).

**சிற்பஓவிய மேம்பாடு:**-சிற்பங்கள் பல்லவர் கால வேலைப் பாடுடையன இராச கோபுரத்தின் மீது சுதை வேலைப் பாட்டுடன் கூடிய கந்தர்வர், கிம்புருடர் உருவங்கள் அமைந் துள்ளன. பதினாறுகால் மண்டபத்தில் தாடகையினால் சாத்தப்பட்ட மாலையினை ஏற்றுக் கொள்ள பெருமான் தலை குனிந்ததும் அதனை நிமிர்த்த அரசன் யானைகளைக் கட்டி இழுத்ததும், கலயனார் அரிகண்டம் போட்டு நிமிர்ந்ததும், அப்போது சிவலிங்கத்திடையே இறைவரது திருக்கரம் தோன்றியதும், நாயனார் வழிபட்டதும் ஆகிய உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

சிங்க வாயிலினுள் நுழைந்ததும் வடபுற மதிலில் திருக் குறிப்புத் தொண்டர் வரலாற்றினையொட்டிச் சில உருவங் கள் அமைந்திருக்கின்றன.

சுப்ரமண்யர் உற்சவருக்குப்பின் தாடகை பெருமானை வழிபட்டுப் பதினாறு கைகள் பெற்ற ஐதீகம் செதுக்கப் பெற்றிருக்கிறது. கோயில் கட்டிய தரணி நக்கனார் சிற்ப மும் அமைக்கப்பட்டிருக்கிறது.

வௌவால் நெற்றி மண்டபத்தில் சுதையினால் பஞ்ச மூர்த்திகளும் வேலை செய்யப் பட்டிருக்கின்றன. அலங்கார

மண்டபத்தின் முன் மேலே விதானத்தில் தாடகை வரலாறு ஓவியமாக வரையப்பட்டுள்ளது. அறுபத்து மூவர் வரிசையில் சிலேகளுக்குப் பின் அந்த அந்த நாயனுரின் உருவங்கள் எழுதப் பெற்றுள்ளன. 1942-ல் திருப்பனந்தாளில் வாழ்ந்த துளசி ராஜா என்பவர் இவ்வோவியத்தை வரைந்தவர் ஆவர்.

வௌவால் நெற்றி மண்டபத்தில் உள்ள பஞ்ச மூர்த்திகளின் உருவத்திற்கு (சுதை) எதிரே பஞ்ச பூதத்தலங்களின் படமும் அதனையடுத்து இறைவனின் தாண்டவங்களும் தத்ரூபமாக வரையப் பெற்றுள்ளன. அதன் விபரம்.

1. **சிதம்பரம்**—ஆனந்த தாண்டவம்—கனகசபை
2. **மதுரை**—சந்தியா தாண்டவம்—இரசிதசபை
3. **திருக்குற்ருலம்**—திரிபுர தாண்டவம்—சித்ரசபை
4. **திருவாலங்காடு**—ஊர்த்துவ தாண்டவம் (காளி தாண்டவம்)—இரத்தினசபை
5. **திருநெல்வேலி**—காளிகா தாண்டவம் (முனிதாண்டவம்)—தாமிரசபை

**நிர்வாகம்**:—திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன பரிபாலனத்திற்குட்பட்ட 27 தேவஸ்தானங்களுள் இதுவும் ஒன்ருகும். தருமையாதீனக் கோயில் இது என்று கண்டவுடனேயே புலனுகும் வண்ணம் அழகும் தூய்மையும்பெற்று விளங்குகிறது. ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசார்ய சுவாமிகள் அவர்கள் அருளாட்சியில் இவ்வாலயம் சிறந்த நித்திய பூசைகளும் திருவிழாக்களும், நடத்தப் பெற்று விளங்கி வருகிறது.

**திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம்**:— இவ்வூரின் கீழவீதியில் பீடுற அமைந்து விளங்குவது ஸ்ரீகாசிமடம் என்ற அறநிலேயமாகும். இது 16-ம் நூற்ருண்டில் விளங்கிய தவமுனிவர் ஸ்ரீ குமரகுருபர அடிகளின் வழிவந்தவர்களால் அமைக்கப் பெற்றதாகும். தென்னுட்டில் அவதரித்து, சைவமும்

தமிழும் வளர்த்து, தருமையில் குருவருள் பெற்று, ஸ்ரீ காசிக்குச் சென்று, கலைமகளருளால் இந்துஸ்தானி பேசும் ஆற்றலைப் பெற்று, முகமதிய நவாபின் நன்மதிப்பைப் பெற்று. கங்கைக் கரையில் அவன் கொடுத்த இடத்தில் கேதாரநாதர் கோயிலை நிறுவி, ஆங்கே ஒரு திருமடமும் நிறுவி, சைவ சித்தாந்தத்தைப் பரப்பிய ஸ்ரீ குமரகுருபரரின் பெயரால் காசியிலுள்ள திருமடத்திற்கு 'குமாரசாமி மடம்' என்ற பெயர் விளங்கி வருகிறது. அன்னாரது பின் வந்த முனிவர்களுள் ஒருவராகிய தில்லைநாயக சுவாமிகளால் 18-ம் நூற்றாண்டில் கி.பி. 1720ல் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அமைக்கப் பெற்றது. 1880ல் மடத்தின் தலைவராக இருந்த இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் கருங்கல் திருப்பணி செய்யப்பெற்றது. வடக்கே கேதாரம் முதல் தெற்கே குமரி வரை இம்மடத்தின் பொருளுதவி கொண்டு அன்னதானம் நடைபெற்று வருகிறது. 19-ம் பட்டத்தில் விளங்கிய ஸ்ரீ சுவாமிநாத சுவாமிகள் ஆட்சியில், மடத்தின் முகப்பில் இரயில் தண்டவாளங்கள் அமைத்து வாகன்களில் உணவுப் பொருள்களை நிரப்பி 1 கிலோமீட்டர் தூரம் அமைந்துள்ள பந்தியில் அமர்ந்திருக்கும் சாதுக்களுக்கு அன்னம்பாலிப்பு செய்யப் பெற்றதைப் பலரும் அறிவர். 20-ம் பட்டத்தில் விளங்கிய ஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் ஆட்சியில் சுமார் 2 கோடி ரூபாய் பெறுமானமுள்ள அறக்கட்டளைகள் நாடெங்கிலும் நிறுவப் பெற்று, கல்வி, உணவு மருத்துவ உதவிகள் செய்ய வழி வகுக்கப்பட்டது.

இதுபொழுது இம்மடத்தின் தலைமைப் பொறுப்பேற்று அருளாட்சி செலுத்தி வருபவர்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆவார்கள். இவர்கள் அருள் ஆட்சியில் கல்வி, மருத்துவ உதவி, அன்னம்பாலிப்பு ஆகியவை செவ்வனே நடை பெற்று வருகின்றன. கல்வி வளர்ச்சியில் ஈடுபாடுகொண்ட

இவர்களது பரிபாலனத்தில் கலைக்கல்லூரி ஒன்றும், செந்தமிழ்க் கல்லூரி ஒன்றும், மேல்நிலைப் பள்ளிகள் இரண்டும், நடுநிலைப்பள்ளி ஒன்றும், தொடக்கப்பள்ளி ஒன்றும், சிறார் பள்ளி (English Medium School) ஒன்றும் உள்ளன. 'ஸ்ரீ குமரகுருபரர்' என்ற பெயரில் திங்கள்தோறும் வெளிவரும் இதழ் சைவ சமய விளக்கங்களையுடையதாகத் திகழ்கிறது. இதற்கென ஒரு அச்சகத்தையும் மடத்தில் நிறுவியிருக்கிறார்கள். "ஆலயபூசைப் படிக்காசுநிதி" என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தி வருவாய் இல்லாத திருக்கோயில்களில் திருவிளக்கேற்றுவதற்கும், அர்ச்சகர் ஊதியத்திற்கும் போதிய பொருளுதவியைச் செய்து வருகிறார்கள்.

இம்மடத்தின் உள்ளே மேற்பால் அமைந்து இருப்பது ஸ்ரீ காசி விசுவநாதர் ஆலயம் ஆகும். இது 1903ல் அமைக்கப்பெற்றது. மடத்தின் வடபால் பொய்கை (குளம்) அமைந்துள்ளது. அதன் நடுவில் ஸ்ரீ காசி விநாயகர் கோயில் அமைந்துள்ளது. வடநாட்டிலிருந்து கொண்டு வரப்பெற்ற வெண்பளிங்கு விநாயகரை அங்கு பிரதிஷ்டை செய்து, தினந்தோறும் பூசைகள் நடக்க ஏற்பாடுகள் செய்யப் பெற்றுள்ளன. தினந்தோறும் மடத்தில் பூசை நடைபெறும் போதும், மடத்து அலுவலகம் துவங்கும் போதும் முரசு (நஹரா) அடிப்பது வழக்கத்திலிருந்து வருகிறது. புரட்டாசி மாதம் நவராத்திரி விழாவின் போது, ஸ்ரீமடத்து அதிபர் அவர்கள் விசயதசமி பூசையை சிறப்புற நடத்தி, இரவில் சிவிகை ஏறி பட்டினப் பிரவேசமாக வந்து அருளும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது. (இப்போது சிவிகை ஏறுதல் மட்டும் நிறுத்தப்பட்டுள்ளது.) நஹரா கொட்டுதல், சிவிகை ஏறி அம்பு போடும் விழாவினைக் காணல் ஆகியவை வடநாட்டு (காசி) அடிப்படையில் அமைந்தவை ஆகும்.

# தனிப் பாடல்கள்

## திருப்பனந்தாள் பட்டன்

விண்ணீரும் வற்றிப் புவிநீரும் வற்றி விரும்பியழக்
கண்ணீரும் வற்றிப் புலவோர் தவிக்கின்ற காலத்திலே
உண்ணீர் உண்ணீரென்று உபசாரம் பேசி யுண்மையுடன்
தண்ணீரும் சோறும் தருவான் திருப்பனந்தாட்பட்டனே.

## தாடகை

தருக்கிய வெம் மனமுடைய சரோருகனும் காணவொணுப்
பெருக்கிதழி மாமுடியைப் பேரன்பின் பெற்றியினல்
நெருக்குமலர் மாலைகொடு நேயமொடு வளைவித்த
உருக்கமுடைத் தாடகையின் உபயபதம் சிரத்தணிவாம்

## குங்கிலியக்கலய நாயனுர்

கோணுக மணிந்த பிரான் கோடீரம் வளைந்ததென
நாணுற்றி யிழுத்திளைத்த நரேந்திரனும் களிகூரக்
காணுத அன்பென்னும் கயிற்றினல் நிமிர்த்திட்டுச்
சேணுருந் தூபமிடுந் திருமறையோன் தாள்பணிவாம்

பதிப்பாசிரியர் குறிப்பு: தஞ்சை மாவட்டம் கணபதி அக்ரஹாரம் என்ற ஊரைச் சேர்ந்த கௌண்டின்ய கோத்திரத்து ஸ்மார்த்தப் பிராமணர்களுக்குத் திருப்பனந்தாள் அருணஜடேச்வரர் என்ற செஞ்சடையப்பர் குல தெய்வமாக இருக்கிருர். தமது பிரார்த்தனைகளையும் காணிக்கைகளையும் இங்கே செலுத்துகின்றனர். எந்த ஆண்டிலாவது கார்த்திகை மாதத்தில் ஐந்து திங்கட்கிழமைகள் (சோம வாரங்கள்) வந்தால் ஐந்தாவது சோம வார அபிஷேகம், உற்சவம் ஆகியவற்றை இக்கணபதி அக்ரஹாரத்துக் கௌண்டின்ய கோத்திரத்து ஸ்மார்த்தப்பிராமணர்கள் தமது உபயமாகச்

செய்கின்றனர். திருஞானசம்பந்தர் கௌண்டின்ய கோத்திரத்தில் அவதரித்தவர் என்பது ஈண்டு நினைவு கொள்ளற்குரியது. சென்ற ரௌத்திரி ஆண்டு கார்த்திகை ஐந்தாவது சோமவார விழாவின் போது அடியேன் திருப்பனந்தாளில் இருந்தமையால் விழாவில் கலந்து கொள்ளும் பேறு கிடைத்தது. மிகச் சிறந்த முறையில் அபிஷேகம், சுவாமி புறப்பாடு, பிராமண சமாராதனை அன்னதானம் முதலானவற்றை மிகச் சிறப்புடன் செய்தனர். கணபதி அக்ரஹாரம் கௌண்டின்ய கோத்திர ஸ்மார்த்தப் பிராமணர்கள் பலர் வேறு இடங்களில் தொழில் நிமித்தம் வசிப்பவர்களுங்கூட வந்து இவ்விழாவில் கலந்து கொண்டது குறிப்பிடத் தகுந்தது. சிவபக்தியிற் சிறந்த இவர்களைச் சிரம் தாழ்த்தி வணங்குகின்றேன்.

ஆங்கீரஸ சர்மா

---

## திருப்பனந்தாள் க்ஷேத்திரத் திருவெண்பா

(ஐயடிகள் காடவர்கோன் நாயனர் பாடியது)

**கரம்ஊன்றிக் கண்ணிடுங்கிக் கால்குலைய மற்றோர்**
**மரம்ஊன்றி வாய்குதட்டா முன்னம் - புரம்மூன்றும்**
**தீச்சரத்தாற் செற்ருன் திருப்பனந்தாள் தாடகைய**
**ஈச்சரத்தான் பாதமே ஏத்து**

கையை ஊன்றிக், கண்கள் குழிந்து, கால்கள் தடுமாறி ஆதரவுக்கு மற்றும் ஒரு ஊன்றுகோலினைப் பற்றி ஊன்றி, வாய்குதட்டாத முன்னமே, முப்புரங்களையும் தீயம்பினுல் எரித்த இறைவரும் திருப்பனந்தாளின்கண் தாடகையீச்சரம் என்ற கோயிலில் எழுந்தருளியவருமான சிவபெருமானது திருவடிகளையே போற்றி உய்தி பெறுக. இத்திருப்பாடலில் கரம் ஊன்றுதல் முதல் வாய்குதட்டுதல் வரையுள்ள ஐந்தும் மூப்பின் குறிகள். மூப்புவருமுன்னேயே திருப்பனந்தாள் சென்று இறைவனை வழிபடுக எனக் கூறியதாகக் கொள்க.

உ
அன்பே சிவம்

# மயிலை முருகன் காவடிச் சிந்து

இயற்றியவர் :
பைந்தமிழ்ப் பாவலவர், புலவர்ஏறு, மணிதீபம்,
சிவகதாப்ரசங்கச் சக்கரவர்த்தி,

**கே. ஆர். நாகராஜன்**

## காப்பு

திருவார் மயிலைநகர் வாழும்—உயர்
தெய்வக் கபாலி அருள் சூழும்—தமிழ்
ஓசை முழங்க, நடம் ஆசையுடனே செய்யும்
யானை—பருகும், தமிழ்த்—தேனை!

## நூல்

தெள்ளு தமிழ் விரும்பும் சீலன்—தமிழ்
நாகன் எனும் பெயர்கொள் நூலன்—உயர்
மயிலை நகரில் வளர் முருகன் திருப்புகழைச்
சொல்வேன்!, அனைவரையும்—வெல்வேன்! 1

ஓசைக் கடல் முழங்கும் முன்றில்—தினம்
உண்மை அடியவர்கள் மன்றில்—உனைப்
பாடிப் பரவிடுவார்! ஆடி மகிழ்ந்திடுவார்!
முருகா! திருமால்—மருகா! 2

அழகு மயிலதன் மேல் ஏறி—இரு
அழகியர் அன்பதனைக் கோரிக்—கையில்
வேலை எடுத்துவிளை யாடிவரும் முருகக்
கோனே! தமிழ்த்—தேனே! 3

அற்புத மாமயிலை வாழும்—ஒரு
கற்பக வல்லி மடி வீழும்—நல்ல
சின்னஞ் சிறுமுருகன் என்னெஞ் சுருக்கிடுவான்
நாளும்! எந்த—நாளும்! 4

தந்தை கபாலி உளம் மகிழ—அன்னை
கற்பக வல்லி அன்பு திகழ—வளர்
செல்வத் திருமுருகன் சிந்தை நிறைந்திருப்பான்
என்றும்!—தினம்—நன்றும்! 5

தொந்தி கரைந்திடவே அண்ணன்—தினம்
தொந்தோம் என்ருடிடுவான் திண்ணம்!—அவன்
தம்பி திருமுருகன் நம்பியவர்க் கருளும்
அன்பன்!—தமிழ்ப்—பண்பன்! 6

மயிலை ஊர்தினனக் கொண்டான்!—திரு
மயிலைத் தன்ஊர் எனவே கண்டான்!—இரு
மயிலை மணந்தவனும் அயிலை எடுத்து, தினம்
வருவான்!—இன்பம்—தருவான்! 7

செக்கச் சிவந்திருப்பான் மேனி!—அவன்
செய்ய அடிமலரின் தேனைத்—தினம்
வந்தே குடித்து மகிழ் செந்தேன் கவிபொழியும்
தேனீ!—நான் தமிழ்த்—தேனீ! 8

வள்ளல் பெருங்கருணை வேலன்!—அவன்
வந்தவர்க் கெல்லாம் அருளும் சீலன்!—என்றன்
உள்ளமெனும் தாமரையில் அள்ளும் அழகுடனே
இருப்பான்!—தினம்—சிரிப்பான்! 9

புன்னை மரத்தின் அடிமேடை—அது
பெம்மான் அருள் பெருகும் ஓடை—அங்கு
அன்னை தவம் புரிவாள்! அழகன் அருள் புரிவான்!
தினமும்!—மகிழும் என்—மனமும்! 10

## மயிலை நகரின் சிறப்பு

நீலக் கடல்முழங்கும் நாளும்!—அதன்
நீண்ட கரையினில் செவ் வேளும்—தினம்
வணங்கிடும் அன்பர்தமக் கிணங்கியே இன்னருளைத்
தருவான்!—மயில்மேல்—வருவான்! 11

வள்ளுவனூர் வாழ்ந்திருந்த மயிலை—முருக
வள்ளல் உவந் தேறிவரும் மயிலைத்—தினம்
கண்டே நடுக்கமது கொண்டே அரவமெலாம்
ஏங்கும்!—சிவன் மேல்—தூங்கும்! 12

எலும்பை அணிந்தவர்தம் முன்னால்—ஐயன்
எலும்பைப் பெண்ணாகச் செய்தார் தன்னால்!-திரு
ஞானசம்பந்தப் பெயர் தானே முறையாய்க் கொண்ட
அன்பர்!-தமிழ்ப்—பண்பர்! 13

செல்வம் சிறந்தோங்கும் மயிலை—கல்விச்
செல்வம் உயர்ந்தோங்கும் மயிலை—உயர்
விண்ணை முட்டும் மாளிகைகள் கண்ணைக்கவர் காட்சி தரும்
அன்றும்!—முறையாய்—இன்றும்! 14

தந்தை கபாலி அருள்புரிவான்!—உயர்
தாயாரும் முந்தி அருள் புரிவாள்!—உயர்
தொந்தி கணபதியும், கந்தக் குணபதியும்
வருவார்!—அருள்—தருவார்! 15

பண்டை நாள் பல்லவர்கள் காலம்!—மயிலை
பாரில் சிறந்திருந்த கோலம்!—பல
மேலைப் புலத்திருந்தும், கீழைப் புலத்திருந்தும்—கலம்கள்
வருமே!—செல்வம்—தருமே! 16

வாயிலார் எனும்பெயர்கொள் அன்பர்!—அவர்
வள்ளல் கபாலியிடம் அன்பர்!—அவர்
தோன்றியநற் காரணத்தால் ஆன்றபுகழ் பெற்றதுநல்
மயிலை!—சீர்—மயிலை! 17

அழகு மயில்வடிவம் கொண்டே—உமை
அம்மை, இறைவர்உருக் கண்டே—முன்னாள்
புன்னை மரத்தடியில் அன்னை வணங்கியசீர்
மயிலை!—உயர்—மயிலை! 18

நாயன்மார் அறுபத்துமூவர்!—அவர்க்கே
அவனியில் நிகர் உளார் யாவர்?—அவர்தாம்
ஆண்டுதோறும் தெருவில் யாண்டும் உலாவருவார்
அன்றும்!—இனி—என்றும்! 19

அன்னை அறம் புரியும் மயிலை!—எங்கள்
அப்பன் அருள் புரியும் மயிலை!—உயர்
முருகப் பெருமான் சக்தி வேலை தாய் தன்னிடமே
பெற்றான்!—பகையைச்—செற்றான்! 20

## முருகவேள் மாண்பு

ஆறு தலையுடைய அழகன்!—அன்பர்க்
காறுதலை வழங்கும் குழகன்!—அவன்
பன்னிரு கையதனால் பகையை ஒழித்திடுவான்
வேலன்!—சிவ—பாலன்! 21

கற்பக வல்லி மகிழ் வேலன்!—கல்வி
கற்றவர் உளத்துறையும் பாலன்!—இரு
பாவையர்களை மணந்து, பரிவுடன் அருள்செய்யும்
வீரன்!—மயிலை—ஊரன்! 22

சிவனார் மனம் மகிழும் கந்தன்!—செல்வ
மயிலை நகரில் வளர் மைந்தன்!—என்றும்
நல்லவரைக் காத்திடுவான்! அல்லவரைத் தேய்த்
திடுவான்!
அமரன்!—தெய்வக்—குமரன்! 23

விண்ணைத் தொட உயரும் கோயில்!—அதில்
கண்ணைக் கவரும் உயர் வாயில்! உள்ளே
அழகு குடியிருக்கும் அன்பன் முகத்தில்—நகை
இலகும்!—பகை—விலகும்! 24

பச்சை மயிலின் மிசை வருவான்! இரு
பாவையர் சூழ அருள் தருவான்!—சக்தி
வேலே வலக்கரத்தில் ஏந்திப் பகைவன் உயிர்
கொல்வான்!—என்றும்—வெல்வான்! 25

புன்னை மரங்கள் நிறை சோலே!—அதன்
முன்னை முழங்கும் கடல் வேலே!—அந்தப்
புன்னை மரநிழலில் அன்னை அறுமுகனைக்
கண்டாள்!—உவகை—கொண்டாள்! 26

அற்புதக் கபாலி உருக்கண்டு—அன்னை
கற்பகம் மனத்தில் மகிழ் கொண்டு—முன்னர்
பொற்புறப் பணிந்துதினம் போற்றியதால் வந்தபெயர்
மயிலே!—நகர்—மயிலே! 27

வேலே வலக் கரத்தில் ஏந்தித்—தினம்
விரும்பித் தமிழமுதம் மாந்தி—மகிழ்
வள்ளி, தெய்வ யானையுடன் உளத்தில் மகிழ்வுடனே
வருவான்!—வரங்கள்—தருவான்! 28

புள்ளிமயில் ஏறிவரும் பாலன்!—அவன்
வள்ளிக் குறமகளின் லோலன்!—முன்பு
சூரன் உயிர் குடித்துச் சுற்றும் பகைமுடித்த
குமரன்!—அவன்—அமரன்! 29

தமிழ்க்கவித் தேன்உண்ணும் தேனீ!—தமிழ்
நாகன் முன் காட்சிதரவாநீ!—மயிலே
நகரில் வதியும் குமரேசப் பெருமான் புகழ்
பாடு!—மனம்—நாடு! 30

குமரன் பதமலரைப் பாடி—இரு
குமரியர் அடிமலர் நாடித்—தினம்
திமிரக் கடல் மயிலேக் குமரன் அருளால் ஞாலம்
வாழ்க!—இன்பம்—சூழ்க. 31

கற்பகவல்லி புகழ் வாழ்க!—உயர்
கபாலி பதமலர்கள் வாழ்க!—உயர்
அற்புதக் குமர வடிவேலன் இரு அன்னையுடன்
வாழ்க!—தினம்—வாழ்க! 32

உ
சிவமயம்

# மறவாது கல்லெறிந்த மாதவர்

பேராசிரியர் அ. அய்யாசாமி, எம். ஏ.

சேக்கிழாரின் பெரியபுராணம் அறுபத்து மூன்று தனி அடியார்களின் பெருமையை நன்கு விரித்துரைக்கிறது. தொண்டர்கள் பல இனத்தினர்; பல தொழிலினர்; பல நிலையினர். அவர்தம் தொண்டு முறையிலும் வேறுபாடு உண்டு. சிலர் பணிவும் அடக்கமுமே உருவானவர்கள்; சிலரோ எரியும் நெருப்பாய்க் கனன்றவர்கள். சிலர் செல்வம் மிகப் பெற்றுக் கணக்கற்ற அறச்செயல்களைப் புரிந்து சிறந்தவர்கள். சிலர் வறியவர்கள், ஆனாலும் வறுமையில் செம்மை காத்தவர்கள். சிலர் தமக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைத் தாங்கிக் கொண்ட சத்தியாக்கிரகிகள். சிலர் கொடுமைகளைக் கண்டு பொங்கும் துணிச்சல்காரர்கள் ஒவ்வொரு நாயனாருக்கும் ஒரு தனித்தன்மை உண்டு. அத்தகையவர்களில் ஒருவர் தான் சாக்கிய நாயனார்.

அவர் திருச்சங்கமங்கை என்னும் ஊரில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். அவரது இயற்பெயர் என்னவென்று தெரியவில்லை. சாக்கிய மதம் என்று சொல்லப்படும் பவுத்த நெறியை மேற்கொண்டதால் சாக்கிய நாயனார் என்னும் பெயராலேயே குறிக்கப்படுகிறார்.

இவர் இளவயதிலேயே அறிவு நிரம்பப் பெற்றவர். பல்லோருக்கும் அன்பு செய்து பிறப்பை ஒழித்துக் கொள்ள விரும்பினார். அதற்கான வழியைக் கண்டறிய ஏட்டுக்

கல்வி மூலம் முயன்ற போது, முதன் முதலில் அவர் சாக்கிய மத நூல்களைக் கற்க நேர்ந்தது. அவை அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தன. நாயனார் சாக்கிய மதத்தில் சேர்ந்து அதற்கான கோலத்தையும் நெறி முறை ஒழுக்கங்களையும் மேற்கொண்டார்.

வெறும் கல்வி அறிவால் ஞானத்தை எய்த முடியாது. இறை வழிபாடு இல்லாத கல்வி ஒருவரைக் குழப்பச் சுழலில் ஆழ்த்தி அலைக்கழித்து விடும். அதனால் தான் மாணிக்க வாசகர், "கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்," என்று கூறுகிறார். அவரே "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி," என்று கூறுவது போல, இறைவன் அருள் இருந்தால்தான், இறைவனை உணர்ந்து தொழும் வேட்கையும் தொழுவதனால் உண்டாகும் மெய்ஞ்ஞானமும் கைகூடும்.

பவுத்த நெறியைக் கைக்கொண்டு ஒழுகிய நாயனாருக்கு ஈசன் அருள் கைகூடிற்று. சிவநெறியே மெய்ப்பொருள் என்ற உணர்வு கைவரப் பெற்றது. செய்கின்ற இருவினை, அதைச் செய்யும் உயிர், செய்யும் வினையால் வரும் பயன், அந்தப் பயனை வகுத்துக் கொடுக்கும் இறைவன் என்று நிலையான பொருள் நான்காக இருப்பதைத் தெளிவாக அறிந்தார். இதனை உணர்த்துவது சைவ சமயம் தான் என்ற உண்மையையும் அறிந்து கொண்டார். ஒன்று என்று தனித்து நிற்கும் உண்மைப் பொருள் சிவபெருமானே என்னும் உணர்வு இவரது நெஞ்சகத்தில் அரும்பி மலர்ந்து கனிந்து நின்றது.

உள்ளத்தளவில் தன்னை ஈசனுக்கு அடியவராக்கிக் கொண்ட நாயனார் புறக்கோலத்தில் தன்னை மாற்றிக் கொள்ள முற்படவில்லை. சாக்கியக் கோலத்திலேயே தொடர்ந்து வாழ்ந்து வந்தார். ஆனால் "எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னிய சீர்ச் சங்கரன் தாள் மறவாமை பொருள்", என்ற கொள்கையுடையவராய்

வெளியே பௌத்த உடையும் உள்ளத்தில் சிவபெருமான் மீது அன்புமாகத் திகழ்ந்தார்.

தினந்தோறும் சிவலிங்கத்தைத் தரிசித்துவிட்டே உணவு கொள்ள வேண்டும் என்ற ஆசை இவருக்கு எழுந்தது. திறந்த வெளியில் ஒரு சிவலிங்கத்தைக் கண்டார். அதைப் பார்த்ததும் அவருடைய உள்ளத்தில் அன்பும் பரிவும் பக்தியும் உவகையும் ஊற்றெடுத்தன. ஆனால் அந்தச் சிவலிங்கத்திற்கு என்ன செய்யவேண்டும் என்ற செயல்முறை அவருக்குத் தெரியவில்லை. இன்னது செய்வதென்று தோன்றாத நிலையில் அருகிலே கிடந்ததொரு கல்லைக் கண்டார். அவருடைய உள்ளம் கிளர்ச்சியுற்றது. அந்தக் கல்லைக் கையில் எடுத்துச் சிவலிங்கத்தின் மீது வீசினார். மறுநாளும் அந்த இடத்திற்கு வந்தார். முந்திய நாள் நடந்தவை அவருடைய நினைவுக்கு வந்தன. அப்போது தன் உள்ளத்தில் எழுந்த உணர்வுகளையும் நினைத்துப் பார்த்தார். எல்லாமே இறைவன் அருளின் வாயிலாக நடந்த நிகழ்ச்சிகளாக அவருக்குப் பட்டன. அதையே தொடர்ந்து செய்ய முடிவு செய்து நாள்தோறும் உணவு உட்கொள்ளுமுன் அந்தச் சிவலிங்கத்தின் மேல் கல் ஒன்றை எடுத்து எறியும் வழக்கத்தை மேற்கொண்டார்.

கல்லெறிவது வழிபாடு ஆகுமா என்று கேட்கலாம். அப்படிப் பார்த்தால் அங்கு நின்றிருந்த சிவலிங்கமும் கல்தானே? கல்லின் மீது கல்லெறிந்தால் அது குற்றமாகுமா? ஆனால் தெளிந்த சிந்தனையுள்ள எவரும் சிவலிங்கத்தைக் கல் என்று சொல்லமாட்டார்கள். அது ஒரு சின்னம். திருமாலும் நான்முகனும் அடி முடி தேடிக் கண்டுபிடிக்க இயலாமல் ஓங்கி வளர்ந்து நின்ற நெருப்பு மலையின் சின்னம் சிவலிங்கம், இறைவன் உருவமும் இல்லாமல் அருவமும் இல்லாமல் அருவுருவமாய் இருக்கிறான் என்பதைக் காட்டும் திருவடிவம் அது.

சிவலிங்கம் என்பது எப்படி ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் ஜோதியாகத் திகழும் சிவபெருமானின் சின்னமோ அதேபோலச் சாக்கிய நாயனுர் தனது கையால் எடுத்து எறிந்த கல்லும் அவருடைய ஆழமான பக்தியின் சின்னம். காதலாகிக்கசிந்து கண்ணீர்மல்கி மெய்விதிர்த்து நெஞ்சம் பதைத்து நாயனுர் எறிந்த கல்லே சாதாரண மலருக்குச் சமானம் என்று சொன்னுல் போதுமா? அது அவருடைய இதயக் கமலமல்லவா? தன்னையே இறைவனுடைய திருவடிகளில் சமர்ப்பிப்பது போலக் கருதியல்லவா நாயனுர் அந்தக் கல்லே எடுத்து எறிந்தார்? விஜயனின் வில்லடியையும் வேடனின் செருப்படியையும் வேந்தனின் பிரம்படியையும் உவந்து ஏற்றுக்கொண்ட பெருமான் சாக்கிய நாயனுரின் கல்லடியில் மகிழ்ந்து போனதில் வியப்பில்லேயே!

ஒரு நாள், என்ன காரணமோ தெரியவில்லே, வழக்கமாகத் கல்லெறியும் பணியை மறந்து விட்டு உணவுண்ண அமர்ந்து விட்டார் நாயனுர். இந்த மறதியும் இறைவன் அருளால் நிகழ்ந்தது தான் என்கிருர் சேக்கிழார் பெருமான். ஏனெனில் இறைவனின் திருவடிகளில் நாயனுரைக் கொண்டு சேர்க்கப் போகிறதல்லவா அது?

உணவு உட்கொள்ளுமுன் இறைவன் நினேவு வந்து விடுகிறது நாயனுருக்கு. ஒரு நாள் தானே என்று விட்டு விட்டாரா? இல்லே. என் பெருமானே மறந்து விட்டேனே என்று உள்ளம் நைகிருர். கல் எறியும் பணியைத் தவற விட்டு விட்டேனே என்று தன்னேயே கடிந்து கொள்கிருர். கல்லெறிவதா அது? இறைவனே சத்தியம் என்று முழுமையாக உணர்ந்து செய்யும் ஆத்ம நிவேதனமல்லவா? அதில் பிறழ்ந்து விட்ட நாயனுரின் நெஞ்சம் பதைக்கிறது. விருட்டென எழுகிருர். தன் நெஞ்சத்தில் குடிகொண்டிருக்கும் சிவலிங்கம் இருக்கும் இடம் நோக்கி ஓடோடிச் செல்கிருர். உள்ளத்தில் பக்திப் புனல் பொங்கி வழிகிறது. வழக்கம்

போலவே ஒரு கல்லை எடுத்துச் சிவலிங்கத்தை நோக்கி எறிகிறார்.

கல்லெறிவதற்காக உணவைக்கூட விட்டு விட்டு ஓடி வந்திருக்கும் அடியவரை இறைவன் கண்டார். அவரது பக்தியும் உறுதியும் இறைவனை உருக்குகின்றன. நாயனாரின் அன்புக்கு அருட்பட்டு ஆகாயத்தில் உமையம்மையோடு காட்சி கொடுத்து அவருக்குச் சிவலோகம் தந்து அருள்கிறார்.

"வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே மறவாமல் கல்லெறிந்த சாக்கியர்," என்று திருத் தொண்டத் தொகையில் இந்த நாயனாரைச் சிறப்பிக்கிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். கல்லெறியும் பணிதான். ஆனால் அதை விடாமல் கடைப் பிடித்தார். ஒரு நாள் மறதி ஏற் பட்டும்கூட அந்தப் பணியை விடவில்லை- மறவாது கல் எறிந்த அவருடைய செய்கை, அவர் ஆற்றிய அந்த நூதன மான வழிபாடு எத்தகைய ஆழமான பக்தியிலிருந்து பிறந் தது என்னும் உண்மையை நமக்குப் புலப்படுத்தி அவருடைய பெருமையைப் பறைசாற்றி நிற்கிறது.

சாக்கிய நாயனாரின் திருவடிகளைச் சிந்திப்போமாக.

சிவம்

---

## சாக்கிய நாயனார்

சங்கமங்கை வரும்வேளாண் தலைவர் காஞ்சிச்
சாக்கியரோடு இயைந்தவர்தந் தவறும் சைவத்
துங்கமலி பொருளுமுணர்ந் தந்த வேடம் துறவாதே
சிவலிங்கந் தொழுவோர் கண்டோர்
அங்கன்மலர் திருமேனி அழுந்தச் சாத்தி
அமருநாள் மறந்தொருநா ளருந்தாதோடிச்
செங்கலெறிந் திடுமளவில் மகிழ்ந்த நாதன்
திருவருளால் அமருலகம் [சேர்ந்துளாரே.

—திருத்தொண்டர் புராண சாரம்: 35



# THE DANCE DIVINE

By P. R. KRISHNASWAMI IYER

"In Thillai's Court a mystic Dance the Lord performs,
Whomso that sees it torment not Samsaric storms;
Thillai's Court is Human Heart and Siva is the Soul,
Whom the Yogis do in Bliss behold with senses in control."

Lord Siva as Nritta Murti is called Nataraja—the Sovereign Dancer. On the "Arudra" (Ardra) day of the Margazhi month (Dhanurmas) every year a festival is celebrated in every Saivite temple in propitiation of "Sri Nataraja" and the votaries of Siva will throng in thousands for the sacred Arudra—Darsana on the occasion.

The grandest celebration, attracting the largest number of devotees for the most soul-stirring sight, is at Chidambaram. Nearer Madras, the festival is performed with equal grandeur at Thiruvalangadu—the Vataranya-where, according to some, the Lord performed the exquisite Dance originally, and vanquished Kali in Her rival

Dance by His "Urdhva Tandava', pose (in which one leg rests on the ground and the other is lifted up straight—parallel to the resting leg)

The history science, art and philosophy of the Divine Dance have appealed to the greatest minds of the world and have been elaborately dealt with by both Indian and European scholars and "Nataraja" is viewed as the symbol of the synthesized science, art and religion.

The occasion of Siva's Dance according to "Koil Puranam" was as follows: –

Once Siva went to confute a set of heretical sages of the Mimamsa school of thought who were living in the forest of Tharaka. The sages made mad attempts to destroy Him by all kinds of incantations and sacrificial fires and out of the latter emerged one by one, a tiger, a serpent and a malignant dwarf. Siva danced all along and after killing the tiger wore its skin. He made a garland of the snake and broke the dwarf's back by the tip of His foot.

The five well-known Sabhas or Theatres of Siva's Dance are Thiruvalangadu – (Ratna-Sabha), Chidambaram (Kanaka-Sabha), Madura (Rajata-Sabha), Tinnevelly (Tamra-Sabha) and Kutralam (Chitra-Sabha). Darsana (sight) of the Dance on the occasion of the annual celebration at any of the above centres on the "Arudra" day of the Margazhi month is believed to purge the beholders of all their sins, alleviate their sufferings and liberate them from the sorrowful cycle of birth and Death,

The Nataraja Dance first revealed to the Rishis is known as "Nadanta" Dance and besides this there are two other well-known dances of Siva—the Daily Evening Dance and the Dance on the Smasana or the cremation grounds. The daily dance at night-fall in Kailasa is decribed in the *Pradosha Stotra* as follows:—

"Siva dances to the accompaniment of Veena (lute), flute, Tala (cymbals) and Mridanga (clay tomtom) respectively played on by Saraswathi, Indra, Brahma and Vishnu, Goddess Lakshmi (the Spouse of Lord Vishnu) singing; while the Gandharvas, Yakshas, Vidyadharas and hosts of all other beings dwelling in the three worlds and His Consort, Gauri—the Mother of the worlds—seated on a throne of gold and preciouse stones—witness the dance. The worship of Siva at Pradosha time every day means the worship of all deities collecting around Siva at the time and the worshipper becomes happy and prosperous."

The Smasana Dance is considered by some as primitive and pre-Aryan and is attributed to Siva's Tamasic aspect as Bhairava or Virabhadra and constitutes the mid-night revels of Siva and Kali on the cremation grounds. It is known as Tandava and it's esoteric meaning according to Sakti and Sakta literature is destruction of man's illusion and all other evils to which humanity is heir.

## THE RENAISSANCE OF DANCE

Dance is an ancient art of universal appreciation and patronage. India is famous for its "Bharata Natya". There are 108 kinds of dance according to the Natya-Sastra. Dance is considered to be the most perfect physical exercise. Set to musical hymns in praise of God,

it contributes at once to the physical suppleness and spiritual elevation of the dancer. The lofty ideals and noble effects of dance had been gradually receding from the human mind. In India the art was, till recently, practically relegated to professionals and dancing-girls dedicated to temples. The awakening of the 'Dance' consciousness followed by the abolition of the Devadasi class has restored the art to its legitimate dignity and noble standard, with the result that it is now looked upon as an enviable attainment of girls and a wholesome recreation for body, mind and spirit.

## THE PHILOSOPHY OF SIVA'S DANCE

The mystic dance of Siva is the manifestation of primal rhythmic energy. It denotes the kinetic aspect of the Cosmic Energy and the effulgent vitality of all creation. The divine "Chit" sustains and vitalizes everything. In the Universal Spirit the entire universe is born, borne and buried. The supreme consciousness permeates the entire universe and all creation and is the one underlying Reality in all beings, known as "Chit or Atma". The "Chidakasa" of the Supreme Self is the Hridayakasa of the Atma and the ecstasy of the Dance of Siva at Chidambaram (the centre of the universe) is experienced by every soul which is no other than the Divine Chit dwelling in the hearts of beings but perceived by only those who have curbed their passions and desires and controlled their senses and mind and turned them inwards upon the Almighty within. 'Nataraja' is the most perfect image of the energy above-described and "no artist of today, however great, could more exactly or more wisely create an image of that energy, which science must postulate behind all phenomena".

## THE GLORY OF HINDU ART AND CRAFT

In the case of the Nataraja images in bronze the very best South Indian genius and talent of artistic smithery have been exercised and the various modes of dance have been skilfully reproduced in them. The sculptural exhibition of the various poses of Dance in temple Gopurams are also marvellous. The image of Siva in every one of these Forms has the demon 'Apasmara-Purusha' under the foot, the damaru or the drum in one of the right hands and fire in one of the left hands. The image is the form of the 'Omkara' Pranava-Swarupa of God and suggestive of (i) the union of Prakrti and Purusha, (ii) the five Divine Functions of creation, preservation, dissolution, embodiment and gracious release (Srshti, Sthiti, Samhara, Tirobhava and Anugraha) and (iii) the meaning of the Holy Panchakshara Mantra — "Namah Sivaya". His creative drum, protective hand, destructive fire and liberating foot, plunge the beholding souls into Beatitude and merge them into Himself. The Nataraja Dance is thus the emblem of Divine Bliss, Divine Functions and Human Salvation. The ethics and aesthetics of the dance are appealing to every sensitive soul and eminent scholars have dwelt on the meaning of the dance of Siva and the "Nataraja" image, which reveal the glory of the Hindu art and philosophy.

Dr. Anandkumaraswami says:—

"The essential significance of Siva's dance is threefold. First it is the image of His Rhythmic Activity as the source of all movements within the cosmos, which is represented by the Arch; secondly the purpose of the dance is to release the countless souls of men from the

snare of illusion; thirdly, the place of dance. Chidambaram, the centre of the universe, is within the heart .. The conception of Siva's Dance is a synthesis of science, religion aud art,- In the night of Brahma nature is inert and cannot dance till Siva wills it. He rises from His own rapture and dancing sends through inert matter pulsing waves of awakening sound and Lo! matter also dances appearing as a glory round about Him. Dancing, He sustains its manifold phenomena. In the fulness of time still dancing, He destroys all forms and names by fire and gives new rest."

In His "Heart of Aryavarta" the Earl of Ronaldshay says: —"The Nataraja is the plastic presentation of a whole philosophy. In the whirl of dance one sees the Primal Energy which gives life to all existence and so sustains the universe. Other aspects of the figure speak of destruction of desire and the attaining of salvation—there is a synthesis of Science, Art and Religion therein."

## ABOUT THE AUTHOR
## LATE P. R KRISHNASWAMY IYER

A true devotee of the Holy Scripture "Bhagavad Gita" and knower of English, Tamil, Telugu, Sanskrit and Grantham languages, he is the author of the Book "Gleanings from the Gita" for which forewords have been given by Late Sarvapalli Radhakrishnan, Sir. C. P. Ramaswami Iyer, Justice P. Venkataramana Rao, Prof. P. Sankaranarayanan and which was published posthumously by his son Sri. P. K. Venkataraghavan. After the publication several appreciations from great scholars like Dr. T. M. P. Mahadevan, K. Sankara Menon etc. poured in and several reviews appeared in the newspapers and journals.

உ
சிவமயம்



# ॥ शिवाष्टकम् ॥

## சிவாஷ்டகம்

தமிழ் உரை:

Dr. ந. கங்காதரன் M.A , M.Litt., Ph.D.

प्रभुं प्राणनाथं विभुं विश्वनाथं
जगन्नाथनाथं सदानन्दभाजम् ।
भवद्भव्यभूतेश्वरं भूतनाथं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ १ ॥

ப்ரபும் ப்ராணநாதம் விபும் விச்வநாதம்
ஜகந்நாதநாதம் ஸதாநந்தபாஜம்,
பவத்பவ்யபூதேச்வரம் பூதநாதம்
சிவம் சங்கரம் சம்புமீசானமீடே. 1

1. பிரபுவானவரும், ஆருயிர்த் தலைவரும், பெருந்தகையும், உலகனைத்தையும் ஆள்பவரும் உலகின் தலைவரான திருமாலுக்கும் தலைவரும், எப்பொழுதும் ஆனந்தத்துக்கு உறைவிடமானவரும், முக்காலத்திற்கும் அதிபதியானவரும், பூத கணங்களின் தலைவரும், மங்களமானவரும், நன்மை பயப்பவரும், சம்புவெனப்படுபவருமான ஈசானரை (சிவபிரானை) வணங்குகின்றேன்.

சிவம் என்றால் மங்களஸ்வரூபி. சங்கரன் என்பது நன்மையைச் செய்பவர் என்ற பொருள் தரும். சம்பு என்றால் சுகத்துக்கு இருப்பிடமானவர். பிரபு என்னும் சொல்லிற்கு வல்லமையுள்ளவர் அல்லது காப்பவர் என்று பொருள். விபு என்னும் சொல்லற்கும் ஏறக்குறைய அதே பொருளாகும். மேலும் வருமிடங்களில் இச்சொற்களுக்கு இவ்வாறே பொருள் கொள்க.

गले रुण्डमालं तनौ सर्जालं
महाकालकालं गणेशाधिपालम् ।
जटाजूटभंगोत्तरङ्गैर्विशालं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ २ ॥

**கலே ருண்டமாலம் தநௌ ஸர்ப்பஜாலம்**
**மஹாகாலகாலம் கணேசாதிபாலம்,**
**ஜடாஜூடபங்கோத்தரங்கைர் விசாலம்**
**சிவம் சங்கரம் சம்புமீசானமீடே.** 2

2. தலையற்ற உடலைக் கழுத்தில் மாலையாயணிந்தவரும், அரவக் கூட்டங்களைத் தன்னுடலில் அணிந்தவரும், காலனுக்கும் காலனானவரும், ஆனைமுகத்தோனுக்குத் தலைவனும், சடை முடியில் தடையுற்ற அலைகளினால் (கங்கையின் அலைகள்) சிறந்து விளங்குபவரும், மங்களமானவரும், நன்மை

பயப்பவரும், சம்பு எனப்படுபவருமான ஈசானரை வணங்கு கின்றேன்.

"மஹாகாலகால" என்னும் சொல்லை, பிரளய காலத்தில் சிவனைக் குறிக்கும் மஹாகாலராகவும் மற்றும் கால வடிவானவர் என்றும் கொள்ளலாம்.

मुदामाकरं मण्डनं मण्डयन्तं
महामण्डलं भस्मभूषाधरं तम् ।
अनादिं ह्यपारं महामोहमारं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ ३ ॥

முதாமாகரம் மண்டனம் மண்டயந்தம்
மஹாமண்டலம் பஸ்மபூஷாதரம் தம்,
அநாதிம் ஹ்யபாரம் மஹாமோஹமாரம்
சிவம் சங்கரம் சம்புமீசானமீடே.

3. மகிழ்ச்சிக்கு உறைவிடமானவரும், அழகுக்கு அழகூட்டுபவரும், சிறந்து ஒளிர்பவரும், சாம்பலை அணிகலனாக அணிந்தவரும், தொன்று தொட்டு இருப்பவரும், முடிவற்றவரும், கொடிய மயக்கத்தைக் களைபவரும், மங்களமானவரும், நன்மை பயப்பவரும், சம்பு எனப்படுபவருமான ஈசானரை வணங்குகின்றேன்.

'மண்டனம் மண்டயந்தம்' என்னும் இரு சொற்களுக்கு அணிகலன்களை அணிந்து சிறந்து காட்சி அளிப்பவர் என்று பொருள். தோற்றம், முடிவு இவ்விரண்டுமற்றவர் சிவனார். உலகப்பொருள்களின் மீது பற்று என்னும் மிக்க கொடிய மயக்கத்தைக் களைபவரும் அவரே.

तटाधोनिवासं महाट्टाट्टहासं
महापापनाशं सदासुप्रकाशम् ।

गिरीशं गणेशं सुरेशं महेशं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ ४ ॥

தடாதோநிவாஸம் மஹாட்டாட்டஹாஸம்
மஹாபாபநாசம் ஸதாஸுப்ரகாசம்,
கிரீசம் கணேசம் ஸுரேசம் மஹேசம்
சிவம் சங்கரம் சம்புமீசானமீடே 4

4. தடத்தினடியில் வசிப்பவரும், மிகவும் அச்சுறுத்தும் சிரிப்பை உடையவரும், பெரும் பாவங்களை அழிப்பவரும், எப்பொழுதும் நன்கு ஒளிர்பவரும், மலைக்கரசனும், கணங்களுக்குத் தலைவரும், தேவர்களுக்கு அதிபரும், மிகச்சிறந்த தலைவரும், மங்களமானவரும், நன்மை பயப்பவரும் சம்பு எனப்படுபவருமான ஈசானரைப் போற்றுகின்றேன்.

'தடம்' என்னும் சொல்லிற்கு மலைச் சரிவு, ஆகாயம், கரை முதலிய பொருள்கள் உண்டு. சிவனுர் கைலாயத்தில் வசிப்பவராதலாலும் கைலாசம் வானளாவி நிற்பதாலும் வானத்தின் முகட்டில் கைலையில் வசிப்பவர் என்று கொள்ளலாம்.

गिरीन्द्रात्मजा सङ्गृहीतार्धदेहं
गिरौ संस्थितं सर्वदासन्नगेहम् ।
परब्रह्म ब्रह्मादिभिर्वन्द्यमानं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ ५ ॥

கிரீந்த்ராத்மஜா ஸங்க்ருஹீதார்த்த தேஹம்
கிரௌ ஸம்ஸ்திதம் ஸர்வதாஸன்னகேஹம்,
பரப்ரஹ்ம ப்ரஹ்மாதிபிர் வந்த்யமானம்
சிவம் சங்கரம் சம்புமீசானமீடே. 5

5. மலைமகளினால் தன் உடலில் ஒரு பகுதி ஆக்ரமிக்கப் பட்டவரும், மலையில் உறைபவரும், எப்பொழுதும் மயானத் தில் இருப்பவரும், பரப்ரம்ம வடிவினரும், நான்முகன் முதலானவர்களால் வணங்கப் பெற்றவரும், மங்களமான வரும், நன்மை பயப்பவரும், சம்புவெனப்படுபவருமான ஈசானரைப் போற்றுகின்றேன்.

''ஸர்வதாஸன்ன கேஹம்'' என்னும் சொற்றொடரில் ஆஸன்ன என்னும் சொல் சாகப்போகிறவனைக் குறிக்கிறது; கேஹம் என்றால் வீடு என்று பொருள் ஆகையால் மயானத் தில் இருப்பவர் என்று பொருள் கூறப்பட்டுள்ளது.

कपालं त्रिशूलं कराभ्यां दधानं
पदाम्भोजनम्राय कामं ददानम् ।
बलीवर्दयानं सुराणां प्रधानं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ ६ ॥

கபாலம் த்ரிசூலம் கராப்யாம் ததானம்
பதாம்போஜநம்ராய காமம் ததானம்,
பலீவர்தயானம் ஸுராணும் ப்ரதானம்
சிவம் சங்கரம் சம்புமீசானமீடே. 6

6. மண்டை ஓட்டையும், திரிசூலத்தையும் தனது கை களில் தாங்குபவரும், திருவடித் தாமரைகளை வணங்கு பவருக்கு விரும்பியதைக் கொடுப்பவரும், எருதை வாகன மாக உடையவரும், தேவர்களில் முதன்மையானவரும், மங்களமானவரும், நன்மை பயப்பவரும், சம்புவெனப்படு பவருமான ஈசானரைப் போற்றுகின்றேன்.

शरच्चन्द्रगात्रं गुणानन्दपात्रं
त्रिनेत्रं पवित्रं धनेशस्य मित्रम् ।

अपर्णाकलत्रं चरित्रं विचित्रं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ ७ ॥

சரச்சந்த்ரகாத்ரம் குணனந்தபாத்ரம்
த்ரிநேத்ரம் பவித்ரம் தனேசஸ்ய மித்ரம்,
அபர்ணகலத்ரம் சரித்ரம் விசித்ரம்
சிவம் சங்கரம் சம்புமீசானமீடே. 7

7. சரத்ருதுவின் (இலையுதிர் கால) நிலவையொத்த உடலை உடையவரும், குணங்களுக்கு உறைவிடமானவரும், முக்கண்ணரும், புனிதமானவரும், குபேரனுக்கு நண்பரும், அபர்ணையை மனைவியாய் உடையவரும், விநோதமான நடத்தை உடையவரும், மங்களமானவரும், நன்மை பயப்பவரும், சம்புவெனப்படுபவருமான ஈசானரைப் போற்றுகின்றேன்.

சரத்ருது என்பது ஐப்பசி, கார்த்திகை என்ற இரண்டு மாதங்கள் அடங்கிய காலத்தைக் குறிக்கும். இதனை இலையுதிர் காலம் எனவும் கூறுவர்.

'அபர்ணை' என்பது மலைமகளின் ஒரு பெயர். சிவனாரை அடையத் தவமியற்றியபொழுது தானாகக் கிடைத்த காய், கனி, சருகுகளைக் கொண்டு உயிர்வாழ்ந்த மலைமகள் பின்னர் அதையும் துறந்தமையால் 'அபர்ணை' என்றழைக்கப் பட்டாள். 'பர்ணம்' என்றால் இலை. 'அபர்ணம்' என்றால் அதுவுமற்ற என்று பொருள்

हरं सर्पहारं चिताभूविहारं
भवं वेदसारं सदानिर्विकारम् ।
श्मशाने वसन्तं मनोजं दहन्तं
शिवं शङ्करं शम्भुमीशानमीडे ॥ ८

ஹரம் ஸர்ப்பஹாரம் சிதாபூவிஹாரம்
பவம் வேதஸாரம் ஸதாநிர்விகாரம்,
ச்மசானே வஸந்தம் மனோஜம் தஹந்தம்
சிவம் சங்கரம் சம்புமீசானமீடே. 8

8. (இன்னல்களைப்) போக்குபவரும், அரவத்தை அணிகலனாக உடையவரும், சிதையினின்று தோன்றிய (சாம்பலை) அணிந்தவரும், வாழ்க்கைச் சுழலைத் தோற்றுவிப்பவரும், மறைகளின் ஸாரமானவரும், எப்பொழுதும் மாறுதல் எதுவுமற்றவரும், மயானத்தில் வசிப்பவரும், காமனை எரித்தவரும், மங்களமானவரும், நன்மைபயப்பவரும், சம்புவெனப் படுபவருமான ஈசானரைப் போற்றுகின்றேன்.

स्तवं यः प्रभाते नरः शूलपाणेः
पठेत्सर्वदा भर्गभावानुरक्तः ।
स पुत्रं धनं धान्यमित्रं कलत्रं
विचित्रः समासाद्य मोक्षं प्रयाति । ९ ॥

ஸ்தவம் ய: ப்ரபாதே நர: சூலபாணே:
படேத்ஸர்வதா பர்க்க பாவானுரக்த:,
ஸ புத்ரம் தனம் தான்யமித்ரம் கலத்ரம்
விசித்ர: ஸமாஸாத்ய மோக்ஷம் ப்ரயாதி. க

9. சூலத்தைக் கையில் தரித்தவரின் மீதான இந்தத் துதியை எவனொருவன் சிவனிடம் ஈடுபாடு கொண்டவனாக விடியற்காலையில் படிக்கின்றானோ, அவன் புத்திரப் பேறு, செல்வம், தானியம், நண்பர்கள், அழகிய மனைவி முதலியன யாவும் பெற்றுப் பின்னர் மோக்ஷத்தை அடைகின்றான்.

'பர்க்கன்' என்பது சிவபிரானின் திருப்பெயர்களில் ஒன்று, (தன்னை வழிபடுவோர்களது) பாவங்களை வறுத் தெடுத்து அழிப்பவர் என்பது பொருள்.

குறிப்பு — பாம்பின் நடையை ஒத்த அமைப்புடைய புஜங்க பிரயாதம் என்னும் விருத்தத்தில் அமைந்துள்ள இந்த அரிய ஸ்தோத்திரத்தை அருளியது யார் எனத்தெரிய வில்லை.

சிவாஷ்டகம் முற்றிற்று.

சிவம்

---

## திருவிசைப்பா

திருச்சிற்றம்பலம்

ஒளிவளர் விளக்கே! உலப்பிலா ஒன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே!
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

தனதன்நற் றோழா! சங்கரா! சூல
பாணியே! தாணுவே! சிவனே!
கனகநற் றூணே! கற்பகக் கொழுந்தே
கண்கள்மூன் றுடையதோர் கரும்பே!
அனகனே! குமர விநாயக சனக!
அம்பலத் தமரர்சே கரனே!
நுனகழ லிணையென் நெஞ்சினுள் இனிதாத்
தொண்டனேன் நுகருமா நுகரே.

திருச்சிற்றம்பலம்

—திருமாளிகைத்தேவர்

உ
சிவமயம்

# ॥ वेदसारशिवस्तोत्रम् ॥

# வேதஸார சிவஸ்தோத்ரம்

ஆதிசங்கரர் அருளியது

தமிழ் உரை:

ஞானபாஸ்கர பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள்

पशूनां पतिं पापनाशं परेशं
गजेन्द्रस्य कृत्तिं वसानं वरेण्यम् ।
जटाजूटमध्ये स्फुरद्गाङ्गवारिं
महादेवमेकं स्मरामि स्मरारिम् ॥ १ ॥

பசூனாம் பதிம் பாபநாசம் பரேசம்
கஜேந்த்ரஸ்ய க்ருத்திம் வஸானம் வரேண்யம்,
ஜடாஜூடமத்யே ஸ்புரத்காங்க வாரிம்
மஹாதேவமேகம் ஸ்மராமி ஸ்மராரிம். 1

1. எல்லா ஜீவர்களுக்கும் தலைவனும், பாபத்தைப் போக்கடிப்பவராயும், உயர்ந்த யானையின் தோலை உடுத்தியிருப்பவரும், தலைமுடியின் நடுவில் ஒளிவிடுகின்ற கங்கை நீரைக் கொண்டவராயும், காமனையெரித்தவராயும் ஒரே கடவுளாயுமுள்ள பரமேச்வரனை மனதில் நினைக்கின்றேன்.

(குறிப்பு.) "இமம் பசும் பசுபதே தே" என்னும் யஜுர் வேதம் 3-வது காண்டத்தில் உள்ள வாக்யமே இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது. ஜீவர்களுக்குத் தலைவனான பசுபதியின் அனுமதி பெற்றே யாகங்கள் நடத்த வேண்டும் என்பது அந்த மந்திரத்தின் பொருள்-

महेशं सुरेशं सुरारातिनाशं
विभुं विश्वनाथं विभूत्यङ्गभूषम् ।
विरूपाक्षमिन्द्वर्क वह्नित्रिनेत्रं
सदानन्दमीडे प्रभुं पञ्चवक्त्रम् ॥ २ ॥

மஹேசம் ஸுரேசம் ஸுராராதிநாசம்
விபும் விச்வநாதம் விபூத்யங்க பூஷம்,
விருபாக்ஷமிந்த்வர்க்க வஹ்னித்ரிநேத்ரம்
ஸதானந்தமீடே ப்ரபும் பஞ்சவக்த்ரம். 2

2. கடவுள்களுக்கெல்லாம் தலைவரும், தேவர்களுக்கு அரசரும், தேவர்களின் பகைவர்களை அழிப்பவரும், எங்கும் நிறைந்தவரும், உலகத்திற்குத் தலைவரும், உடலில் திருநீற்றையணிந்தவரும், மிக அழகிய கண்களை உடையவரும், சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூவரையும் கண்களாக உடையவரும், எப்பொழுதும் மகிழ்ச்சியோடிருப்பவரும், எல்லாவற்றையும் தன்னிடத்தே கொண்டவரும் ஐந்து முகங்களும் உள்ள பரமசிவனைத் துதிக்கின்றேன்.

गिरीशं गणेशं गले नीलवर्णं
गवेन्द्राधिरूढं गुणातीतरूपम् ।
भवं भास्वरं भस्मना भूषिताङ्गं
भवानीकलत्रं भजे पञ्चवक्त्रम् ॥ ३ ॥

கிரீசம் கணேசம் கலே நீலவர்ணம்
கவேந்த்ராதிருடம் குணுதீதருபம்.
பவம் பாஸ்வரம் பஸ்மனு பூஷிதாங்கம்
பவாநீகலத்ரம் பஜே பஞ்சவக்த்ரம். 3

3. கைலேயங்கிரிக்குத் தலைவரும், பூதக்கூட்டங்களுக்கு அரசரும், கழுத்தில் நீலநிறமுடையவரும், சிறந்த காளை மாட்டின் பேரில் ஏறிக் கொள்பவரும் முக்குணங்களுக்கு அப்பாற்பட்டவரும், உலகம் உண்டாவதற்கு காரணமானவரும், பவாநி தேவியை மனைவியாயுடையவரும், ஐம்முகத்தோனுமான பரமேச்வரனைத் தொழுகின்றேன். (குறிப்பு) யஜுர் வேதத்திலுள்ள (4-வது காண்டம்) சதருத்ரம் என்னும் ருத்ர ப்ரச்னத்தில் கிரிச:, கணபதி:, நீலக்ரீவ: பவ: முதலிய பல பெயர்களால் துதிக்கப்படும் பரமேச்வரனே இந்த சுலோகத்தினுல் சொல்லப்படுகின்றுர்.

शिवाकान्त शम्भो शशाङ्कार्धमौले
महेशान शूलिन् जटाजूटधारिन् ।
त्वमेको जगद्व्यापको विश्वरूपः
प्रसीद प्रसीद प्रभो पूर्णरूप ॥ ४ ॥

சிவாகாந்த சம்போ சசாங்கார்த்தமௌலே
மஹேசான சூலின் ஜடாஜூடதாரின்,
த்வமேகோ ஜகத்வ்யாபகோ விச்வருப:
ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ பூர்ணருப. 4

4. மங்களரூபிணியான பார்வதியின் நாயகரும், சுகத்திற்கிருப்பிடமானவரும், பிறைச்சந்திரனை தலையில் கொண்டவரும், பிரம்மா முதலிய கடவுளுக்கெல்லாம் கடவுளானவரும், சூலத்தைக் கையிலுள்ளவரும், ஜடைமுடியை உடையவருமான நீர் ஒருவரே உலகத்தில் நிறைந்தவரும், உலகமேயானவரும், எங்கும் நிறைந்த உருவமுள்ள பிரபு. என்னிடம் கருணை காட்டுவீராக.

(குறிப்பு) "ருதகும் ஸத்யம் பரம்ப்ரம்ம" எனும் தைத்திரீய உபநிஷத் 4-வது ப்ரச்ன வாக்கியத்திலுள்ள பரமேச்வரனே இங்கு சொல்லப்படுகிறுர்.

परात्मानमेकं जगद्बीजमाद्यं
निरीहं निराकारमोङ्कारवेद्यम् ।
यतो जायते पाल्यते येन विश्वं
तमीशं भजे लीयते यत्र विश्वम् ॥ ५ ॥

பராத்மானமேகம் ஜகத்பீஜமாத்யம்,
நிரீஹம் நிராகாரமோங்காரவேத்யம்,
யதோ ஜாயதே பால்யதே யேன விச்வம்
தமீசம் பஜே லீயதே யத்ர விச்வம். 5

5. முதலானதும், ஒன்றேயான பரமாத்மாவும் உலகமுண்டாவதற்குக் காரணமானவரும், ஆசையற்றவரும் உருவமற்றவரும், "ஓம்" என்னும் எழுத்தால் அறியத்தக்கவரும் எங்கிருந்து உலகமுண்டாயிற்றோ எதனுல் காப்பாற்றப்பட்டதோ எங்கு மறைகிறதோ அந்த அத்வைத ஆத்மரூபியுமான பரமேச்வரனைத் தொழுகிறேன்.

(குறிப்பு) தைத்தரீய உபநிஷத்தில் பிரணவமே பிரம்மம் என்றும், எங்கும் நிறைந்த பரமாத்மாவிடமிருந்தே காணப்படுகின்ற உலகம் உண்டாக்கிக் காக்கப்பட்டு அடங்கி விடுகிறதும், உருவம் பெயர் குணம் ஒன்றுமில்லாது எங்கும் நிறைந்த பரமாத்மா ஒன்றே உண்மை என்று கூறப்பட்டுள்ளதையே ஸ்ரீ ஆசார்யாள் இந்த சுலோகத்தில் கூறியுள்ளார்.

न भूमिर्न चापो न वह्निर्न वायुः
न चाकाशमास्ते न तन्द्रा न निद्रा ।
न चोष्णं न शीतं न देशो न वेषो
न यस्यास्ति मूर्तिस्त्रिमूर्तिं तमीडे ॥ ६ ॥

ந பூமிர்ந சாபோ ந வஹ்னிர்ந வாயு:
ந சாகாசமாஸ்தே ந தந்த்ரா ந நித்ரா,
ந சோஷ்ணம் ந சீதம் நதேசோ ந வேஷோ
ந யஸ்யாஸ்தி மூர்த்திஸ்த்ரிமூர்த்திம் தமீடே. 6

6. பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களாயுமில்லை. சோம்பல், தூக்கம், சூடு, குளுமை, இருப்பிடம், உருமாற்றம் ஒன்றும் பரமேச்வரனுக்கில்லை. மூன்று கடவுள் உருவம் கொண்ட அந்த பரமேச்வரனைத் துதிக்கின்றேன்.

(குறிப்பு)தைத்திரீயோபநிஷத் 4-வது ப்ரச்னம், விரஜா ஹோம ப்ரகரணத்தில் சொல்லப்படும், எல்லாவற்றையும் கடந்த பரமாத்மாவான பரமேச்வரனே இந்த சுலோகத்தில் சொல்லப்படுகிறார்.

अजं शाश्वतं कारणं कारणानां
शिवं केवलं भासकं भासकानाम् ।
तुरीयं तमः पारमाद्यन्तहीनं
प्रपद्ये परं पावनं द्वैतहीनम् ॥ ७ ॥

அஜம் சாச்வதம் காரணம் காரணானும்
சிவம் கேவலம் பாஸகம் பாஸகானும்;
துரீயம் தம:பாரமாத்யந்தஹீனம்
ப்ரபத்யே பரம் பாவனம் த்வைதஹீனம். 7

7. பிறப்பற்றவரும், எப்பொழுதுமுள்ளவரும், காரணங்களுக்கெல்லாம் காரணரும், ஒளியைத் தருகிற சூரிய சந்திரர் முதலியவர்களுக்கும் ஒளியைத் தருபவரும், படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைச் செய்யும் கடவுள்களுக்கு மேலான நான்காமவரும், முதல் முடிவற்ற

வரும், மிகப் பரிசுத்தமானவரும், இரண்டற்றவரும், பரமாத்மாவுமான பரமேச்வரனைச் சரண் அடைகிறேன்.

(குறிப்பு) "ந தத்ர ஸூர்யோ பாதி'' என்னும் கடோப நிஷத்தில் சொல்லப்பட்ட வேத வாக்யப்படி சூரியன், சந்திரன் நக்ஷத்திரங்கள், நெருப்பு, மின்னல் எல்லாம் பரமாத்மாவிடமிருந்து ஒளியைப் பெற்றே பிரகாசிக்கின்றன - என்னும் வேதத்தின் பொருளையே ஆசார்யாள் இங்கு விளக்கியுள்ளார்.

नमस्ते नमस्ते विभो विश्वमूर्ते
नमस्ते नमस्ते चिदानन्दमूर्ते ।
नमस्ते नमस्ते तपोयोगगम्य
नमस्ते नमस्ते श्रुतिज्ञानगम्य ॥ ८ ॥

நமஸ்தே நமஸ்தே விபோ விச்வமூர்த்தே
நமஸ்தே நமஸ்தே சிதானந்த மூர்த்தே,
நமஸ்தே நமஸ்தே தபோயோககம்ய
நமஸ்தே நமஸ்தே ச்ருதிஞானகம்ய. 8

8. எங்கும் நிறைந்தவரும், உலகமாய் ஆனவருமான உமக்கு வணக்கம். அறிவு மகிழ்ச்சி வடிவான உமக்கு வணக்கம். தவத்தினுலும் யோகத்தினுலும் அடையத் தகுந்த உமக்கு வணக்கம். வேதத்தில் கூறப்பட்டுள்ள அறிவினுலேயே அடையத் தகுந்த உமக்கு வணக்கம்.

(குறிப்பு) ''விக்ஞாநாதாநந்தோ ப்ரம்மயோநி:'' என்னும் தைத்திரீய உபநிஷத் வாக்யம் ஞானத்தினுலேயே ப்ரம்மத்தையறிந்து ப்ரம்மமே ஆகலாம் என்று கூறியுள்ளதையே இங்கு ஆசார்யாள் சொல்லியுள்ளார்கள்.

प्रभो शूलपाणे विभो विश्वनाथ
महादेव शम्भो महेशत्रिनेत्र ।

शिवाकान्त शान्त स्मरारे पुरारे
त्वदन्यो वरेण्यो न मान्यो न गण्यः ॥ ९ ॥

ப்ரபோ சூலபாணே விபோ விச்வநாத
மஹாதேவ சம்போ மஹேச த்ரிநேத்ர,
சிவாகாந்த சாந்த ஸ்மராரே புராரே
த்வதன்யோ வரேண்யோ ந மான்யோ ந கண்ய:. 9

9. எல்லாவற்றிற்கும் தலைவனுன சூலத்தைக் கையில் ஏந்திய உலகத்திற்கு அரசனுன மஹாதேவன் - மஹேசன் - முக்கண்ணன், மங்களையான பார்வதியின் கணவன், அமைதி பெற்றவன், காமனை யெரித்தவன், முப்புரங்களையழித்த வனுன பரமேச்வரனுன உன்னைத் தவிர உயர்ந்தவராகவோ கௌரவிக்கத் தக்கவராகவோ வேறு யாரையும் நான் எண்ணமாட்டேன்.

(குறிப்பு) ''கைவல்யோபநிஷத்'' ''உமா ஸஹாயம்'' என்று ஆரம்பிக்கும் வாக்யத்தினுல் உமையோடு கூடிய பரமேச்வரனே எல்லா முறையாலும் மேலாக அடையத் தக்கவர் என்று கூறியிருப்பதையே இங்கு குறிப்பிட்டு உள்ளார்.

शम्भो महेश करुणामय शूलपाणे
गौरीपते पशुपते पशुपाशनाशिन् ।
काशीपते करुणया जगदेतदेकः
त्वं हंसि पासि विदधासि महेश्वरोऽसि ॥ १०

சம்போ மஹேச கருணுமய சூலபாணே
கௌரீபதே பசுபதே பசுபாச நாசின்,
காசீபதே கருணயா ஜகதேததேக:
த்வம் ஹம்ஸி பாஸி விததாஸி மஹேச்வரோஸி. 10

**10.** சூலத்தைக் கையில் கொண்ட கருணையே உருவான கௌரி நாயகனே, ஜீவர்களுக்குத் தலைவனே, ஜீவர்களின் கர்மாவாகிற கட்டையழிக்கிற காசிநகரத் தலைவனே, ஜீவர் களிடம் உள்ள தயையினால் நீயே உண்டு பண்ணி, காத்து உன்னுள் அடக்கி எல்லோருக்கும் மேலான நிகரற்ற பரமேச்வரனாய் விளங்குகிறீர்.

त्वत्तो जगद्भवति देव भव स्मरारे
त्वय्येव तिष्ठति जगन्मृड विश्वनाथ ।
त्वय्येव गच्छति लयं जगदेतदीश
लिङ्गात्मके हर चराचरविश्वरूपिन् ॥ ११ ॥

**தவத்தோ ஜகத்பவதி தேவ பவ ஸ்மராரே**
**த்வய்யேவ திஷ்டதி ஜகன்ம்ருட விச்வநாத,**
**த்வய்யேவ கச்சதி லயம் ஜகதேதகீச**
**லிங்காத்மகே ஹர சராசரவிச்வரூபின். 11**

**11.** காமனையெரித்த தேவனே! 'பவ' என்னும் பெயரு டைய உம்மிடமிருந்து உலகம் உண்டாகிறது. 'ம்ருட' என்னும் பெயரிலிருந்து காக்கப்படுகிறது, 'ஹர' என்னும் பெயரில் இந்த உலகம் ஒடுங்குகிறது. அசைவது அசையாதது மான இந்த உலகத்தின் மூன்று தொழில்களுக்கும் மூல காரணமாயுள்ளது உன் லிங்க உருவான வடிவமேயாகும்.

வேத ஸாரம், வேதத்தின் முடிவான உபநிஷத்துகள். அதில் சொல்லப்படுவது உருவமற்ற ஒன்றேயான பரம் பொருள். அந்த இரண்டற்ற பரமாத்மா தான் பரமேச்வரன் எனப்படுகிறார். ஆகவே ஸ்ரீ சங்கரபகவத்பாதர்கள் வேத ஸாரமான உபநிஷத்துகளில் சொல்லப்பட்ட சிவபிரான் மீதான இந்த துதியைப் படித்து இம்மை மறுமைப் பயனை அடையவே செய்திருக்கிறார்கள்.

௳

சிவமயம்

# திருக்குறளில் சைவசித்தாந்தம்

சித்தாந்த வித்தகர்
கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார்

இவ்வுலகின் கண் பல தேசங்களிலுமுள்ள பலமொழி பேசுபவர், பல ஜாதியினர், பல சமயத்தினர் ஆகியோர் யாவரும் திருக்குறள் என்னும் நம் உயரிய நீதி நூலைத் தங்கள் தங்கள் நூல் என்று தங்கள் தங்கள் தாய்மொழியில் மொழிபெயர்த்துக் கொண்டு பாராட்டி வருவதை அறியதார் இல்லை எனலாம்.

இத்தகைய நூலையியற்றியவர் திருவள்ளுவர் என்று மட்டும் நாம் அறிவோம். ஆனால், இவர் உண்மை வரலாற்றை முழுமையாயறிய ஆதாரங்கள் ஏதுமில்லை. இவர் பிறப்பு முதலியவற்றைப் பலவாறாகப் பேசுவர் பலர். இவர் நம் செந்தமிழ் நாட்டில், திருமயிலையில் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியவர். சைவக் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றும், நெசவுத் தொழிலைச் செய்து வந்தார் என்றும், இவர் மனைவி பெயர் வாசுகி என்றும், இவருக்குக் குழந்தைகள் ஏதுமில்லையென்றும் செவி வழிச் செய்தியால் நாம் அறிகிறோம். இவர் இயற்றிய நூல் ஒப்பற்ற திருக்குறள் ஒன்றே. சிலர் வேறு நூலையும் இயற்றியுள்ளார் என்று கூறுகின்றனர். இதற்கு ஆதாரம் ஏதுமில்லை. சிலர் இந்நூல் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பெற்றது என்று கூறியும் எழுதியும் உள்ளார்கள். இவர்கள் கூற்றுக்கும் ஆதாரம் ஏதும் கிடையாது. இது ஒரு தனித் தமிழ் நூல் என்பது மட்டும் உண்மை, முற்றிலும் உண்மை, முக்காலும் உண்மை.

இனி நாம் எடுத்துக் கொண்ட **"திருக்குறளில் சைவ சித்தாந்தம்"** என்பதை விளக்க முற்படலாம். சைவ சித்தாந்த சாத்திரங்களில் **"பதி, பசு, பாசம்"** என்னும் முப் பொருள் உண்மை பேசப்பட்டுள்ளது. முன் செய்வினை, பிறப்பு, இறப்பு, இன்பம், துன்பம் முதலியன பேசப்பட்டு உள்ளன. உயிர்கள் அடைய வேண்டிய முத்தியின்பம் பேசப்பட்டுள்ளது. வினையின் காரணமாகப் பிறப்புக்கள் ஏற்படுகின்றன. கடவுள் தத்துவம்; இன்னும் பல செய்திகள் பேசப்பட்டுள்ளன.

இவைகளையெல்லாம் நாம் திருக்குறளில் காணலாம். எனவே, திருக்குறள் ஒரு சைவசித்தாந்த நூலே எனவும், இதில் பேசப்பட்ட கடவுள் **சிவபெருமானே** எனவும், **திருவள்ளுவர் சைவரே** எனவும் தெற்றெனப் புலப்படும். ஒவ்வொன்றாக விளக்கிக் கூறுகின்றேன்.

**கடவுள் வாழ்த்து:—** (உண்மை)

"கவி தான் வழிபடுகடவுளையாதல் எடுத்துக் கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை என அறிக; என்னை? சத்துவம் முதலிய குணங்களான் மூன்று ஆகிய உறுதிப்பொருட்கு அவற்றுன் மூவராகிய முதற்கடவுளோடு இயைபுண்டு ஆகலான். அம்மூன்று பொருளையும் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலான், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினர் என உணர்க."

இருந்தாலும் இக்கடவுள் வாழ்த்து சிவபெருமானுக்கே உரியது என்பதனை விளக்குகின்றேன்.

**"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே யுலகு".**

என முதற்குறளின் கருத்து எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன; அதுபோல் உலகம் கடவுளை முதலாக

உடையது. அக்கடவுள் யார்? அக்கடவுளது இலக்கணங்கள் என்ன?

இரண்டாவது குறளில் 'வாலறிவன்' என்று கடவுளைக் குறிக்கப்பட்டுள்ளது. 'மெய்யுணர்வினை உடையான்' என்பது இதன் பொருள். இது சிவபெருமானையே குறிக்கும். நற்றாள் என்பதன் பொருள்—பிறவிப் பிணிக்கு மருந்தாகலின் கடவுளது தாள் நற்றாள் என்றார்.

உயிர்களுக்கு ஏற்படும் பிறவிகளை ஒழிக்க வல்லவன் பிறப்பிறப்பில்லாதவனாகத் தானே இருக்க வேண்டும்?

இனி முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானைத்தான் எண்குணத்தான் என்றார் திருவள்ளுவர். இந்த எட்டு குணங்கள் யாவை? 1) தன்வயத்தனாதல், 2) தூயவுடம்பினனாதல், 3) இயற்கை உணர்வினனாதல், 4) முற்றும் உணர்தல், 5) இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், 6) பேரருள் உடைமை, 7) முடிவிலாற்றல் உடைமை, 8) வரம்பிலின்பம் உடைமை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது.

எட்டு குணங்கள் வேறெந்தக் கடவுள் பேதத்திற்கும் இல்லையென்பது நூல்களின் துணிபு. எனவே இங்குத் திருவள்ளுவர் குறித்து சித்தாந்த சாத்திரங்களில் கூறப்பட்ட சிவபெருமானையே.

மேலும் சித்தாந்த சாத்திரங்களில் கூறப்பட்ட உண்மை, உயிர்கள் பாசத்தை விட்டு நீங்கிப் பதியாகிய சிவபெருமான் திருவடிகளையடைந்து பேரின்பம் துய்த்தல் என்பதாகும்.

திருவள்ளுவரும் 'கடவுள் வாழ்த்து' என்னும் அதிகாரத்தில் அடிசேர் முத்தியைத்தான் "தாள்" என்றும் "அடி" என்றும் 7 குறட்பாக்களில் கூறியுள்ளார். வேறெந்த மதத்திலும் (வைணவம் தவிர) அடிசேர் முத்தி கூறப்படுவதில்லை.

"வான் சிறப்பு" என்னும் அதிகாரத்தில்.

**சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.**

இதில் நித்திய நைமித்திக பூசைகளைக் குறித்துள்ளார். இவ்வுண்மை சைவசித்தாந்தக் கருத்தை வலியுறுத்தும்.

இனி, வேதங்களில் பேசப்பட்ட முக்கியமானவை இரண்டு; ஒன்று "தர்மம் சர" மற்றொன்று "சத்தியம் வத" இதனையே திருவள்ளுவரும் பேசுகிறார்.

**"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும்வாய் எல்லாம் செயல்"**

என்பது தர்மத்தைச் செய் என்பதை வலியுறுத்தும்.

**"யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்**
**வாய்மையின் நல்ல பிற"**

என்பது உண்மை பேசுக என்பதனை வலியுறுத்தும்.

**உயிர் உண்மை** :—உயிர் உடம்பின் வேறு என்று சைவ சித்தாந்தக் கருத்து வலியுறுத்தும். ஏனைய மதவாதிகள் உடம்பே உயிர் என்றும், அந்தக்கரணங்களே உயிர் என்றும் பிராண வாயுவே உயிர் என்றும் பலவாறு பேசுவர். இதற்கு ஒரு சான்று கூறலாம்.

**"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே**
**உடம்போடு உயிரிடை நட்பு"**

இதற்குப் பரிமேலழகர் உரை:- முன் தனியாத முட்டை தனித்துக்கிடப்ப, அதனுள்ளிருந்த புள், பருவம்வந்துழிப் பறந்து போந்தன்மைத்து. உடம்பிற்கும் உயிர்க்கும் உள தாயநட்பு அதாவது முட்டை உடைந்து பறவை வெளியே பறந்து செல்வதைக் காண்கிறோம். அதுபோல உடம்பில் இருந்து உயிர் வெளியே போவதை உணர்கிறோம். எப்படிப் பறவை மீண்டும் உடைந்த முட்டை ஓட்டிற்குள் புக முடியாதோ அதுபோலவேதான் உயிரும் உடம்பை விட்டு

வெளியேறினல் மீண்டும் அவ்வுடம்பினுள் புகமுடியாது. வேறு சில உரையாசிரியர்கள் குடம்பை என்பதற்குக் கூடு எனப் பொருள் கூறியுள்ளனர். கூடு என்ருல் அது கெடுவ தில்லை. பறந்து சென்ற பறவை மீண்டும் அக்கூட்டிற்குள் வந்து தங்கலாம். ஆனல் முட்டை என்ருல் அது உடைந்து விட்டபோது மறுபடியும் ஒன்ருய்ச் சேரவோ அல்லது பறவை வந்து தங்கவோ இடவசதியளிக்க இயலாது. இது தான் பொருத்தமான உரை ன்று பேரறிஞர்கள் கூறி யுள்ளனர்,

இனி, **பாசம்** என்று சைவ சித்தாந்தத்தில் பேசப்பட்ட மூன்ருவது பொருளும் திருக்குறளில் உள்ளது என்பதைச் சிறிது காணலாம்.

> **"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
> **பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"**

என்ற குறளில் இருவினை -மயக்கத்தைப் பற்றி வரும் நல் வினை தீவினை என்னும் இரண்டு வினையும் உளவாகா என்ருர் உரையாசிரியர். இக்குறளின் கருத்து:- கடவுளு டைய கீர்த்தியை விரும்பினவரிடத்து நல்வினை தீவினை என்னும் இருவினைகளும் அடையா.

முற்பிறப்பு, பிற்பிறப்பு முதலியன இல்லை என்பர் பல மதவாதிகள். ஆனல் முன் பிறவி உண்டு, பின் பிறவியு முண்டு என்று நம்புவது சைவசித்தாந்தம். மேலும் மற்ருெரு குறளிலும் நமக்கு முற்பிறப்பு, பிற்பிறப்பு உண்டு என்று கூறப்பட்டுள்ளதையும், அந்தப் பிறப்பும் வினை காரணமாக வரும் என்று நம் சித்தாந்த நூற்களின் கருத் தையே வலியுறுத்தியுள்ளதையும் காணலாம்.

> **"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
> **எழுமையும் ஏமாப் புடைத்து"**

இதன் பொருள்:—ஒருவனுக்கு, தான் ஒரு பிறப்பின் கண் கற்ற கல்வி ஏழு பிறப்பினும் சென்று உதவுதலை

யுடைத்து. வினைகள் போல உயிரின் கண் கிடந்து அது புக்குழிப்புகும் ஆதலின் 'எழுமையும் ஏமாப்புடைத்து' என்றார். கிறிஸ்தவர்களும், முஸ்லீம்களும் முற்பிறப்பு முதலியவைகளில் நம்பிக்கையில்லாதவர்கள். இவர்கள் திருக்குறளைத் தங்கள் நூல் என்று சொல்வது எவ்வாறு பொருந்தும்? அறிஞர்கள் சிந்திக்கவும்.

உதாரணமாக, நம்நாட்டில் நம் காலத்தில் வாழ்ந்து உலகப் புகழ் பெற்று மறைந்த ராமானுஜம் என்னும் கணித மேதையை கூறலாம். இவர் சிறு வயது தொடங்கியே உலகிலுள்ள கணித மேதைகளெல்லாம் கண்டு வியக்கும்படி பல அற்புதங்களைக் கணிதவுலகில் இயற்றியுள்ளதை அனைவரும் அறிவர். இது எப்படி? இவர் முன் பல பிறப்புகளில் கணித நூல் வல்லவராகவிருந்து வினைக்கீடாக இப்பிறவியை எடுத்திருக்கக் கூடும் என்பதில் ஐயமில்லை.

மற்றொரு உதாரணம்:-- சர்தார் வல்லபாய் படேல் அவர்கள் காலத்தில், ஒரு பெண் எந்தக் கோயிலுக்கு அழைத்துச் சென்றாலும் அங்கெல்லாம் உபநிடதங்களை சரமாரியாகப் பொழிந்தாள் என்று பத்திரிகைகளின் மூலம் நாம் அறிந்ததொன்று. இது எப்படி? அப்பெண் தன் முற்பிறப்புகளில் உபநிடதங்களையெல்லாம் நன்கு கற்றுத் தேர்ந்திருக்க வேண்டும். வினைவசத்தால் கிடைத்த இப்பிறவியிலும், அவளுக்கு அவள் முன் செய்வினை தொடர்ந்து வந்தது போல முன்கற்ற கல்வியும் தொடர்ந்து வந்தது எனலாம். இன்னும் பலவுண்டு, விரிப்பிற் பெருகும். துறவறவியலில் ஆசிரியர் பேசியுள்ளதையும் பார்க்கலாம். இதுவும் நம் சைவசித்தாந்த உண்மையினை வலியுறுத்தும்.

"இனி, முறையானே துறவறங்கூறத் தொடங்கினார். துறவறமாவது மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி, அறிவுடையராய்ப் பிறப்பினையஞ்சி வீடுபேற்றின் பொருட்டு துறந்தார்க்கு உரித்தாய அறம். அதுதான் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற் பொருட்டு அவரால்

காக்கப்படும் விரதங்களும் அவற்றான் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமுமென இருவகைப்படும்'' என்றார் உரையாசிரியர். பிறமதங்களில் கூறாத உண்மைகளே இத் திருக்குறளில் கூறப்பட்டது என்னலாம்.

''தவம்'' என்னும் அதிகாரத்திலும் நூலாசிரியர் சித்தாந்தக் கருத்தையே விளக்கியுள்ளார் என்பது பின்வரும் உரையாசிரியர் கூற்றால் நன்கு விளங்கும் அஃதாவது மனம் பொறி வழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயினிலை நிற்றலும் மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல் களை மேற்கொண்டு, அவற்றால் தம்முயிர்க்கு வருந்துன்பங் களைப் பொறுத்துப் பிறவுயிர்களை ஓம்புதல். புலால் மறுத்து உயிர்கள் மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவதாகலின் இது புலான் மறுத்தலின் பின் வைக்கப்பட்டது''. கடைசி யாக ஒன்று கூறி, இந்தக் கட்டுரையை முடித்துக் கொள்ளு கிறேன்.

எல்லா நூல்களிலும் பேசப்பட்டுள்ள பொருள் நான்கு (நான்கு புருஷார்த்தங்கள்). திருவள்ளுவ நாயனாரும் தம் நூலில் சிறப்பாக அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருள்களைப் பற்றியும் உய்த்துணரவைத்தல் என்ற யுக்திப்படி சுருக்கமாக ''மெய்யுணர்தல்'' என்ற அதிகாரத் தில் வீடு (வீடு பேறு) என்பதனைப் பற்றியும் பேசியுள்ளார் என்பர் கற்றறிந்தோர். உரையாசிரியர் உரை, ''அஃதாவது பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களானன்றி உண்மையானுணர்தல். இதனை வட நூலார் 'தத்துவ ஞானம்' என்பர். இதுவும் பற்றற்றான் பற்றினைப் பற்றிய வழி உளதாவதாகலின், அக்காரண ஒற்றுமை பற்றித் துறவின் பின் வைக்கப்பட்டது.

நம் சைவ சித்தாந்தத்தின் உண்மை, உயிர்கள் வீடு பேற்றையடைந்தால் மீண்டும் நிலவுலகிற்கு அவை வர மாட்டா என்பதாகும்.

உயிர்கள் தம் வழிபடு கடவுளைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு வழிகளால் வழிபட்டால் முறையே சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் பதமுத்திகளையும் சாயுச்சியம் என்னும் பரமுத்தியையும் அடையும். கடைசி நிலையான பரமுத்தி அல்லது சாயுச்சியத்தைத் தான் இவ்வதிகாரத்தில் நூலாசிரியர் ''மற்றீண்டு வாரா நெறி'' என்றார்.

''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி''.

உரை : இம்மக்கட் பிறப்பின் கண்ணே உபதேசமொழிகளை அனுபவம் உடைய தேசிகர் பால் கேட்டு அதனால் மெய்ப்பொருளையுணர்ந்தவர், மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியை எய்துவர்.

இன்னும் பலவுண்டு. விரிவஞ்சி இத்துடன் இக்கட்டுரையினை முடிக்கின்றேன்.

சிவம்

---

## மெய்கண்டதேவர் துதி

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவர்இ தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்

—சிவஞான சித்தியார்.

# நற்குஞ்சரக்கன்று

"சித்தாந்த சிகாமணி"
க. வடிவேலாயுதனார், எம் ஏ.,

எந்தச் செயலைத் தொடங்கினாலும் முழு முதற் கடவுளை நினைத்துத் தொடங்குதல் சான்றோர் மரபு. தொடங்கும் செயல் இடையூறு இல்லாமல் முற்றிலுமாக நிறைவேற இறையருள் இன்றியமையாதது என்பது நம்நாட்டு ஆன்றோரது அசைக்க முடியாத நம்பிக்கையாகும். 'நம்பினோர் கெடுவதில்லை' என்ற பழமொழிப்படி அத்தகைய சிறந்த நம்பிக்கையோடு ஆரம்பமாகும் காரியங்கள் இறுதியில் நல்ல முடிவையே எய்தும்.

நம் சைவ சமயத்தில் விநாயகப்பெருமானை எல்லோரும் வழிபட்ட பின்பே எந்த வினையையும் தொடங்குவர். அவரையே கணபதி என்றும் கணேசர் என்றும் பிள்ளையார் என்றும் பல காரணங்கொண்டு போற்றி வழிபடுவர். சிவ பெருமானின் மூத்தபிள்ளையாக அவரை நினைத்து ஆராதனை செய்வர். அவருக்கும் சிவபெருமானைப் போலவே முக்கண் உண்டு.

திருவலிவலம் என்ற தலத்திலுள்ள சிவபெருமானை வழி படுகின்ற திருஞானசம்பந்தப் பெருமான், கணேசர் யானை முகம் கொண்ட வரலாற்றைத் தம் தேவாரத்தில் பின் வருமாறு குறித்தருளியுள்ளார்:—

"பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவர் இடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே"

மிக்க வள்ளல் தன்மையே வடிவாகக் கொண்ட நல்லவர் வாழும் திருவலிவலத்தில் வீற்றிருக்கும் எம் இறைவன் (தன் சங்கற்பத்தாலே) உமை ஒரு பெண் யானை யின் வடிவம் கொள்ளத்(தான்) மேம்பாடுள்ள ஆண் யானையின் வடிவங்கொண்டு தன் திருவடியை வழிபடும் அடியார்களுக்கு வரும் இடையூறுகளையெல்லாம் போக்கி அருளும் கணபதி (யானைமுகக்கடவுள்) அவதரிக்குமாறு அருள் செய்தான். அடியார்களின் இடர்களைக் களைவதே இறைவனின் திருவுள்ளம். அதில் குறை நேராதிருக்குமாறு அதற்கென்றே தனது அம்சமான ஒரு மூர்த்தியையும் தந்து அருள் செய்துள்ளான் இறைவன்.

திருவருட்பயன் என்ற ஞான சாத்திரத்தை அருளிய சந்தானசாரியருள் நான்காமவரான உமாபதி சிவாசார்ய சுவாமிகள் திருக்குறளைப் போலவே அதனைச் செய்தளித் துள்ளார்கள். அந்த நூலில் திருக்குறளின் யாப்பு, எண்ணிக்கை அமைப்பு, சொற்செறிவு ஆகியவற்றைப்பயன் படுத்தியுள்ளார்கள். திருக்குறள் நூல் நாற் பொருள்களில் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் கூறுகிறது. திருக்குறளை நிறைவு செய்வார் போல, இறைவன் கருணை யால் மட்டுமே எய்தக் கூடிய 'வீடு' என்னும் நான்காம் பொருளைப் பற்றி தமது திருவருட்பயனில் நூறு குறள் வெண்பாக்களில் கூறுகிறார்கள். தம்நூல் இனிது நிறை வேற விநாயகப் பெருமானைக்குறித்துக் கூறும் காப்புச் செய்யுள் மிகச் சுவையுடையதாக உள்ளது.

'நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்.'

என்பது அக்குறள் வெண்பாவாகும்.

நல்லருளைப் பொழிவதும் யானைமுகத்தைப் போன்றது மான பிரணவத் திருமுகத்தையுடையவரும் எப்பொழுதும் இளமையுள்ளவருமாகிய விநாயகக் கடவுளைப் பொருந்தி

வழிபடுவாராயின் (ஒருவருக்கு) ஞான சாத்திரம் வருந்திக் கற்க வேண்டிய பண்டம் அன்று என்பதே திரண்ட பொருளாகும்.

நூல் இனிதே முடிவு பெற மங்கலச் சொல்லாகிய '**நல்**' என்ற பொருள் பொதிந்த சொல்லை முதற்கண் வைத்தார் ஆசிரியப்பெருந்தகை. யானைக்குப் பல பெயர்கள் உண்டாயினும் '**குஞ்சரம்**' என்ற தொடரை ஈண்டுப்பயன்படுத்தியதற்கு ஒரு சிறந்த உட்பொருள் இருக்க வேண்டும். குஞ்சரம் என்ற சொல்லிற்கு வனத்தில் திரிவது என்பது பொருள் ஆகும். நமது மனத்தைக் காடாகக் கூறுவது ஒரு மரபு.

**'தன்றேஞான்கி ஞென்று கைம்மிகூஉங்**
**களிறு வளர் பெருங்காடாயினு**
**மொளி பெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே,**

என்ற பழம் பாடலில், '**களிற்று முகத்தான்**' திரியும் பெருங்காடாக நமது மனம் குறிக்கப் பெற்றுள்ளது ஒப்பு நோக்கத்தக்கது

உலகத்து யானைகளைப் போல அடைந்தோர்க்குத் துன்பம் செய்யாமலும், கிழத்தன்மைப்பட்டு நீங்காமலும், அறிந்தறிந்து பாகனையே கொல்லாமலும், அடைந்தோர்க்கு இன்பம் செய்தலும், என்றும் இளமையாய் இருத்தலும், பாகன் ஒருவனை வேண்டாதிருத்தலும் விநாயகராகிய யானையின் இயல்பு என்பதனை, '**நற்குஞ்சரக் கன்று**' என்ற சொற்றொடர் உணர்த்துகின்றது.

அறிவின்மையும், மயக்கமும், இருளும், நிறைந்த நம் மனத்துள், '**நல்குஞ்சரக்கன்று**' வருமாயின் அம்மனம் அத்தீய குணங்களின் நீங்கி ஒளியுடையதாகும். அதனோடு ஞானமும் பெறும் விநாயகரை '**ஞானக்கொழுந்து**' என்று திருமூலர் திருமந்திரத்துள் போற்றியுள்ளது இங்கு நினைவு கூரத்தக்கதாம்.

**'ஐந்து கரத்தனை யானை முகத்தனை**
**இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை**
**நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்**
**புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே'**

ஞானம் எப்பொழுதுமே இளமையாக இருக்குமேயன்றி அதற்கு என்றுமே மூப்பில்லை. ஞானத்தின் வடிவே சிவ பெருமான். அதனால் அப்பெருமான் அருளிய மதலையை **'குஞ்சரக்கன்று'** என்று சிறப்பித்துள்ளார். நம்முடைய மன மாகிய வனத்திலே முதன்முதலாக விநாயகராகிய யானையை உலவ விட வேண்டும். அவ்வாறு அக்குஞ்சரவாரணம் நம் பெருமுயற்சியின்றித்தானாகவே நம் மனத்துள் தங்க நினைக்கு மாயின் நாம் பெறும் பேற்றைச் சொல்லவும் வேண்டுமோ?

**'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'** என்ற மணி வாசகனாரின் அருள்வாக்குப்படி அவன் அருள் இல்லாமல் நாமாகவே நம் மனதில் அவனை எண்ணி உளத்துள் இருக்கச் செய்தல் அரிய செயலாகும். விநாயகரது எளிதில் அருளும் தன்மையை மனத்துள் நினைத்தே **'நண்ணின்'** என்ற பொருள் நிறைந்த வினைச் சொல்லை உமாபதி சிவசாரிய சுவாமிகள் பயன்படுத்தியுள்ளார்கள் போலும். பூசைகளுள் விநாயகர் பூசை யாவரும் எளிதில் முயன்று பயன் பெறத் தக்கதாம். அதனாற்றான் போலும் எங்கும் விநாயகர் கோயில்கள் நிறைந்திருப்பதைக் காண்கிறோம். மற்ற மூர்த் தங்களை வழிபட்டு அவ்வளவு எளிதாகப் பயன் கொள்ள இயலாது. கடின முயற்சியும் அருஞ்சாதனைகளும் அங்குத் தேவைப்படலாம்.

அவ்வாறு விநாயகப்பெருமான் நம்உள்ளத்தே நண்ணிய அளவிலேயே கலைஞானங்கள் எல்லாம் எளிதில் கைகூடும். கலைஞானம் என்ற தொடர் மேற்போக்காக நோக்கும் போது எல்லாக் கலைகளையும் குறிக்குமாயினும், நிரம்ப அழகிய தேசிகர் என்ற உரையாசிரியர் வேதாகம புராண

முதலிய கலைகள் யாவும் என்று குறித்துள்ளமை சிந்தனைக்கு உரியதாகும்.

உலகியற் கல்வி இன்றியமையாததாயினும் அவ்வறிவொன்றே முத்தியினைப் பயவாது. வாலறிவனின் தூய குணவியல்புகளை உணர்த்தும் அருள் நூல்களின் தெளிந்த அறிவே வீடு பேற்றிற்கு அவசியமான சாதனமாகும். இதனையே திருவள்ளுவர்,

**கற்றதனால் ஆயபயன் என்கொல் வால்அறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.**

**பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்புஎன்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு'**

என்ற குறட்பாக்களில் விளக்கியுள்ளார்.

விநாயகப்பெருமான் அருள் நோக்கு நமக்கு இருக்குமாயின் உயர்ந்த ஞானத்தை எளிதில் பெற முடியும் என்பதைத் தெளிவாக்கவே கலைஞானம் கற்கும் சரக்கன்று என்ற தொடரை அருளியுள்ளார். வருந்திக் கற்கும் தேவையில்லாமல் விநாயகர் அருள். அரும்பொருள்களை எளிதில் உணரச் செய்யும் தன்மையது என்று அவரது சௌலப்பிய குணத்தைத் தெளிவாக்கியுள்ளார்.

விநாயகர் வழிபாட்டின் பயனை அவரவர் அநுபவித்துக் கண்டால் தான் விளங்கும் என்று தெரிவித்தற்பொருட்டே ஞானாசிரியர் முடிவிலே 'காண்' என்று ஆணையிட்டு அருளியுள்ளார்.

முடிவாக ஞானக்கொழுந்தாகிய விநாயகர், வெளியே ஞானசாத்திர வடிவாக நின்று, சிவ சிந்தனையை முதலிலே நமக்கு உண்டாக்கி, அப்பால் அகத்தே சிவாநுபவ விளைவுக்குரியவராக உதவுகின்றார் எனத் தெளிதல் வேண்டும்.

சிவம்

# அபிராமி அந்தாதியில் சிவபரமான செய்திகள்

சாக்தப் பேருரை சக்ரவர்த்தி, புலவர்,
பருத்தியூர் K. Santhana Raman,
M.A., B.Litt., D.P.P.A., D.U.N.I.U.

தேவி பரமான நூல்கள் அனைத்திலுமே சிவபெருமானின் சிறப்புக்களும் ஆங்காங்கே குறிப்பிடப்படுவதைப் பரக்கக் காணலாம். அவ்வாறே அபிராமி அந்தாதியிலும் பல இடங்களில் இறைவனின் பெருமைகள் இடம் பெறுகின்றன.

## இறைவனின் சடை

இறைவனின் சென்னியினையும் அதில் விளங்கும் திருச்சடையினையும்பற்றி வேதங்களில் பாதிப்பகுதி புகழ்ந்துரைக்கின்றன என்று கந்த புராணம்—தட்சகாண்டம் குறிப்பிடுகிறது.

> "நான்மறைதனில் ஓர்பாகம் நாரமர் கடவுள் சென்னி
> மேன்மைய தியம்பும்"
>
> —கச்சியப்பர்

நான்மறைகளின் நடு நாயகமாகிய ஸ்ரீருத்திரமும் இறைவனை 'கபர்த்தி'—சடையினையுடைவன் எனப் புகழும். வேதம் சொன்ன வழியிலேயே அன்னையினை வழிபட்ட அபிராமி பட்டர் சிவபெருமானது சடையினைப் பற்றியே பல இடங்களில் குறிப்பிடுகிறார்.

"கொன்றை வார்சடைமேல் பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த புனிதர்" என்ற அடிகள் இறைவனின் ஐந்தொழிலையும் குறிப்பாக உணர்த்துகின்றன.

கொன்றை பிரணவத்தின் வடிவினதாகும். பிரணவத்திலிருந்து அனைத்தும் தோன்றுவதால் கொன்றை 'சிருஷ்டி' யைக் குறித்து நின்றது. ஆற்றுப் பெருக்கு உலகூட்டுவதால் காத்தலையும், அந்நதி சடையில் அடக்கப்பட்டதால் 'சடை' மறைத்தலையும், பாம்பு தாருகாவனத்து முனிவர்களால் அழிக்க ஏவப்பட்டு இறைவனின் கட்டுப்பாட்டில் நிற்பதால் சம்ஹாரத்தையும், திங்களுக்கு அருட் செய்ததால் அருளலையும் குறித்தனவாக அமைந்தன.

கங்கை தன்னுள் மூழ்குவோரைப் புனிதராக ஆக்கும் தன்மைத்து. அக்கங்கையும் இறைவனின் படைப்பே. அதுவும் அவனது சடையினைச் சார்தலின் புனிதமுடையதாயிற்று. எனவே "பகீரதியும் படைத்த புனிதர்" என்றார்.

"மதியுறு வேணி மகிழ்நன்" என்றும் "தாவு கங்கை பொங்கு அலைதங்கும் புரிசடையோன்" என்றும் "பிறை முடித்த ஐயன்" எனவும், "வெறித்தேன் அவிழ் கொன்றை வேணிப் பிரான்" எனவும் அத்திருச்சடையின் புகழ் பேசப்படுகிறது.

## திருமுறை போன்ற தொடக்கம்

சைவத் திருமுறைகள் "தோடுடைய செவியன்" என அர்த்தநாரீச மூர்த்தம் பற்றிய குறிப்புடன் தொடங்குவது போலவே அபிராமி அந்தாதியும் "தார் அமர் கொன்றையும் சண்பக மாலையும் சாத்தும் தில்லை ஊரர்" எனத் தொடங்குகிறது. இறைவனுக்குகந்த கொன்றையும் இறைவிக்குகந்த சண்பகமும் இணைத்துக்கூறப்பட்டு இருவரும் இணைந்த வடிவுடன் தொடங்குகிறது. "அத்துடன் தில்லை ஊரர்" என்றதனால் சைவர்களுக்கு முதன்மைத் தலமாகிய 'தில்லை' பற்றிய குறிப்புடனும் தொடங்குகிறது.

## ஈசனின் வீரச் செயல்கள்

திருக்கடவூர் வீரட்டானத்தில் பாடப்பட்ட அபிராமி அந்தாதி இறைவனின் எட்டு வீரச்செயல்களில் நான்கினை நவில்கின்றது.

1. ''முப்புரங்கள் மாளுகைக்கு அம்பு
தொடுத்த வில்லான்''

''அசுரர் தங்கள் முரண் அன்று அழிய
முனிந்த பெம்மான்''

''தரியலர்தம் புரம் அன்று எரிய பொருப்புவில்
வாங்கிய போது''

''தானவர் முப்புரம் சாய்த்து''

''தீமை நெஞ்சில் புரிபுரவஞ்சரை அஞ்சக்
குனிபொருப்புச் சிலைக்கை எரிபுரை மேனி இறைவன்''

இவ்வடிகள் புரமெரித்த புகழினையும் மேருவை வளைத்த மேன்மையினையும் கூறுகின்றன.

2. ககனமும் வானும் புவனமும் காணவில் காமன் அங்கம்
தகனம் முன் செய்த தவப் பெருமான்''

''விழியால் மதனை அழிக்கும் தலைவர்''

இவை காமதகனம் பறறிய குறிப்புக்கள்.

3. ''மதவெங்கண் கரிஉரி போர்த்த செஞ்சேவகன்'' என்ற அடி கஜாசுரன் என்னும் யானையின் தோலையுரித்த வீரத்தினைப் புகழ்கின்றது. போர்க்களத்தில் தனியே நின்று நூறு யானைகளை வெற்றி கொண்டவனையே ''சேவகன்'' எனக் குறிப்பிடுதல் மரபு. ''சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே'' எனச் சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையில் வருதல் காண்க.

ஆயிரங்களான யானையின் வலிமையினையும், கொடுமையினையும், மதத்தினையும் கொண்ட கஜாசுரனை அழித்த இறைவனை "**செஞ்சேவகன்**" என்ற சொல்லால் குறித்தார்.

4. "**அயன் சிரம் ஒன்று செற்ற கையான்**" என்ற சொற்றொடர் இறைவன் செருக்குற்ற பிரமனின் சிரம் ஒன்றினைக் கொய்த வரலாற்றினையும் குறித்து நின்றது.

## சைவ குரவர்கள் பற்றிய குறிப்பு

சைவ சமய குரவர்களில் முதல்வராகிய ஞானசம்பந்த மூர்த்தியைப்பற்றிய குறிப்பினை "**பால் அழும் பிள்ளைக்கு நல்கின**" என்ற சொற்றொடர் விளக்கி நின்றது. ஆளுடைப் பிள்ளையார் "**அம்மே! அப்பா!**" என்று அழுதார் அல்லவா? அதுவும் தோன்ற அவர் வரலாறு குறிக்கப்படும் பாடலில் "**அம்மே**" என அழைத்து "**நீயும் வந்து என் முன் நிற்கவே**" என வேண்டுகிறார். இது நயம்மிக்க ஓர் அமைப்பாகும்.

ஆசைக் கடலில் அகப்பட்டு அருளற்ற அந்தகன் கைப் பாசத்தில் அல்லற்படாமல் வாசக்கமலம் தன் தலைமேல் வலிய வைத்து திருவடி தீட்சை கொடுத்த நேசத்தை என் சொல்வேன்? என வியந்த அபிராமி பட்டர் பின் அது ஒன்றும் பெரிய வியப்பில்லை என்பது போல் பாடலின் நான்காவது அடியினை அமைக்கிறார்.

"**ஈசர் பாகத்து நேரிழையே!**" இறைவன் பாகத்தில் உறைபவள் அல்லவா நீ? சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு சித்த வட மடத்தில் வலியச் சென்று திருவடி தீட்சை கொடுத்த ஈசனின் இடப்பாகத்தில் உறைபவள் தானே நீ? நீயும் அவ்வாறு எனக்கு வலிய வந்து திருவடி தீட்சை கொடுத்தது ஒன்றும் வியப்பில்லை என்ற குறிப்பு இங்குத் தொனிக்கிறது.

## சைவ சித்தாந்தக் குறிப்பு

'**அருளே**' என அன்னையினை அழைப்பது "**அருளது சக்தி யாகும் அரள் தனக்கு**" என்ற சித்தியாரை நினைவு படுத்தும்

விளியாகும். 'சக்தி தான் சிவத்தை ஈன்றும்' என்ற சித்தியார் கருத்து, "தாயும் மகளும் தாரமுமாமே" என்னும் திருமந்திரக் கருத்து, இமவான் மகட்கு தன்னுடைக் கேள்வன் தாயும் மகளும் தாரமுமாமே" என்ற திருவாசகக் கருத்து ஆகியவற்றினுக்கு இணையாக அபிராமி அந்தாதியில் "கறைக் கண்டனுக்கு மூத்தவளே!" "அவளே அவர் தமக்கு அன்னையும் ஆயினள்" ஆகிய குறிப்புக்கள் வருதல் அறிவோம். "சக்தி தழைக்கும் சிவமும்" "துரியம் அற்ற உறக்கம்" போன்ற சொற்றொடர்களும் சித்தாந்தக் கருத்துக்கள் செறிந்த இடங்களாகும்.

## திருவருட்செயல்கள்

கல்லடைப்பட்ட தேரைக்கும் கருப்பையில் வளரும் உயிருக்கும் இறைவனே படியளக்கிறான். அவன் கொடுப்பதைக் கொண்டே அன்னை அறம் வளர்க்கிறாள். இதனை "ஐயன் அளந்தபடி இரு நாழி கொண்டு" என்ற பாடல் விளக்குகிறது.

அடியவரின் பிழைகளைப் பொறுத்து அருள் செய்தல் இறைவனின் இயல்பு. அவ்வாறே அன்னையினையும் பொறுத்து அருட் செய்ய வேண்டுகிறார்.

இறைவனை நினையாது—வேண்டாது, தேவர்கள் பாற்கடலைக் கடைய முற்பட்ட பொழுது தோன்றிய நஞ்சினையும் உண்டு உலகினை அவன் காக்கவில்லையா? மறந்து சென்ற வரையும் மரணத்தினின்று காக்கவில்லையா? அது தான் அவன் அளிக்கும் அடைக்கலச் சிறப்பு!

'புது நஞ்சையுண்டு கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த நீயும்' வெறுக்கும் தகைமைகள் செய்யினும் அடியாரைப் பொறுக்க வேண்டும் என்ற இடத்தில் அவனது அபயச் சிறப்புப் பேசப்படுகிறது.

## மோட்சப் பிரதான மூர்த்தி

அனைத்துக்கும் மேலாக சிவபெருமானே **"வீடளிக்க வல்லவன்"** அல்லது மோட்சப் பிரதான மூர்த்தி என்பதனையும் குறிப்பிடுகிறார். **"நின் சேவடி சென்னி வைக்க துறக்கம் தரும் நின் துணைவர்"** (துறக்கம்—மோட்சம் அல்லது வீடு பேறு) எனப் புகழ்கிறார்.

## பிற செய்திகள்

இறைவன் **'திக்அம்பரன்**—திசைகளையே ஆடையாக உடையவன், இதனை **பட்டும் எட்டுத் திக்கே அணியும் திருவுடையான்"** என்கிறார்.

அவன் யோக மூர்த்தி என்பதனைத் **"தவப் பெருமான்"** என்ற சொல்லால் விளக்குகிறார்.

**"தவளநிறக் கானந்தம் ஆடரங்கம்"** என்பதால் அவனது பேருழித் தாண்டவம் (மஹா கல்பதாண்டவம்) பேசப்படுகிறது.

அவன் **"கைவந்த தீயும் தலைவந்த ஆறும்"** உடையவன்,

அவன் **"சுடரும் கலைமதித்துன்றும் சடை முடிக் குன்று"**

**"இமவான் அளித்த கனங்குழையினை"** கடி மணங் கொண்ட **'கல்யாண சுந்தரன்'** என்ற குறிப்புடன் அந்தாதி நிறைவுறுகிறது.

சுபம்



# மதுரைக் காஞ்சியில் சமயச் செய்திகள்

கா. ம. வேங்கடராமையா, M.A., B.O.L.,
சிதம்பரம்

சங்கமருவிய நூல்களில் பத்துப்பாட்டு என்ற தொகுப்பில் கண்ட பத்து நூல்களுள் மதுரைக் காஞ்சி ஒன்று. இது 782 வரிகளையுடைய ஒரு பெரிய பாடல். இது தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பேரில் பாடப் பெற்றது; மாங்குடி மருதனார் என்ற பெரும் புலவரால் பாடப்பெற்றது; அப்பாண்டியன் வீடுபேறு அடைதற்பொருட்டுப் பல்வேறு நிலையாமையைக் கூறுவது. இந்நூலுள் சமயத் தொடர்பான பல செய்திகள் உண்டு. அவற்றைத் தொகுத்துக் கூறுதலே இக்கட்டுரையின் நோக்கம் ஆம்.

மதுரையில் அந்தணர்கள் வேதம் ஓதுகின்றனர். அங்ஙனம் அவர்கள் ஓதுவது பொய்கைகளில் மலர்களை மொய்க்கும் தும்பிகள் பாடுவது போல இருக்குமாம்.

"போது பிணிவிட்ட கமழ்நறும் பொய்கை
தாதுண் தும்பி போது முரன்றாங்கு
ஓதல் அந்தணர் வேதம் பாட"

என்பன அவ்வரிகள் (654-656). இங்ஙனம் அந்தணர் வேதம் ஓதுதலைச் சிலப்பதிகாரமும்.

"காலை முரசக் கனைகுரல் ஓதையும்
நான்மறை அந்தணர் நவின்ற ஓதையும்
..........................................
கார்கடல் ஒலியிற் கலிகெழு கூடல்"

என்று கூறும். (*13:140-149*)

திருமால் திருவோண நாளில் திருவவதாரம் செய்தவர் என்பர். பெரியாழ்வாரும்,

**"நின்ற மராமரம் சாய்த்தாய் நீ பிறந்த திருவோணம்**
**இன்றுநீ நீராட வேண்டும் எம்பிரான்"**

என்று பாடுவர் 2-4-2. மதுரைக் காஞ்சியில்

**கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்"**

என்று இச்செய்தி சொல்லப் பெறுகிறது (வரி 590-1)

முருகப்பெருமான், '**கடம்பின் சீர்மிகு நெடுவேள்**" எனப் பெற்றார் (614).

கோயில்களில் திருவிழா தொடங்குமுன் கொடியேற்றம் செய்தல் இந்நாளிலும் காணும் வழக்கமாகும். இதனை மதுரைக்காஞ்சி வரிகள் 365-366

**"ஓவுக் கண்டன்ன இருபெரு நியமத்துச்**
**சாறு அயர்ந்தெடுத்த உருவப் பல்கொடி".**

என்றமையால் அறியப்பெறும். (சாறு-திருவிழா)

"மழுவாள் நெடியோன்" என்று சிவபெருமானைக் குறிப்பிடுவர் மதுரைக் காஞ்சியில் (வரிகள் 453-455) இவரே ஐம்பெரும் பூதங்களை ஒருங்கு படைத்தவர் என்று பின் கண்ட வரிகள் புகலும்.

**"நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய**
**மழுவாள் நெடியோன்"**

பின்வரும் வரிகள் பற்றிய செய்தி ஆய்வுக்கு உரியதாகும். அது நெடுஞ்செழியனைப் பற்றிய விளியாகும். அவ்வரிகள் பின்வருமாறு:

**"தென்னவற் பெயரிய துன்னரும் துப்பின்**
**தொன்முது கடவுள் பின்னர் மேய**
**வரைத்தாழ் அருவிப் பொருப்பிற் பொருந"**

இதற்குத் தரப் பெற்ற உரை வருமாறு:

"இராவணனைத் தமிழ்நாட்டை ஆளாதபடி போக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமை முதிர்ந்த இருடியாகிய அகத்தியனார்க்குப் பின்னர்ப் பொருந்திய ஒப்பற்றவனே" என்பதாகும்.

இதில், இவ்வுரையின்படி "தொன்முது கடவுள்" என்பது அகத்தியரையும், "தென்னவன்" என்பது இராவணனையும் குறிக்கும். இராவணன் தமிழ் நாட்டைக் கைப்பற்றி ஆளாதபடி அகத்தியர் செய்தார் என்பது இதில் குறித்த செய்தி. இவ்வரலாற்றை உட்கொண்டே நச்சினார்க்கினியர் தம் தொல்காப்பியப் பாயிரவுரையில் "பொதியிலின் கண் இருந்து, இராவணனைக் கந்தருவத்தாற்பிணித்து இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கி" என்றெழுதினார்.

எனினும், "தென்னவன்" என்பதற்குப் பாண்டியன் என்று பொருள் கூறித் "தொன்முது கடவுள்" என்பதைச் சிவபெருமானுக்காக்கி "மதுரையில் வீற்றிருந்து அரசாண்ட சோமசுந்தரக்கடவுளுக்குப் பின்னர் அரசு செய்தவனே" என்று சிலர் பொருள் கூறுவர். எனவே குமரகுருபர சுவாமிகள் மதுரைக்கலம்பகத்தில் கூறியது போலச் சிவபெருமானும் உமையம்மையாரும், முருகப் பெருமானும் தமிழ்ச் சுவை நுகர்தற் பொருட்டுத் தண்டமிழ் மதுரையில் வந்தருளினர் என்ற திருவிளையாடற் புராணச் செய்தி மதுரைக் காஞ்சியிற் குறிப்பிட்டதாகக் கொள்ளலாம். சிவபெருமான் சோமசுந்தரராகப் பாண்டிய நாட்டிற்கு அரசு செய்ய வந்தமை கூறும் மதுரைக்கலம்பகம் (9) பாடற்பகுதியின் வருமாறு:

தமரநீர்ப் புவனம் முழுதொருங்கு ஈன்றுள்
 தடாதகா தேவிஎன்று ஒருபேர்
தரிக்க வந்ததுவும் தனிமுதல் ஒருநீ
 சவுந்தர மாறன் ஆனதுவும்
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
 கொண்டதும் தண்டமிழ் மதுரம்

**கூட்டுண எழுந்த வேட்கையால் எனிலிக்**
**கொழி தமிழ் பெருமை யார் அறிவார்?**

இதுகாறும் கூறியவாற்ருன் மதுரையில் அந்தணர் இனிமையாக வேதம் ஓதுவர் என்றும், திருமால் திருவோண நாளில் அவதரித்தவர் என்றும், கோயில்களில் திருவிழாத் தொடங்குமுன் கொடியேற்றம் நிகழும் என்றும், சிவ பெருமானே ஐம்பெரும் பூதங்களையும் படைத்தவர் என்றும், இவரே தான் தொன்முது கடவுள் ஆவர் என்றும், இச் சிவபெருமானே மதுரையில் சோமசுந்தரராக எழுந்தருளினுர் என்றும் மதுரைக் காஞ்சியினின்று அறியப் பெறும் சமயச் செய்திகளாகும்.



ஓம்
அன்பே சிவம்

# பேராசிரியர் : மறை திருநாவுக்கரசு அவர்களின் வாழ்க்கைச் சிறு குறிப்புகள்

தமிழ்ப் பேராசிரியர்
பூ. சாம்பசிவன் எம்.ஏ. பி.டி.,
வ. உ. சி. கல்லூரி, தூத்துக்குடி.

## பிறப்பு

இவர், சென்னை மாநகரிலே திருவள்ளுவராண்டு 1937 பிலவங்க ஆவணி 5-ஆம் நாள் வியாழக்கிழமை (21-8-1907) மா பெரும் புலவர் மறைமலையடிகளார்க்கும் சவுந்தரவல்லி அம்மையார்க்கும் திருமகனாராகத் தோன்றினர்.

## இளமையிற்பத்திமை

பாலப்பருவங்கடந்த பின் இவரிடத்தே சிவபிரானிடத்தும், அடியார்களிடத்தும் மிகுந்த பத்திமையுணர்ச்சி விளங்குவதாயிற்று. அதனால் நாயன்மார்கள் வரலாறுகளை நன்கு ஆர்வமுடன் கற்றூர்; தேவாரத்திருமுறைகளை ஓதி வரலானர். சிவபூசை, திருக்கோயில் வழிபாடுகளில் பெரிதும் ஈடுபாடுகொண்டிருந்தார். அப்போதிவர் அகவை பன்னிரெண்டு.

### நோயில் நலிதல்

அந்நிலையில் இளைப்பிருமல் நோய் (ஆஸ்த்துமா) இவரைப் பற்றியது ஏழாண்டுகள் அந்நோயால் பெரிதும் நலிந்தும், மெலிந்தும் துன்புற்றார். அருமைத்தந்தையார் பெரும் பொருள் செலவிட்டுச் சித்த, ஆங்கில, ஆயுர்வேத யூனனி மருத்துவங்கள் செய்து பார்த்தார், ஒன்றாலும் அந் நோய் தீராது போகவே, அவர் தாம் அறிந்த 'அறிதுயில்' என்னும் (இப்னாடிசம்) கலைமுறையால் ஆறு திங்களளவு முயன்று அந்நோயை அறவே நீக்கினார்.

### தமிழ்க் கல்வியிலார்வம்

நோயுற்றிருந்த காலத்தில் அது பெரிதுந் தாக்காத நேரங்களில் தந்தையாராகிய அடிகளிடத்தில் நன்னூல், நைடதத்தின் பகுதிகளைப் பாடங்கேட்டார். நோய் நீங்கிய பின் திருவையாறு அரசர் கல்லூரியில் 1926 முதல் 32 வரை யில் தமிழ்பயின்று வித்துவான் பட்டமும், 1934—35ல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்று ஆசிரியப் பயிற்சிச் சான்றும் பெற்றார் மாணவராயிருந்தபோது இவர், தவிராது நாடொறுங் காலையில் திருமுறைகளை ஓதிச் சிவபூசை செய்வதிலும், மாலையில் திருகோவில் சென்று திருமுறை ஓதி வழிபடுவதிலும் பெருங்காதலுடையரா விளங்கினார். விடுமுறை நாட்களில் பாடல்பெற்ற தலங் கட்கு யாத்திரை செய்வார். தம்முடன் கற்கும் நண்பர்களை யும் உடனழைத்துச் செல்வார். ஆங்காங்குப் பெரியபுராண விரிவுரைகளுஞ் செய்வார்.

### மனப்பாடவன்மை

இவர் முற்றும் நெட்டுருச் செய்த நூல்களாவன திருக் குறள், நாலடியார். ஐந்திலக்கணம்; சிற்றிலக்கியங்கள் பல, சைவசித்தாந்த சாத்திரங்கள், திருவாசகம், திருமுறை கள், இடைக்காலப் பிற்கால இலக்கியங்கள், நீதி நூல்கள், தனிப்பாடல்கள் இவற்றில் பல்லாயிரக் கணக்கான பாடல்

கள் (ஏறத்தாழ ஐம்பதினாயிரம்) இவர்க்கு மனப்பாடம். இவை இவர் சொற்பொழிவுகளிலும் தனி உரையாடல் களிலும் மேற்கோள்களாகத் தாமாகவே நீரோட்டமாக வந்து கேட்போரை மகிழ்விக்கும் ஒளிபெறும்.

## தேசப்பற்று

மாணவராயிருந்தபோதே நாட்டுப்பற்று, மொழிப் பற்று, சமய பற்றுகளில் தீவிரமாக ஆர்வங்கொண்டார். நாட்டு விடுதலைப்போரில் வீறு கொண்டார் காந்தியடிகள், வினோபா அடிகளின்பால் எல்லையற்ற பத்திமைபூண்டு கதர் நூல் நூற்பார். அவர்கள் காட்டும் நற்றொண்டுகளில் பணி யாற்றுவார்.

## ஆசிரியப்பணியும் தொண்டும்

1932 முதல் 38 வரையில் சென்னை நுங்கம்பாக்கம் நகராண்மை உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி யாற்றினார். 1924 முதல் திரு. வி. க. சச்சிதானந்தம் பிள்ளை முதலிய சான்றோர்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புடைய ராளுர். அவர்களைத் தம் குருமார்களாகப் போற்றலானார்.

மாணவப் பருவத்திலேயே இவர் பேச்சாளராகி விட்டார். மிகச்சிறந்த சொற்பொழிவாளர்களில் ஒருவ ராகப் போற்றப் பெற்றார். அதனால் அக்காலமுதல் இன்றள வும் தமிழகமெங்குமுள்ள நகரங்கள், பேரூர், சிற்றூர்களிற் சென்று சென்று பெரும்பாலும் சைவசமயம் தமிழிலக்கியங் கள் பற்றிச் சங்கங்களிலும் ஆண்டு விழாக்களிலும், மாநாடு களிலும் மணிக்கணக்கில் பேருரைகள் நிகழ்த்தி வருகின்றார்.

இராமலிங்க அடிகள், காந்தியடிகள் வழி நின்று பொதுமை நெறி, பலவிலக்கு, தீண்டாமை, சாதிஒழிப்பு, மதுவிலக்கு, திருக்கோயில் நுழைவு, சர்வோதயம் முதலிய சீர்திருத்தச் சொற்பொழிவுகளை அண்ணாமலை, காமராசர், வேங்கடேசுவரர் பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள், உயர் நிலைப் பள்ளிகள் பல்வகைச் சங்கங்களிலில் இவர் தம் வீறு

கொண்ட விரிவுரைகள் முழங்கின. முழங்குகுன்றன. இந்து சமயப்பற்றிலும் பணியிலும் முன்னிற்பவர். சைவசமயத் திருத்தொண்டில் உறைப்புடையவர் எனினும் எல்லாச் சமயங்களையும் போற்றும் சமரசவாதி.

## இந்தி எதிர்ப்பில் சிறைப்படல்

*1938*-ல் கட்டாய இந்தியை எதிர்த்துத் தமிழாசிரியர் பணியை விட்டுத் தமிழகமெங்கும் பன்னூறு சொற்பொழிவு களாற்றிக் கிளர்ச்சி செய்து தமிழுரிமைக்காக ஆறு திங்கள் சிறைப்பட்டார். சிறையில் இவருடனிருந்தவர்கள் திரு. ஈ.வெ. ராமசாமி, திரு சி. என். அண்ணுதுரை முதலியோரா வர். *1939*-ல் இவர் மனைவியார் திரு. ஞானம்மாள் தன்னிரு குழந்தைகளுடன் கட்டாய இந்தி எதிர்ப்பில் மறியல் செய்து சிறைப்பட்டார்.

## நாட்டு விடுதலைப் போரில் சிறைப்படல்

*1941*-ல் காந்தியடிகள் கட்டளைப்படி போரெதிர்ப்புப் பேருரைகளாற்றி ஓராண்டுக்காலம் சிறையிருந்தார். சிறை யிலிருந்த காலத்திலிவர் முற்பகல் பிற்பகல், இரவு நேரங் களில் தொடர்ந்து பெரிய புராணம், திருக்குறள், சிலப்பதி காரம், சிவஞானபோதம், திருவாசகம் ஆகிய நூல்களைப் பாடஞ் சொன்னுர் திரு. சி. என். முத்துரங்கமுதலியார், திரு. சி. சுப்பிரமணியம், திரு. வி. எம். இராமசாமி முதலியார். திரு. த. செங்கல்வராயன் முதலிய பெருந் தலைவர்கள் பலர் பாடங்கேட்டனர்.

## பத்தாண்டுப் பணி

*1938*-முதல் *1948* வரையில் திரு. டி. எம். நாராயண சாமி பிள்ளையவர்கள் இவர் தம் சமயச் சொற்பொழிவு களில் பெரிதும் ஈடுபட்டு, இவரை இந்து அறநிலையச் சொற் பொழிவாளராக அமைத்தார். அதனுல் 4½ ஆண்டு காலம் திருக்கோயில்களில் பேருரைகளாற்றினுர். பின், திருநெல் வேலி, தென்காசி, விக்கிரமசிங்கபுரம், ஆகிய நகர்களில் பல

மாதங்கள் பெரிய புராணம், திருவாசகம், திருக்குறள், சிவ ஞான போதம் ஆகிய நூல்களை விரிவுரைகளாக நிகழ்த்தி னர்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சொற்பொழி வாளராகவும் பலஊர்களில் சில ஆண்டுகள் பணியாற்றினர்.

### ஆதீனங்களில் போற்றப் பெறல்

திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், குன்றக் குடி, காஞ்சி காமகோடிமடம் ஆகிய ஆதினங்கள் இவர் தொண்டினைப்பாராட்டிப் பொன்னுடை போர்த்தியும், அக்கு மாலையணிவித்தும் சிறப்பித்தன. திருவாவடுதுறை ஆதினத்தின் சைவப் பிரசாரகராக 1948-ம் ஆண்டு முதல் பணியாற்றி வருகின்றார்.

### மீண்டும் ஆசிரியப்பணி

1948-49ல் கடையநல்லூர் உயர்நிலைப் பள்ளியிலும் 1949-52 வரை குலசேகரன் பட்டினம் திருவருள் உயர்நிலைப் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணியாற்றிப் பின் 1952-67 ஜூன் வரை 15 ஆண்டுகாலம் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கினர்.

### வெளிநாடுகளில் விரிவுரைகளாற்றுதல்

பர்மாவிலும், கொழும்பிலும், யாழ்ப்பாணத்திலும் அழைக்கப்பெற்று 40க்கும் மேற்பட்ட சொற்பொழிவுகள் ஆற்றினர். வடநாட்டு யாத்திரையை மேற்கொண்டு 1960ல் கேதார்நாதம், பதரிநாதம், காசி முதலிய தலங்களை வழி பட்டார். காசுமீரஞ்சென்று இயற்கைக் காட்சிகளைக்கண் டும், அங்குள்ள இந்துச் தலங்களை வழிபட்டும் இன்புற்றார்.

அப்போது கல்கத்தா, டில்லி, பம்பாய் முதலிய நகரங் களிலுள்ள தமிழ்ச்சங்கங்களில் பற்பல விரிவுரைகள் நிகழ்த் தினர்.

### திருமந்திர நகரில் (தூத்துக்குடி) பல்வகைப்பணிகள்

1952-ல் வ.உ.சி. கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியேற்றது முதல் இவர் அந்நகரிலுள்ள சைவசித்தாந்த சபை முதலிய சமய சபைகள், திருக்கோயில்கள், ரோட்டரி கிளப், அம்பேத்கார் சங்கம், வர்த்தக சங்கம், உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள், சர்வோதய சங்கம், சமதர்ம சங்கம், கலைக்கழகம், கிறிஸ்தவ இளைஞர் சங்கம் முதல் பல்வகைப் பட்ட அரசாங்க நிலையச் சங்கங்கள், அரசியற் கூட்டங்கள், மாதர் சங்கங்கள், அன்பாசிரமங்கள் முதலியவை அழைத்த போதெல்லாம் சென்று நூற்றுக்கணக்கான விரிவுரை களாற்றி மாபெரும் மாநாடுகளில் நாவீறுப் பெறப் பேசு வதும், அது கேட்டு நகரவர் மகிழ்ந்து போற்றி வருவதும் யாவரும் அறிவர்.

தாம் இவ்வாறு சொற்பணியாற்றுவதுடன் தாமே முன் னின்று ஏனைய அறிஞர்கள், பேச்சாளர்களைக் கொண்டு பல நிகழ்ச்சிகளை நம் நகரிலிவர் நடத்தியும், நடத்தி வருகின்ற தும் யாவரும் அறிந்ததே.

தூத்துக்குடி சைவசித்தாந்த சபை 'சித்தாந்த தின கரன்' என்ற பட்டத்தையும், மதுரையாதீனம் 'திருமுறைச் செல்வர்' என்ற பட்டத்தையும் இவருக்கு வழங்கியுள்ளன.

### சேக்கிழார் பணி—பண்பு நலம்

1942 முதல் இவர் சேக்கிழார் பெருமான் அவதரித்த குன்றத்தூரில், அவர் கோயிலைப் புதுக்கியும், கும்பாபி டேகம் நடத்தியும் சேக்கிழார் திருமடம் அமைத்தும், சேக்கிழார் திருப்பணிக்கழகம் நிறுவியும் 37 ஆண்டுகளாகத் தொண்டாற்றி வந்ததும் நாடறியும்.

யாவரிடத்தும் பேரன்பு, வாய்மை, பத்திமை, பணிவு எளிமை, இரக்கம், ஆனல் உண்மைக் கருத்துக்களில் பேச்சில் இணையற்ற வீரம், விருந்தோம்பல், சிக்கனம்;

ஆனல், உரிய கடமைகளைச் செய்வதில் தன் தகுதிக்கு மேற்பட்ட கொடை வழங்கல்: சாதி, மதவேறுபாடு சிறிதும் பாராமை, பல்வகை நற்பணிகளிலும் வலியச் சென்று தொண்டு செய்தல், எளியவர்க்கு எளியராதல் சிறிதும் அஞ்சாமல் நற்கருத்துக்களைப் பேசல், எழுதுதல் முதலியன வாகும். சான்றோர்க்கிவர் பண்புகளே பாடம்.

இன்று ஆசிரியப்பணியினின்றும் ஒய்வு பெற்றுவிட்டார். அகவை 75. 5 ஆண் 2 பெண்மக்களை உடையவர். எழுவரும் மணம் பெற்று நல்வாழ்வு வாழ்கின்றனர். 1977ல் இவர் மனைவியார் மறைந்தார். தற்போது 2 ஆண்டுகளாக முதுமையால் தளர்ந்துள்ளார் நலங்குன்றியுள்ளார். எனினும் இன்றும் இயன்றவகையில் தாம் செய்துவந்திருந்த தொண்டுகளைச் செய்து வருகின்றார்.

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே"
"அன்பர் பணிசெய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே"
(தாயுமானவர்)

சிவம்

ஓம்
அன்பே சிவம்

"அகர முதல னகர இறுவாய் அறியப்
பகர நமச் சிவாய" எனவாய் மலர
அரிய தாய் தந்தை குருவாய் வந்த
மறை நாவை மறந்து அறிபாய்! மனமே!

—புலவர் நெல்லை கமலசேகரன்

மறைநா — பேராசிரியர் மறை திருநாவுக்கரசு அவர்களைக் குறிக்கும்



# பேராசிரியர்
# மறை
# திருநாவுக்கரசு
# அவர்கள் ஆக்கிய

## பெரியபுராண ஆய்வுரை நூல்களின் சிறப்பு

தெய்வச் சேக்கிழார் பெருமான் அருளிய 63 நாயன்மார்களின் வரலாறுகள் கூறும் நூல் பெரியபுராணமாகும். இந்நாயன்மார்கள் வரலாறுகள் உண்மையில் நடந்தனவா? நடக்கக் கூடியனவா? மூன்றே வயதில் ஞானசம்பந்தர் கடவுளைக் கண்டாரா? ஞானப்பால் உண்டு உடனே தேவாரப் பாடல்களைப் பாடினாரா? எலும்பும் சாம்பலாகி விட்ட பெண்ணை உயிருடன் பூம்பாவையாக உயிர்பெற்று எழச் செய்தாரா? திருநாவுக்கரசு நாயனார், கல்லையே தெப்பமாகக் கொண்டு கடல்கடந்தாரா? இமயமலையில் ஓர் ஏரியில் மூழ்கி அடுத்த நொடியில் தமிழ் நாட்டில் உள்ள திருவையாற்றில் குளத்தில் எழுந்தாரா? பாம்பு கடித்து இறந்தவனை உயிர் பெற்று எழச் செய்தாரா? சுந்தரமூர்த்தி நாயனார்க்கு இறைவன் மனிதவடிவில் வந்து உணவளித் தாரா? முதலை உண்ட பிள்ளையைச் சுந்தரர் தேவாரம்பாடி அதன் வாயிலிருந்து உமிழுமாறு செய்தாரா? இயற்பகை நாயனார் தம் மனைவியை அடியார்க்குத் தரலாமா? சிறுத் தொண்ட நாயனார் தம்பிள்ளையை அறுத்து அடியார்க்கு உணவளிக்க முற்படலாமா?

இச்செயல்களும், இவைபோன்ற நாயன்மார்களின் வரலாறுகளில் கூறப்பெறுஞ்செய்திகளும் பகுத்தறிவுக்குப் பொருந்துமா? மக்கள் வாழ்விற்குப் பயன்தருமா? என்னும் வினக்களுக்குத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் (அப்பர்), சுந்தரர் முதலியவர்களின் வாக்குமூலங்களாக உள்ள அகச்சான்றுகள் கொண்டும், சேக்கிழாரும், அவர் போன்ற சான்றோர்கள் கூறும் புறச்சான்றுகள் கொண்டும் அந்த அரிய நிகழ்ச்சிகள் போல் இக்காலத்தில் நடப்பனவை கொண்டும் விளக்கியும் பேராசிரியர் அவர்கள் 63 நாயன் மார்கள் வரலாற்றினை நான்கு தொகுதிகளாக ஆராய்ச்சி செய்து எழுதி இருக்கின்றார்கள்.

அன்றியும், நாயன்மார்களின் அருமைபெருமைகளையும் மக்கள் நல்வழியில் நடந்து உய்ய நாயன்மார்கள் அருளிய தேவாரப் பாடல்களில் காணும் உயர்ந்த இனிய கவிதை நயங்களையும், உண்மைகளையும், நல்லொழுக்கங்களையும் பொதுமக்களும் எளிதில் படித்துப் பயன்பெற இனிய-எளிய நடையில் எழுதியுள்ளார்கள்.

இந்த ஆய்வுரை நூல்களைப் பாராட்டியும் ஒப்பியும் இன்றைய தமிழ்நாட்டின் பெரும் புலவர்களும், பேரறிஞர் களுமான, அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தின் ஆராய்ச்சித் துறைத்தலைவர்கள் க. வெள்ளைவாரணனர், ச. தண்டபாணி தேசிகர், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத்தலைவர் டாக்டர் ச. பாலசுப்பிரமணியம் முதலியோரும், பேராசிரி யர்கள் ப.சு. மணியம், அ. செகதீசன், உயர்நீதிமன்ற நடுவர் மகராசன், திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம், ந. ரா. முருகவேள், சுத்தானந்த பாரதியார், டாக்டர் ஔவை நடராசன், முரு. பழ. இரத்தினஞ் செட்டியார், ச. சிவகுமாரன் எம். ஏ. முதலான அறிஞர்கள் சிறந்த மதிப்புரைகளை வழங்கியுள்ளனர். அவைகள் அவ்வாய்வுரை நூல்களில் உள்ளன.

"செந்தமிழ்ச் செல்வி" "சித்தாந்தம்" மற்றும் தினமணி, செங்கோல், திருக்கோயில், இந்து முதலாம் திங்கள், நாள் வெளியீடுகளிலும், செய்தித்தாள்களிலும் சிறப்பான மதிப்புரைகள் வெளிவந்துள்ளன.

நாயன்மார்களின் தெய்வத்தன்மை பொருந்திய உண்மையான சிறப்புக்கள் அனைத்தையும் உணர்ந்து மகிழ்ந்து நன்னெறியில் நடந்து உயர்ந்தோராக விரும்புவார்க்கு இந்த ஆய்வுரைத் தொகுதி நூல்கள் நான்கும் பேருதவியாகும்; ஆராய்ச்சியின் திறம் அறிந்து மகிழ, இன்புற விரும்புவார்க்கு அறிவின்பந்தரும் கருவூலமாகும்.

## நூல்களின் விலை விவரம்:

| | | | |
|---|---|---|---|
| 1. | பெரியபுராண ஆய்வுரை 1 ம் தொகுதி | சுந்தரர் வரலாறு | — ரூ. 10-00 |
| 2. | ,, | இரண்டாம் தொகுதி அப்பர் வரலாறு | — ரூ. 10-00 |
| 3. | ,, | மூன்றும் தொகுதி சம்பந்தர் வரலாறு | — ரூ. 10-00 |
| 4. | ,, | நான்காம் தொகுதி 60 அடியார்கள் | — ரூ. 10-00 |

மேற்படி நான்கு தொகுதிகளையும் ஒரே சமயத்தில் வாங்கினல் தக்க சலுகைகள் உண்டு.

விவரங்களுக்கு :

பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு,
43, மூன்ருவது சாலை, சவகர்நகர்,
அகரம், சென்னை—600082,

என்ற முகவரிக்கு எழுதுக.

சிவம்

# பவளவிழாக் காட்சிகள்



ஆட்சி மொழிக் காவலர் திரு. கீ. இராமலிங்கனுர் தலைமை வகிக்க, சிலம்புச்செல்வர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் மறை. திருநாவுக்கரசு அவர்கட்குப் பொன்னுடை போர்த்திப் பாராட்டும் காட்சி.



காண்போர் உள்ளங்களிகூரக் காலைக் கதிரவன் போல் காட்சியளிக்கும் பவளவிழா நாயகர் சித்தாந்த தினகரன் மறை. திருநாவுக்கரசர்.

ஓம்
அன்பே சிவம்

# பேராசிரியரின் பவளவிழாச் சிறப்பு

(ஆங்கீரஸ சர்மா)

சித்தாந்த தினகரன், திருமுறைச் செல்வர், பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு அவர்களின் வாழ்க்கைச் சிறு குறிப்புகளையும், அவர்கள் ஆக்கிய பெரியபுராண ஆய்வுரை நூல்களின் சிறப்புகளையும் ஒருவாறு முன் கண்டோம். இனி அவரது பவள விழாச் சிறப்புபற்றிச் சிறிது காண்போம்.

*23-8-1981* ஞாயிறு மாலை 5 மணிக்கு ஆட்சி மொழிக் காவலர் உயர்திரு கீ. இராமலிங்கனார் அவர்கள் தலைமையில் திரு மறை. திருநாவுக்கரசு அவர்களுக்கு அகவை 75 ஆவதை முன்னிட்டுப் பவளவிழா மிகச் சிறப்பாகச் சென்னை-பெரம்பூர் அன்னதான சமாஜம் விவேகானந்தா மண்டபத்தில் நடைபெற்றது.

சென்னை சட்டமன்ற மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர், டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் மறை. திருநாவுக்கரசு அவர்களுக்குப் பொன்னுடை போர்த்திப் பாராட்டுரையும் வழங்கினார். அவரைத் தொடர்ந்து சென்னைப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் உயர் திரு. நெ. து. சுந்தரவடிவேல் அவர்களும், முன்னாள் அரசு இணைச் செயலாளர் கோ. முத்துப்பிள்ளை அவர்களும், மற்றும் உயர் திருவாளர்கள் பெருஞ்சித்திரனார், நாரண துரைக் கண்ணன், ச. சிவகுமாரன், ந. ரா. முருகவேள், பேராசிரியர் வி. சேதுராமசர்மா அவர்களும் பாராட்டுரை வழங்கினர். அடியேனும் பாராட்டுரை வழங்கியவர்களில் ஒருவன்,

அடியேன் வாழ்த்துரையில்கூறியதாவது:

"உயர் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்களின் கடவுள் நேயம், தமிழ்ப்பணி, சமயப்பணி, சீர்திருத்தப்பணிகள், நாட்டுப்பற்று, மொழிப்பற்று, அதன் காரணமாக இந்தி எதிர்ப்புப் போரில் ஈடுபட்டது போன்ற பற்பல சிறப்புக் களைப் பற்றியெல்லாம் எனக்கு முன்னே பேசிய அறிஞர் பெருமக்கள் விரிவாகப் பேசினர்கள். அவர்களெல்லாம் பேராசிரியரது அருங்குணங்களையெல்லாம் பல்லாண்டுகள் அனுபவித்து அறிந்த உண்மைகளையெல்லாம் உருக்கமாகப் பேசினர்கள். நான் பேராசிரியரது அன்புக்குச் சுமார் ஒன்றரை ஆண்டுகளாகத் தான் ஆட்பட்டுள்ளேன். எனது அனுபவத்தில் நான் அவரிடம் கண்டு ஆனந்தங்கொண்டது, **"ஆனைக்காவுடை ஆதியை நாளும் இறைவன் என்றடி சேர்வார் எம்மையும் ஆளுடையாரே"** என்ற சுந்தரர் பெருமான் திருவாக்குப்படி சிவநேயம் மிக்கவர்களிடம் அவர்கள் கொண்டிருந்த பத்திமையேயாகும். சிவனடியார்களின் சரிதத்தை யான் கூறக்கேட்கும் போதெல்லாம் அவர் கண்களில் இருந்து கண்ணீர் மாலை மாலையாகப் பெருகி அவரது மார்பு முழுவதையும் நனைக்கும். இத்தகைய அடியார் பக்தியை இக்காலத்தில் தேடியும் காண்பது அரிதாகும். இத் தகுதி இவர்க்கு இயற்கையாகவே அமைந்திருப்பது போற்றத்தக்கது.

நல்ல காரியங்கட்குப் பொருள் உதவ வேண்டும் என்று பேசுபவர் பலர். அவரிடம் பொருள் உதவி கேட்டுச் சென்றால் பல சாக்குப் போக்குகளைக் கூறித் தட்டிக் கழித்து விடுவர். இத்தகைய வாய்ச்சொல் வீரர்களே பெரும்பாலும் காணப்படும் இவ்வுலகில் திருமுறைப் பணிக்கு வலிந்து உதவி செய்பவர் இவரைப் போலக் காண்பதரிது.

இத்தகைய சிவநேயம் மிக்க இவர் ஆயிரம் சந்திரப் பிறை கண்டு அதன் பின்னர் கொள்ளும் சதாபிஷேகப் பெரு விழாவையுங் கண்டு சிறக்க வேண்டும்.

"பாரிலோராயிரம் பிறைகண்டு பெருமநீ
சீருடன் வாழ்க மாதோ''

என வாழ்த்தி அடியேனது நிலைக்கு ஏற்ப ஒரு எளிய 'சால்வை'யினையும் போர்த்தி திருமூலர் திருமந்திர நூல் பிரதி ஒன்றினையும் அடியேனது காணிக்கையாகச் சமர்ப் பித்தேன்.

பின்னர் திருப்பெண்ணாகடம் கடந்தைத் தமிழ்ச் சங்கத் தார், சிவகுருநாதன் கழகத்தார் ஆகியோரது வாழ்த்து மடலையும் அவர்கள் சார்பில் அடியேனே வாசித்து அளிக்கும் பேறு பெற்றேன்.

பவள விழாக் குழுவின் சார்பில் சிறந்ததொரு பொன் ஞடையும் பொற்கிழியும் வழங்கப்பட்டது. பேராசிரியர் தம்மைப் பாராட்டிப் பேசியவற்றிற்கெல்லாம் தக்கபடி பதிலளித்தார். ஆட்சிமொழிக் காவலரின் தலைமை உரைக்குப் பின்னர் விழாக் குழுவின் துணைச் செயலாளர் க. நடராச முதலியார் நன்றி கூற விழா இனிது நிறை வுற்றது.

டாக்டர் ஆர். சொக்கலிங்கம் அவர்களைத் தலைவராக வும், திரு. செ. ப. சிவம் அவர்களைச் செயலாளராகவும், திருவாளர்கள் க. நடராசன், சா. நடராசன் ஆகியோர் களைத் துணைச் செயலாளர்களாகவும், மற்றும் திருவாளர் கள் எஸ். ஏ. இராமநாதய்யர், டி. எஸ். இராமசாமி அய்யர், டாக்டர் எஸ். இராமமூர்த்தி, ஆர். முத்துபாபு க. மு. கோவிந்தராசன், ந. சம்பந்தன் செட்டியார், கே. என். நாக சாமி, இ. சுப்பராயலு ஆகியோர்களை உறுப்பினர்களாகவுங் கொண்ட பவளவிழாச் செயற்குழு சிறந்த முறையில் விழா ஏற்பாடுகளைச் செய்திருந்தது பேராசிரியர்பால் அவர்கட்கு இருந்த பேரன்பினைக் காட்டுகிறது என்றால் மிகையாகாது.

வாழ்க மறை திருநாவுக்கரசு! வளர்க அவர் புகழ்!!

சிவமயம்

# சிவானுக்ரஹம்

தர்மபிரவசன ரத்னம், உத்தம உபன்யாச சக்கரவர்த்தி
பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி K. ராஜகோபால சாஸ்திரிகள்

மஹாபாரதம் என்று அழைக்கப்படும் நம் பாரத நாட்டின் சிறப்புக்களைக் கூறுவதும் நான்கு வேதப் பொருள்களுடன் உள்ளதுமான அரும் பெரும் பிரமாண நூலில், பஞ்ச பாண்டவர்கள் யாவர்? திரௌபதி என்ற பெண் யார்? இவர்கள் எப்படி மணந்து கொண்டார்கள்? இது எந்தப் பண்பாட்டிலும் பொருந்தாத ஐவரை ஒரு பெண் மணப்பது என்பது எப்படிப் பொருந்தும் என்ற பல கேள்விகளைக் கேட்டு விடை தெரிந்து கொள்ள ஆசைப் பட்டும் இன்னும் நல்லதொரு விடையைத் தெரிந்து மனத் தெளிவு ஏற்பட்டு ஈச்வரானுக்ரஹம் எத்தகையது என்றெல் லாம் புரிந்து கொள்ளாத நிலையை எங்கும் காண்கிறோம். மஹாபாரதம் தான் நம்நாட்டின் பாரத வம்சத்தின் உயிர் ஒவியமான உத்தமர்களின் நாகரீகத்தையும் ஆன்மீகத் துறையையும் காத்து வருகின்றது. எனவே மஹாபாரதத் தில் உள்ள நாகரீகம் வேறு எங்கும் காணக் கிடைக்காது.

அந்த மஹத் கிரந்தத்தில் ஒரு பெண் ஐவரை மணக்க அருள் பாலித்த முறையையும், அது என்றென்றும் போற்றப் படும் வகையிலும் அமைந்ததும், அந்த நூலின் பெருமைக்கே காரணமானதுமாக உள்ளது சிவபெருமானின் திருவருள் தான். அதை எந்த முறையில் சொன்னால் எல்லோரும் இன்புறுவார்களோ அப்படி வியாஸர் பெருமானுர் கூறும் அழகைப் பார்ப்போம்.

துருபத மஹாராஜாவுக்கு திரௌபதியை ஐவருக்குக் கொடுக்க இஷ்டமில்லை. முடியாது என்றும், ஐவரில் ஒருவர் யார் வேணுமானாலும் ஏற்றுக் கொள்ளுங்கள் என்றும் முடிவாகச் சொல்லி விட்டான். பாண்டவர்கள் ஐவரும் எங்கள் தாயார் (ஐவரும் அடைய வேணும் என்று) கட்டளை இட்டபடியால் தாயின் கட்டளையை மீற முடியாது என்று கூறி விட்டார்கள்.

இனி என் செய்வது? இது ஸமயம் ஒன்றும் புரியாமல் தவிக்கும் தருணத்தில் வியாஸர் பெருமான் வந்தார். அவரிடம் இருவர் கக்ஷியும் சொல்லப்பட்டது. எல்லோர் மனத்தையும் அறிந்து வியாஸர் முந்திய ஜன்ம காரணத்தை கூறும் கதை போல் சிவகிருபையை வெளியிட்டார்.

நளாயனீ என்ற மஹா பதிவ்ருதை, தனது கணவனார் மௌத்கல்ய முனிவரின் இஷ்டப்படி, தவம் செய்யச் சென்றாள். சிவபெருமானைக் குறித்து உக்ரமாகத் தவம் செய்தாள்.

தீவ்ரேண தபஸா தஸ்யா : துஷ்ட : பசுபதி : ஸ்வயம்
வரம் ப்ராதாத் ததா ருத்ர : ஸர்வலோகேச்வர: ப்ரபு :
பவிஷ்யதி பரம் ஜன்ம பவிஷ்யதி வராங்கனை
பவிஷ்யந்தி பரம் பத்ரே பதய : பஞ்ச விச்ருதா :

சிவபெருமான் அந்தப்பெண்ணின் உக்ரமான தவத்தை மெச்சி பிரத்யக்ஷமாகி வரம் கொடுத்து அருளினார். பெண்ணே! உனக்கு வேறு ஜன்மா விசேஷமாக உண்டாகி ஸர்வாங்க ஸுந்தரியாகி, ஐந்து மஹா புருஷர்களைக் கணவர்களாக அடைவாய் என்று அருளிச் செய்தார்.

நளாயனீ:—சம்போ! இது தகாதது, ஒரு பெண்ணுக்கு ஒரு கணவன் தானே. இது தான் உலக தர்மம்.

ஏக : கலுமயா பர்த்தா வ்ருத : பஞ்சஸ்த்விமே கதம்

நான் ஒரு பர்த்தாவைத் தானே ஏற்றுக்கொள்ள வேணும். ஐவரை ஏற்பது எப்படி? இது பொருத்தமற்றதும் கூட. இது போன்ற வரம் பகவானே கொடுக்கலாமா? என்றாள்.

பரமேச்வரன்:—பெண்ணே!

**பஞ்சக்ருத்வ: த்வயாப்ரோக்த: பதிம் தேஹீத்யஹம்புன:**
**பஞ்சதே பதயோ பத்ரே பவிஷ்யந்தி ஸுகாவஹா:**
**ஸக்ருதுக்தம் த்வயா நைதத் நாதர்மஸ்தே பவிஷ்யதி.**

நீ ஐந்து முறை பதி வேணும் என்று என்னை வரனாகக் கேட்டாய். நான் ஐந்து பதிகளை கொடுத்தேன். ஒரு தடவை கேட்டிருந்தால் ஒருவரைக் கொடுத்திருப்பேன். இதனால் குற்றமில்லை. நான் கொடுத்திருக்கிறபடியால் இதில் அதர்மம் வராதது மட்டுமல்லாது நீ போற்றவும்படுவாய் என்றார். மேலும் ஒவ்வொரு கணவரிடமும் இருந்து பிறகு பால்யத்தையே அடைவாய்.

**பஞ்சபி: ப்ராப்ய கௌமாரம் மஹா பாகா பவிஷ்யஸி**
**கச்ச கங்காஜலஸ்தாச நரம் பச்யஸிதம் சுபே.**

இனி கங்கைக் கரைக்கு போய் அங்கு ஒருவர் வருவார். அவரைப் பார்த்து என்னிடம் அழைத்து வா. நீதான் இனி ராஜ்யலக்ஷ்மீ, தேவ ஸாம்ராஜ்யலக்ஷ்மீ, தேவலோக அதிபர்களைக் கணவர்களாக அடைவாய் என்று அருள்பாலித்து மறைந்தார்.

நளாயனியை மௌத்கல்ய முனிவர் விரக்தியை அடைந்து தவம் செய்யப்போகும் போது சிவபக்தி செய்து வேறு ஜன்மாவில் வேறு கணவரை அடைவாய் என்று சொல்லி இருப்பதால் நளாயனி சிவபெருமானை பதிம்தேஹி என்று ஐந்து முறை கேட்டாள். சிவபெருமானும் அப்படியே அருளினார்.

இப்போது கங்கையை அடைந்து நளாயனி வருத்தத்துடன் ஒரு சொட்டு ஜலத்தைக் கங்கையில் கண்ணிலிருந்து

விட்டாள். அது தாமரஸ புஷ்பமானது. இதைப் பார்த்துக் கொண்டே வந்த இந்திரன் நளாயனியிடம் நீ யார் அம்மா என்று கேட்டான். அப்போது நளாயனி அவனிடம் எதுவும் பேசாமல் என்னுடன் வாவென்று அழைத்தாள். இந்திரன் அந்தப் பெண்ணுடன் கூடச் செல்ல

**தாம்கச்சந்திமன்வகச்சத் ததானீம் ஸோபச்யதாராத்**
**தருணம் தர்சனீயம்**
**ஸித்தாஸனஸ்தம் யுவதீஸஹாயம் க்ரீடந்தமைக்ஷத்**
**கிரிராஜமூர்த்னி**

அந்தப் பெண் கைலாஸ சிகரத்தை அடைந்தாள், அங்கு பார்வதியுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டு ஸித்தாஸனத்தில் இருக்கும் பரமேச்வரனை இந்திரன் பார்த்தான். கோபம் கொண்டான். நீர் யார்? நான் இந்திரன் இவ்விடம் வந்திருக்கிறேன். தேவ ராஜனாகிய என்னைக் கண்டதும் எழுந்து மரியாதை செய்யவில்லை. உன்னை தண்டிப்பேன் என்று உரக்கச் சப்தமிட்டான்.

**க்ருத்தம்சசக்ரம் ப்ரஸமீக்ஷ்யதேவ: ஜஹாஸசக்ரம்ச**
**சனைருதைக்ஷத**
**ஸம்ஸ்தம்பிதோ பூததேவராஜ: தேநேக்ஷித:**
**ஸ்தாணுரிவாவதஸ்தே**

அந்த இந்திரன் கோபப்படுவதைக் கண்ட பகவான் ஹா ஹா என்று சிரித்து அவனை ஒருமுறை பார்த்தார். இந்திரன் கை கால்கள் அசைவற்றன. வாய் பேச முடியவில்லை, கண் அசைவற்றது, எதையும் செய்ய முடியாமல் தவித்தான். எந்த பரமேச்வரன் கிருபையால் கை அசைகிறதோ, கால் நடக்கிறதோ, கண் பார்க்கிறதோ, வாய் பேசுகிறதோ, காதுகேட்கிறதோ மூக்கு முகர்கிறதோ, மற்ற அவயவங்களும் செயல்படுகிறதோ, அவரை வணங்காவிடில் எந்த அவயமும் செயல்படாது என்றதை அவன் அறிய வேண்டியே நடத்திக்காட்டினர். உடன் பகவான் அந்தப்

பெண்ணைப் பார்த்து இவனை அழைத்துச் செல் என்றார். அந்தப் பெண் அவனைத் தொட்டதும் திடீரென்று கீழே விழுந்தான். ஸ்வாதீனமற்றவனானான். அவனைப் பார்த்து கிரீசன்,

தரீமேதாம் ப்ரவிசத்வம் சதக்ரதோ யன்மாம் பால்யாத்
அவமம்ஸ்தா: புரஸ்தாத்

இந்தக் குகைக்குள் போ. உனக்கு விசேஷ ஞானமில்லாததினால் என்னைக் கண்டதும் அவமதித்தாய். ஏமாந்து போனாய். போ குஹைக்குள். உன்னைப் போல் முன் இந்திரனாக இருந்தவர்கள் நால்வர்கள். அவர்களும் என்னை நீ செய்ததுபோல் அவமதித்தார்கள். அவர்களை இந்தகுகையில் அடைத்து வைத்திருக்கிறேன், நீயும் போய் இரு என்றார்.

இந்திரன் நடுங்கி சிவ கிருபையால் ஸ்வாதீனம் அடைந்து அழுது புலம்பி, என் அப்பனே சம்போ! உனது பெருமையை தெரிந்து கொள்ளாமல் போனேன். நீங்கள் இந்த உலகத்தை படைத்து ரக்ஷித்து அழிக்கும் முழுமுதற் கடவுள். உங்களை சரண் அடைகிறேன் என்றான்.

உவாசதேவம் பஹுரூபமுக்ர ஸ்ரஷ்டாSசேஷஸ்ய
புவனஸ்ய த்வம்பவாத்ய ;

நீங்களே எல்லாவற்றிற்கும் காரணமானவர் என்று துதித்தான். இந்த இந்திரன் குகைக்குள் சென்றான். அங்கு முன் இந்திரர்களாக நால்வர் இருந்தவர்கள் இருந்தார்கள். சிவபெருமான் அவர்களையும் இப்போது வந்து இந்திரனையும் பார்த்து மனுஷ்யலோகம் செல்லுங்கள். இந்தப் பெண்ணை நீங்கள் ஐவரும் மணந்து உலகில் உள்ள தீய சக்திகளைப் போக்கி உலகை உங்களால் நல்வழிப்படுத்தின பிறகு உங்களுக்கு என்னை அவமதித்த சாபம் போகும். பிறகு இவள் ஸ்வர்கலக்ஷ்மியாவாள், நீங்கள் தேவபதம் பெறலாம் என்று அருளிச்செய்தார். அந்த ஐவர்கள் விச்வபுக்-பூததாம-சிபி-

சாந்தி-இந்திரன் ஆக ஐவர். இந்த ஐவரும் சிவகிருபையினுல் தர்ம தேவதை -வாயு-இந்திரன்—அச்வனீ தேவர்களின் ப்ரசாதத்தினுல் இவ்வுலகை அடைந்து; உலகைக்காக்க வந்தவர்கள். சிவபெருமான் அருள் பெற்றவர்கள். அதனுலேயே திருமாலும் இவர்களுக்கு ஸஹாயம் செய்ய 'பலராம-கிருஷ்ணர்களாக' பிறந்திருக்கிருர்கள். நீ கவலைப்படவேண்டாம், இது சிவானுக்ரஹம், இவர்கள் தான் இந்த பாரதம். பாரத உலகு தான் இவர்கள் என்று வ்யாஸர் தெளிவு படுத்தி ஞானதிருஷ்டியையும் கொடுத்து ஐவர்களையும் பார்க்கச் செய்தார். துருபதமஹாராஜனும் வியாஸரின் உபதேசத்தினுலும் ஞானக்கண்ணுலும் பாண்டவர்களையும், திரௌபதியையும் பார்த்து சிவகிருபை பெற்றவர்கள் என உணர்ந்து சிவாக்ஞைப்படி கன்யகாதானம் ஐவருக்கும் ஐந்து நாள்களில் தனித்தனி செய்தான். ஐவரும் ஒவ்வொரு நாளும் திருமணம் செய்து கொள்ளும் போது திரௌபதி கன்னியாகவே இருக்கக் கண்டார்கள். எல்லாம் சிவமயம். பாரதக்கதை என்ற இதிஹாஸத்தின் முக்கியமான கட்டமான ஐவரை மணந்தது சிவகிருபைதான் காரணம் என்று தெளிந்தோம்.

சிவப்ரஸாதத்தினுல் தான் உலகு வாழும்.

---

## தீராப்பிணி தீர்க்கும் திருக்கோயில்கள்

பல திருக்கோயில்கள் தீராப்பிணி தீர்க்கும் தெய்வீக மருத்துவ நிலையமாக விளங்குகின்றன. வைத்தீசுவரன் கோயில், திருவெண்காடு, திருமணஞ்சேரி, திருக்கருகாவூர் போன்ற இடங்கள் முறையே இன்றும் பிணி தீர்த்தல், மகப்பேறு அருளல், திருமணம் கூடிவரல், கருக்காத்தல் போன்ற பல்வேறு மருத்துவ அருள்நிலைக் கூடங்களாக விளங்கி வருகின்றன.

—திருத்தருமையாதீனம் 26-வது குருமஹாசந்நிதானம்
அவர்களின் அருள்வாக்கு

—ஆதாரம்: ஞானசம்பந்தம் 10-4-80 இதழ் பக்கம் 202

உ
சிவமயம்

# கட்டுரையாசிரியர்கள் பற்றிய சிறுகுறிப்புகள்

(தொகுப்பு : ஆங்கீரஸ சர்மா)

இந்த சிவஞான பூஜா மலருக்குக் கட்டுரைகள் உதவியருளிய அறிஞர் பெருமக்களைப்பற்றி நமது வாசகநேயர்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன் அவர்களது வாழ்க்கைச் சிறுகுறிப்புகளைத் தொகுத்து ஈண்டு வெளியிடுகிறோம். இவற்றில் திரு. P. R. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்களைப் பற்றியும் திரு. ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்களைப் பற்றியும் அவர்களது கட்டுரைகளின் கீழேயே குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. மற்றும் **"ஆங்கில மாதுக்கு அருள்புரிந்த அண்ணல் சிவபெருமான்"** என்ற கட்டுரை இராமகிருஷ்ண விஜயம் *1981*-வது ஆண்டு மணிவிழா மலரிலிருந்து எடுத்துப் பிரசுரிக்கப்பட்டது. கட்டுரை ஆசிரியர் பெயர் 'நாடோடி' என்று குறிக்கப்பட்டுள்ளது. இவரைப் பற்றிய குறிப்புக்களை அறிய வாய்ப்பில்லாது போயிற்று.

மற்றைய அறிஞர்களைப் பற்றி இப்பகுதியில் காண்போம்.

## 1. திரு. த. சி. ச. இராமச்சங்கு பாண்டியன்

**'சித்தாந்த சைவம்'** என்ற தலைப்பில் மாதவச் சிவஞான முனிவரது சிவஞானபோத மாபாடியத்தையே நமக்குச் சுருக்கமாகக் கொடுத்திருக்கும் இவர் தூத்துக்குடி நகரத்தில் ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் கிளை அலுவலகத்தில் எழுத்தராகப் பணிபுரிந்து வருகிறார். (Assistant Life Insurance

Corporation of India, Tuticorin Branch). தந்தையார் பெயர் த. சி. சரவணப் பெருமாள் நாடார் என்பதாம்.

இவர் **சிவஞானபோத மாபாடியம்** கற்பதற்குக் காரணமான இவரது இயற்றமிழ் ஆசிரியர் **பண்டித ஆ. சிவசுப்பிரமணிய அய்யர்** அவர்கள் மதுரையைச் சேர்ந்தவர்கள். **திரு. சிதம்பரராமலிங்கப் பிள்ளை** என்ற புகழ்பெற்ற தமிழ்ப் பேராசிரியரின் மாணவர். திரு. பிள்ளையவர்கள் **சேற்றூர் சுப்பிரமணியக் கவிராயரின் மாணவர்**. இவ்வழியில், நமது இராமச்சங்குப் பாண்டியன் அவர்கள் தம்மைத் திருவாவடுதுறை மாணவப் பரம்பரையைச் சேர்ந்தவன் என்று உரிமையுடன் பெருமையும் கொள்கிறார். ஐம்பத்தொன்று வயதான தம்மை இன்னும் ஒரு சித்தாந்த மாணவனே எனக் கூறிக் கொள்ளும் இவர் தூத்துக்குடியில் பல சைவ மெய்யன்பர்களுக்குச் சித்தாந்த சாத்திர நூல்களைப் போதித்து வரும் சித்தாந்த ஆசிரியராகத் திகழ்ந்து வருகிறார். திருமுறைகளில் அளவில்லாத ஆர்வங்கொண்டவர். 'எனக்கென யாதொரு பெருமையுமில்லை. எல்லாம் சிவஞான முனிவரின் வாக்குகளே' எனத் தமது கட்டுரையினைப் பற்றி அடக்கமாகத் தெரிவித்துக் கொள்ளும் திரு. த.சி.ச இராமச்சங்கு பாண்டியன் அவர்கள் நீடூழி வாழ்ந்து சைவ மெய்த்தொண்டு புரிய பார்வதி-பரமேச்வரரைப் பிரார்த்திக்கின்றோம்.

## 2. அருட்கவி மஹேந்திரவாடி இரா. உமாசங்கரன்

சாமவேதம் பாரத்வாஜ கோத்திர ஸ்மார்த்த பிராமண வகுப்பைச் சேர்ந்த மஹேந்திரவாடி இரா. உமாசங்கரன் அவர்கள் ஒரு தனியார் தொழிற்சாலையில் எழுத்தராகப் பணியாற்றுபவர். தந்தையார் திரு. M.S. ராமச்சந்திர ஐயர் வாலாஜாப்பேட்டையில் தெய்வ நெறிப் பிரசாரம் செய்து வருகிறார். திரு. உமாசங்கரன் தமது தொழிற்சாலைக்குச் செல்ல வசதியாக அருகில் உள்ள மாங்காடு என்ற புனித

ஸ்தலத்தை தமக்கு இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்த காலத்தில் அன்னை காமாக்ஷியின் அருட்கடாக்ஷத்தினால் கவிபாடும் ஆற்றல் பெற்று அருட்கவியானார். மஞ்சரி, தினமணிசுடர், குண்டூசி போன்ற பிரபல பத்திரிகைகளில் கட்டுரைகளும் கவிதைகளும் எழுதியுள்ளார். அன்னை காமாக்ஷியின் புகழ் பரப்பும் அருமைத் தொண்டராகி மங்களம் தந்திடும் மாங்காட்டு அம்மை, பக்திப் பாமாலை, மாங்காட்டின் மாட்சிமை, மாங்காடு காமாக்ஷி ஆறுவார வழிபாடு, இசைத்தட்டில் மாங்காட்டுப் பாடல்கள், அம்மன் பாமாலை, காமாக்ஷி புகழ்மாலை முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார். நமது மற்றொரு வெளியீடான ஸ்ரீ சங்கரஜயந்தி மலரிலும் ஆண்டு தோறும் தவறாது தரணீதரன், பரத்வாஜன் என்ற புனைபெயர்களில் தலமகிமைகளை யெல்லாம் அழகாக எழுதி வருகிறார். இந்த மலரில் வெளியாகியுள்ள இவரது 'ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீபூதபுரீச்வரன்' என்ற கட்டுரையினைப்படித்து இன்புறுமாறு வாசகர்களைக் கோருகிறோம். அன்னை காமாக்ஷியின் தண்ணளியால் அன்பர் மஹேந்திரவாடி உமாசங்கரன் அவர்கள் நல்லனவெல்லாம் பெற்று நனி வாழ்க எனப் பிரார்த்திக்கின்றோம்.

## 3 வித்துவான் ச. இரத்னவேலன்

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளையும் ஸ்ரீமத்மாதவ சிவஞான யோகிகளையும் தமது ஆதர்ச குரவராகக் கொண்டு வைதிகச் சைவ நெறியில் ஒழுகி வரும் வித்துவான் திரு. ச. இரத்னவேலன் அவர்களை சங்கரன்கோவில் சைவ சித்தாந்த மஹா சபையின் துணைச் செயலாளர் என்ற முறையில் முதலில் அவருடைய அறிமுகம் நமக்கு ஏற்பட்டது. திருவாவடுதுறை ஆதீன வித்துவான் காலஞ் சென்ற சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்கள் இவருக்கும் மற்றும் சங்கரன்கோவில் சைவ சித்தாந்த மஹா சபை உறுப்பினர்கள் பலருக்கும் சாத்திர நூல் போதித்த குரு ஆவார். திரு. பிள்ளையவர்கள் மறைந்து

சுமார் பத்து ஆண்டுகள் ஆகியும் நமது இரத்னவேலன் அவர்களது குருபக்தி அன்று போலவே இன்றும் விளங்கி வருதல் கண்கூடு.

கோமதி அம்மன் அரசு மேல் நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரியும் வித்துவான் ச. இரத்னவேலன் அவர்கள் வடமொழியிடம் வெறுப்பு கொள்ளாமல் அம்மொழியில் உள்ள சிறந்த கருத்துகளைப் போற்றுகின்றவராகவும் திகழ்கின்றார். "கௌரீ கல்யாணம்," "புராணங்களில் தேசிய நோக்கு", என்பன இவர் இயற்றிய உரை நடை நூல்கள். "சங்கரலிங்க உலா," "திருக்கருவை வெண்பா அந்தாதி" என்ற நூல்களுக்குப் பொழிப்புரை மிக அழகாக எழுதியுள்ளார். இவரெழுதிய பல கட்டுரைகள் கவிதைகள் பல பத்திரிகைகளில் பிரசுரமாகியுள்ளன.

"சித்தாந்த பண்டித பூஷணம் சிவஸ்ரீ ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையவர்களின் மாணவன் என்று மட்டுமே என்னைக் குறிப்பிட்டால் போதும்; மற்றைய குறிப்புகள் எதற்கு?" எனக்கேட்கும் குரு பக்தியிற் சிறந்த இந்த மாணவர் குருவருளால் குவலயம் புகழ, இனிதே வாழ்க எனக் கோமதி அம்மை உடனுறை சங்கரலிங்கப் பெருமான் திருவடிகளைச் சிந்தித்துப் பிரார்த்திக்கின்றோம்.

## 4. டாக்டர் ந. கங்காதரன், M.A., M. Litt., Ph.D.

கூர்மபுராணக் கதைகள் என்ற தலைப்பில் இந்த மலரில் நீண்ட விஷய தானம் செய்துள்ள டாக்டர் ந. கங்காதரன் அவர்கள் வேத விற்பன்னர்களின் வழி வந்தவர். இவருடைய பாட்டனார் கோமல் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் என்பவர் வேதத்தைக் 'கனம்' என்னும் முறைப்படி ஓதுவதில் மிக்க ஸமர்த்தர் எனப் பெயர் பெற்றவர்.

டாக்டர் ந. கங்காதரன் சென்னை விவேகானந்தா கல்லூரியில் ஸம்ஸ்கிருத துறையில் எம்.ஏ. பட்டம் பெற்றுச்

சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஸம்ஸ்க்ருதத் துறையில் தலைவராகவும் பேராசிரியராகவும் விளங்கி அகில உலகப் புகழ் பெற்ற காலஞ்சென்ற பேராசிரியர் டாக்டர் வே. ராகவன் அவர்களிடம் பணி செய்யத் துவங்கி அவரது மேற் பார்வையில் கருட புராணத்தில் ஆராய்ச்சி செய்து அதற் காக எம். லிட். என்னும் ஆய்வுப் பட்டத்தைப் பெற்றார். பின்னர் லிங்கபுராணத்தை ஆராய்ந்து அதற்கான டாக்டர் பட்டத்தையும் பெற்றார். இதனிடையில் இவருடைய துறை யில் நடக்கும் ஒரு மாபெரும்பணியான 'Catalagus Catalogorum' என்பதற்கு உதவும் வகையில் ஜெர்மானிய, ருஷ்ய மொழிகளில் தேர்ச்சி பெற்றார். இவருடைய ஆராய்ச்சிப் புத்தகங்கள் அச்சிடப் பெற்றுள்ளன. இலக்கியப் பணியில் இவருக்கு இருக்கும் ஆர்வம் ஒவ்வொரு ஆண்டும் வெளி வரும் நம்முடைய மற்றொரு பிரசுரமான சங்கர ஜயந்தி மலரில் மிகவும் அபூர்வமான சிவஸ்தோத்திரங்களை அழகிய தமிழ் மொழிபெயர்ப்புடன் அளிப்பதிலிருந்தே நாம் அறிந்துகொள்ளலாம். இவர் பல ஆராய்ச்சிக் கட்டுரை களையும் எழுதியுள்ளார். வடமொழியிலுள்ள சிறந்த நூல் களையெல்லாம் தமிழில் மொழிபெயர்த்துத் தரவேண்டும் என்ற ஆர்வமுடைய இவருடைய மொழிபெயர்ப்புத் திறனை அனைவரும் போற்றுகின்றனர். முத்ரா ராக்ஷஸம் என்ற புகழ் பெற்ற வடமொழி நாடக நூலின் வடமொழி உரை நடையை 'சாணக்யன்-சந்த்ரகுப்தன்' என்னும் பெயரில் தமிழ் நூலாக ஆக்கியுள்ளார். இவரது மொழி பெயர்ப்புத் திறனுக்கும் ஆர்வத்திற்கும் சான்றாக இந்த நூல் அமைந்துள்ளது.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் தற்சமயம் விரிவுரையாள ராக ஸம்ஸ்கிருதத் துறையில் பணி புரியும் இவர் அண்மை யில் அதற்கும் மேம்பட்ட பதவியை எதிர் நோக்கியிருக் கிறார். அப்பதவி அவருக்கு விரைவில் கிடைக்க அம்மை யப்பனை வேண்டுகின்றோம்.

## 5. வித்துவான் கா. ம. கண்ணப்பன் பி. லிட்.

பழுத்த தமிழ்ப் புலமை பாலித்த வித்துவான் திரு. கே. எம் வேங்கடராமையா எம்.ஏ , பி.ஓ.எல். அவர்களின் இரண்டாம் மகனுகிய பேற்றினன் என்று தன்னைப் பெருமையுடன் கூறிக் கொள்ளும் வித்துவான் கா. ம. கண்ணப்பன் இந்த நமது மலரில் "ஞானப்பிரகாச மாலை" என்ற தலைப்பில் கட்டுரை எழுதியுள்ளார். இருபத்து மூன்று ஆண்டுகளாகத் தமிழ் ஆசிரியராகப் பணி புரிந்து வருகிறுர். தற்சமயம் திருத்தருமபுர ஆதீனத்து குரு ஞானசம்பந்தர் உயர் நிலைப்பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணி புரிந்து வருகிறுர். 'ராணி' முதலிய ஏடுகள் சிலவற்றில் கவிதைகள் எழுதியுள்ளார். "நதிரா", "ஆசிரியர் அப்பாத்துரை," "தியாகத்தின் வேகம்" என்னும் இவரது நாடக நூல்கள் 1960-ல் வெளி வந்துள்ளன. பள்ளிக்குரிய பாட நூல்களும் கட்டுரை நூல்களும் எழுதியுள்ளார். நாடகங்கள் பலவற்றிற்குப் பாடல்கள் எழுதியதோடு ஒரு சில மேடை நாடகங்களில் நடித்தும் உள்ளார். தருமையாதீனத் திருக்கோயில்களில் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றி வருகின்றுர். இவரது பேச்சுத் திறமையும் எழுத்துத் திறமையும் அலாதியானது. இவ்வளவு திறமை பெற்றிருந்தும் மிக்க அடக்கத்துடன் பழகுவதற்கு இனியவராகத் திகழ்கின்றுர்.

1953-ல் திருப்பனந்தாள் கல்லூரியில் பயின்று வித்துவான் பட்டம் பெற்ற இவர், தற்பொழுது பி. லிட். பட்டமும் பெற்றுள்ளார். எம். ஏ. பட்டம் பெறுவதற்குப் படித்து வருகிறுர்.

திருத்தருமையாதீன ஸ்ரீலஸ்ரீ குரு மஹாசந்நிதானம் அவர்களின் பரிபூரண கிருபா கடாக்ஷத்திற்குப் பாத்திரமான திரு. கண்ணப்பன் அவர்கள் நல்லனவெல்லாம் நனி பெற்று மேலும் புகழ் பெற்று விளங்கச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைப் பிரார்த்திக்கின்றேம்.

6. வித்துவான் பெ. கு. வரதராசன், எம்.ஏ.; பி.ஓ.எல்., பி.டி.

"கம்பன் காட்டிய கண்ணுதற் கடவுள்" என்னும் தலைப்பில் கருத்துச் செறிவுமிக்க கவின்மிகு கட்டுரை எழுதியுள்ள வித்துவான் திரு. பெ.கு. வரதராசன் அவர்கள் இராமலிங்க வள்ளலார் அவதரித்த கருணீகர் குலத்தில் பிறந்தவர். சேலம் மாவட்டம் பெரியபட்டி என்னும் கிராமத்தில் 1929-ம் ஆண்டு நவம்பர் திங்கள் 10-ஆம் தேதியன்று உயர்திரு. உபாத்தியாயர் A. குப்புசாமிப்பிள்ளை, திருவாட்டி இலக்குமி தம்பதியாருக்கு மகனாகத் தோன்றினார். 1947-ம் ஆண்டு நாமக்கல் உயர்நிலைப் பள்ளியில் S. S. L. C. பரீக்ஷையில் தேறி, பின்னர் T. S. L C. ஆசிரியர் பயிற்சியில் தேறி, தமது சொந்த முயற்சியால் (Private Study) தமிழ் வித்துவான், B. A., B. O. L. M. A. ஆகிய அனைத்துப் பட்டத் தேர்வுகளிலும் வெற்றி பெற்றார். பின்னர் சென்னை சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியில் B. T. பரீக்ஷையில் தேர்வு பெற்றார். தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் நடத்தப்பட்ட கல்வெட்டு ஆய்வுப் பயிற்சியும் பெற்றார். உயர்நிலைப் பள்ளியில் இடைநிலை ஆசிரியராக 1952-ல் பணியினைத் தொடங்கிய இவர் 1954 முதல் 1972 வரை முதல்நிலைத் தமிழாசிரியராகவும், 1972 செப்டம்பர் முதல் கல்லூரியில் துணைப் பேராசிரியராகவும் பணிபுரிந்து வருகிறார். காவிரிக் கரை ஓரமுள்ள சிவபெருமான் திருக்கோயில்களிலெல்லாம் 1963—1968 ஆண்டுகளில் திருமுறைச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். பள்ளிகளில் இலக்கியச் சொற்பொழிவுகளும் கோயில்களில் இராமாயண, பாரத, கந்தபுராணச் சொற்பொழிவுகளும் நிகழ்த்தியுள்ளார்.

இதிஹாஸக் கட்டுரைகள், மாரியம்மன் பதிகம், மூவர் மும்மணிக்கோவை, சிவபெருமான் புகழ்மாலை, சனிபகவான் திருவிரட்டை மணிமாலை, ஸ்ரீராமர் பாதாதி கேசப்பதிகம், திருமகள் துதி, வரதராசன் ஆத்திச் திருமுருகன் புகழ்மாலை, சூடி முதலியவை இவரது பக்தி நூல்கள்,

'உடலும் உயிரும்', 'எண்ணும் எழுத்தும்', 'திருப்புகழ் ஆராய்ச்சி', 'அனுபூதி' 'புலவரேறு வரதநஞ்சயப்பிள்ளை' முதலியவை அவரது கட்டுரைகள்.

Dr. P. சுப்பராயன், Dr. அ. சிதம்பரநாதஞ் செட்டியார், Dr. ரா. பி. சேதுப்பிள்ளை, திரு. சி. சுப்ரமண்யம் ஆகியோர் இவரது தமிழ்ப்புலமையையும் பணியையும் உரைநடையால் பாராட்டியுள்ளார்கள். நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை, புலவர் வேணுகோபாலப் பிள்ளை, கி. வா. ஜகந்நாதன், திருமுருககிருபானந்தவாரியார் ஆகியோர் இவரைக் கவிதைகளால் சிறப்பித்துள்ளார்கள்.

நம்மிடம் பேரன்பு கொண்டுள்ள சேலம் திரு. கந்தசாமிப் பிள்ளையின் மருமகனுரான இவர் நீடுழி வாழ்ந்து செந்தமிழ்ப் பணியிலும் சைவப் பணியிலும் சிறந்து விளங்க நமது சித்தத்தில் தேன் போன்று இனிக்கும் சிவபெருமான் திருவடிகளைச் சிந்திக்கின்ருேம்.

## 7 வித்துவான் பொன் முருகையன்

திருப்பனந்தாள் - தாடகையீச்சரம் என்ற தலைப்பில் விஷயதானம் செய்துள்ள வித்துவான் பொன். முருகையன் அவர்கள் திருப்பனந்தாள் மடத்தில் ஐந்து தலைமுறைகளாகப் பணியாற்றும் தொண்டை மண்டல முதலியார் மரபைச் சேர்ந்தவன் நான் எனப் பெருமையுடன் கூறிக் கொள்கிருர். இவரது தந்தையார் திரு. பொன்னுசாமி முதலியார் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் '**கார்பார்**' ஆகப் பணியாற்றியவர்.

பொன். முருகையன் அவர்கள் 1955-ல் இந்த தமிழ் மாநிலத்திலேயே நான்காவது தரத்தில் (4th rank) வித்துவான் பட்டப் பரீட்சையில் தேர்ச்சி பெற்றுத் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். 1961 முதல் திருப்பனந்தாள் மேல்நிலைப்பள்ளியில் (Higher Secondary School) பணிபுரிந்து வருகிருர்.

மடத்தின் தொடர்பாக நடைபெறும் பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், திருவாசகம் ஆகிய சொற் பொழிவுகளைத் தொடர்ந்து செய்து வருகிறார். ஸ்ரீ குமர குருபரர் பத்திரிகையில் தொடர்ச்சியாகத் 'திருத்தல யாத்திரை' என்ற பகுதியை எழுதி வருகிறார். 1961-ம் ஆண்டு மதுரை திருஞானசம்பந்தர் மடத்து ஆதீன கர்த்தர் அவர்களால் இவருக்கு **சைவமாமணி** என்ற பட்டம் வழங்கப்பட்டது. இவரது தமையனார் பொன். சுப்பிர மணியம் அவர்கள் திருமடத்துக் காஷியராகப் பணிபுரிந்து வருகிறார். இவரது குமாரர் முருகு. சுவாமிநாதன் B. Litt. தேர்ச்சிப்பெற்றுத் தற்சமயம் M.A. பட்டத்திற்குப் பயின்று வருகிறார்.

பொன் மனம் படைத்த வித்துவான் பொன். முருகை யன் அவர்கள் நீடூழி வாழ்ந்து தொட்டதெல்லாம் பொன் னாகத் துலங்கிச் சீரும் சிறப்புடன் வாழ பெரியநாயகிப் பிராட்டி உடனுறை செஞ்சடை வேதியனைப் பிரார்த்திக் கின்றோம்.

## 8. பைந்தமிழ்ப் பாவலவர், புலவர் ஏறு, மணி தீபம், சிவகதாப்ரசங்கச் சக்ரவர்த்தி, கே. ஆர். நாகராசன்.

மயிலை முருகன் காவடிச் சிந்து என்ற தலைப்பில் 32 பாடல்களை இம்மலரில் எழுதியுள்ள இவர் தஞ்சை மாவட்டம் கடாரங்கொண்டான் கிராமத்தைச்சேர்ந்தவர். திரு. ரங்கசாமி ஐயர் - ஸரஸ்வதி அம்மாள் தம்பதிகட்கு மூத்த மகனாகப் பிறந்தவர். கோனேரிராஜபுரம், ஆடுதுறை ஆகிய இடங்களில் கல்வி கற்றார். தனியாகத் தமிழ் பயின்று இரண்டாவதாகத் தேர்ச்சி பெற்றார். நாகூரில் ஒன்பது ஆண்டுகள் ஆசிரியப்பணி புரிந்தார். நாகைத் தமிழ்ச் சங்கத்துத் தலைமைப் புலவராகவும் திகழ்ந்தார். தற்சமயம் சென்னை மருத்துவர் குருசுவாமி முதலியார் தொண்ட

மண்டலம் துளுவ வேளாளர் மேல்நிலைப் பள்ளியில் 18 ஆண்டுகளாகத் தமிழாசிரியராகப் பணி புரிந்து வருகின்றார்.

காஞ்சி காமகோடிப் பெரியவாள் "மணி தீபம்" என்ற பட்டத்தையும், காஞ்சி காமகோடிபீடப் புதுப் பெரியவாள் "புலவர் ஏறு" என்ற பட்டத்தையும் இவருக்கு வழங்கி உள்ளார்கள். மற்றும் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரி முன்னாள் முதல்வர் பேராசிரியர் அ. ஸ்ரீநிவாஸ ராகவன் அவர்கள் "**பைந்தமிழ்ப் பாவலவர்**" என்ற பட்டத்தையும், செய்யூர் ஜமீன்தார் திரு. V. K. இராமசுவாமி முதலியார் அவர்கள் "**சிவகதாப்ரசங்க சக்கரவர்த்தி**" என்ற பட்டத்தையும் இவருக்கு வழங்கியுள்ளார்கள்.

பல இடங்களில் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வருகின்றார். சிவபெருமான், உமாதேவியார், முருகன், விநாயகர் இவர்கள் மேல் ஆயிரக்கணக்கான கவிதைகள் எழுதியிருக்கின்றார். இன்னும் எழுதிக் கொண்டிருக்கின்றார். சமயக் கட்டுரைகள், நாடகங்கள், மற்றும் நவீனங்கள், சிறு கதைகள் முதலியனவும் எழுதியிருக்கின்றார்.

ஆர்வமும் அன்பும் மிக்க இந்த அரிய நண்பர் மேலும் புகழ்களைக் குவித்துச் சிறப்புடன் வாழச் சிவபெருமான் திருவடிகளைச் சிந்திக்கின்றோம்.

## 9. பேராசிரியர் அ. அய்யாசாமி, M. A.

**'மறவாது கல்லெறிந்த மாதவர்'** என்ற தலைப்பில் சாக்கிய நாயனரது வரலாற்றை வடித்துக் கொடுத்திருக்கும் பேராசிரியர் அ. அய்யாசாமி அவர்கள் சமயத்துறையில் ஆர்வம் மிக்கவர். அகவை நாற்பதுக்கு மேலாகியும் இளமைத் துடிப்புடன் செயல்படும் இவ்வீரர் ஆங்கில இலக்கியத்தில் M. A., பட்டம் பெற்றவர். தமிழ் நாட்டிலும் வெளி மாநிலங்களிலும் ஆங்கில ஆசிரியராகப் பணியாற்றியவர். தற்போது குரோம்பேட்டையிலுள்ள விவேகானந்தா

வித்யாலயத்தின் தலைமையாசிரியராகப் பணியாற்றி வருகின்றார். பல கவியரங்கங்களில் பங்கு கொண்டுள்ளார். திறனாய்வுக் கட்டுரைகள் பல எழுதியுள்ளார். சொற்பொழிவுகள், சமயம் இலக்கியம் ஆகிய இரு துறைகளிலும் செய்துவரினும், சமயச் சொற்பொழிவுகளில் விசேட ஆர்வம் காட்டி வருகின்றார். சைவ சித்தாந்த மகாசமாஜம் திருத்தருமை ஆதீன நிலையம் ஆகியவற்றின் பணிகளில் தொடர்பு கொண்டவர். இளைஞர்களுக்குச் சமயவுணர்வு ஊட்டும் வகையில் "இறைவனைத் தேடுங்கள்" என்ற நூலை எழுதியுள்ளார். அன்பர் அய்யாசாமி அவர்கள் மலைபோலப் புகழ்களைக் குவித்துப் பல்லாண்டு சமயப் பணிபுரிய அருள் புரிய அம்மையப்பனைப் பிரார்த்திக்கின்றோம்.

## 10. சித்தாந்த வித்தகர் கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார்

சித்தாந்த வித்தகர் திரு. கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியாரவர்கள் 26-3-1896 அன்று தரணியை ஆள வைக்கும் பரணி நக்ஷத்திரத்தில் பிறந்தார். மார்க்கண்டேயர் பிறந்த மிதுன லக்னத்தில் பிறந்த இவரும், தீர்க்காயுளுடன் விளங்குகின்றார். இவரது ஜாதகத்தில் குரு, சனி, செவ்வாய் ஆகிய மூன்று கிரஹங்கள் உச்சமாயிருப்பது குறிப்பிடத்தக்கது. இளமையிலேயே தந்தையை இழந்த இவர் சிறந்த சைவப்பெரியாரான தமது சிறிய தந்தையார் திரு. க. சதாசிவம் செட்டியார், பி. ஏ. அவர்களால் வளர்க்கப்பட்டு பழைய இண்டர்மீடியேட் (Intermediate) வகுப்பு வரை படித்தார். சமய நூல்களைத் தமது சிறிய தந்தையாரிடமே பாடங்கேட்டுப் பயின்றார். அவர் செய்யும் உபன்யாசங்களின் போது கையேடு படித்து வந்தார். திரு. க. சதாசிவம் செட்டியாருக்குப் பிறகு அவர் ஆற்றி வந்த சமயத் தொண்டுகளைத் தொடர்ந்து செய்து வருகின்றார். சிவபிரானின் மூன்று கண்களுக்கு ஒப்பான பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கந்த புராணம் ஆகிய முப்பெரும்

புராணங்களைப் பலமுறை பல இடங்களில் விரிவுரை ஆற்றி யுள்ளார். பன்னிரு திருமுறைகளில் இவருக்குள்ள நம்பிக்கை யும், ஆர்வமும் அளவுக்கடங்காதது அவற்றைத் தினசரி பாராயணமாக வைத்துக்கொண்டு இதுவரை 35 முறை களுக்கும் மேலாகப் பாராயணம் செய்துள்ளார். பன்னிரு திருமுறைகள் மொத்தம் சுமார் 18 ஆயிரத்துக்கும் மேலான பாடல்களைக் கொண்டவை. இவற்றை 35 முறை பாரா யணம் செய்துள்ளார் என்ருல், அதிலிருந்து இவரது திரு முறை பக்தியை நாம் நன்கு அறிந்து கொள்ளலாம். பன்னிரு திருமுறைப்படனமே தமக்கு ஆயுளையும், ஆரோக்கியத்தை யும் கொடுத்து வந்துள்ளது என்று நமது செட்டியார் அவர் கள் திடமாக நம்புகிருர்கள். பிறர்க்குக் கூறுவதைத் தாமே அனுஷ்டித்துக் காட்டுகிருர்கள்.

இவர் அக்கௌண்டண்ட் ஜெனரல் ஆபீஸில் பணி புரிந்து 1954-ல் ஓய்வு பெற்ற பின்னர் தீவிரமான சைவப் பணியில் ஈடுபட்டு பல கோவில்களில் திருமுறைக் கோவில் கள் நிறுவியும், பல சமய நூல்களை எழுதித் தொகுத்து வெளியிட்டும், புராண விரிவுரைகளை மேலும் விரிவாக ஆற்றியும் சமயப் பணியில் மேம்பட்டு விளங்கி வருகின்ருர். மதுரை ஆதீனகர்த்தர் அவர்கள் இவருக்குச் **சித்தாந்த வித்தகர்** என்ற பட்டத்தை அளித்து இவரைக் கௌரவித் தார்கள். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம், திருத்தருமபுர ஆதீனம், திருவாவடுதுறை ஆதீனம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் ஆகிய மடங்களும் இவரைப் போற்றியுள்ளன. சென்ற சில ஆண்டுகளாக இவர் தமது பிறந்த நாளான **பங்குனிப் பரணி** அன்று மதுரையை அடைந்து அங்குள்ள பொற்ரு மரைத் தீர்த்தத்தில் நீராடி, சித்தி விநாயகப் பெருமான், அங்கயற்கண் அம்மை, ஸ்ரீ சோமசுந்தரப் பெருமான், வெள்ளியம்பலவாணர், எல்லாம் வல்ல சித்த மூர்த்திகள் ஆகிய மூர்த்தங்களை வணங்கி, அங்கு சில நாட்கள் தங்கி, மேலே சொன்ன முப்பெரும் புராணங்களையும் விரிவுரை ஆற்றியுள்ளார்.

முதுமையினுல் உடல் தளர்ந்தும், உள்ளம் தளராது சைவப்பணி ஆற்றி வரும் இப்பெரியார் வேத நூல் விதித்த பிராயம் நூறும் ஆரோக்கியத்துடன் வாழ்ந்து சைவப்பணி ஆற்றி, சமயத் தொண்டுக்குக் கலங்கரை விளக்காகத் திகழு மாறு அங்கயற்கண்ணி உடனுறை சோமசுந்தரப் பெருமான் திருவடித் தாமரைகளைப் பிரார்த்திக்கின்ருேம்.

## 11 சித்தாந்த சிகாமணி திரு க. வடிவேலாயுதனுர் எம். ஏ.,

திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருமந்திரநகர் என வழங்கும் தூத்துக்குடியில் 30-12-1924-ல் திரு. மு. கா. சு. கணேச முத்துக்குமாரசுவாமி சண்முகத்தம்மாள் தம்பதிகளுக்கு ஐந்தாவது புதல்வராகத் தோன்றியவர் இவர். தூத்துக்குடியில் S.S.L.C. தேர்ச்சி பெற்றுதிருநெல்வேலி ம. தி. தா. இந்து கல்லூரியில் இடை நிலை வகுப்பில் தேறி ***1942-1945*** ஆண்டுகளில் அண்ணு மலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ச் சிறப்பு வகுப்பில் **B. A.** (Hons). பரீட்சையில் சிறப்புத் தேர்வு பெற்ருர். திரு வாளர்கள் கா. சு. பிள்ளை, கந்தசாமியார், டாக்டர் சிதம்பர நாதர், டாக்டர் தெ. பொ. மீ. ஆகியோர்களின் பேரன் புக்கு உரியவராக இருந்தார். 1945-50 வரை ஐந்தாண்டுகள், மதுரை அமெரிக்கன் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளரா கப் பணிபுரிந்து, பின்னர் 1951 முதல் 1968 வரை சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணி யாற்றினுர். *1968* முதல் அதே கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணி புரிந்து வருகிருர்.

மாணவப் பருவத்திலேயே (*1939*-40) "பாரத மாதா" என்ற கையெழுத்துத் தேசிய முற்போக்குத் திங்கள் இதழ் ஒன்றைத் தோற்றுவித்து அதன் ஆசிரியராகப் பணியாற்றி ஞர். சமய இலக்கியங்களில் ஈடுபாடு மிக்க இவர் சமய மாநாடுகள் பலவற்றில் உரையாற்றியுள்ளார், சென்னை சைவ சித்தாந்த மஹா சமாஜத்தின் செயற்குழு உறுப்பின ராகப் பணியாற்றி வருகிருர். புரசைத் திருநெறிக் கழகம்,

தாம்பரம் திருநெறிமன்றம் இவைகளின் தலைவராக இருந்து, காசி உட்பட பல தலங்களை வழிபட்டு வருகின்றார். இவர் எழுதிய கட்டுரைகள் பல; ஆற்றியவானொலிப் பேச்சுக்களும் பல. சென்னை மத்திய சிறைச்சாலையில் கலாசாரக் குழுவின் உறுப்பினராக இவரை அரசாங்கம் நியமித்துள்ளது சென்னை, அலகாபாத் பல்கலைக் கழகங்களில் தமிழ்ப் பாடத் திட்டக்குழு உறுப்பினராகவும் பணியாற்றி வருகின்றார். 1963-ம் ஆண்டு டிசம்பர் திங்களில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற உலகப் பெருஞ்சமயங்கள் 3-வது கருத்தரங்கில் "**சமயம்**" பற்றிய இவரது கட்டுரை படிக்கப் பெற்றது. 1971-ல் வேலூரிலும், 1972-ல் திருநெல்வேலியிலும் சைவ சித்தாந்த மஹா சமாஜத்தின் மஹா நாட்டில் சைவ இளைஞர் தலைமைப் பேருரை இவரால் நிகழ்த்தப் பட்டது. 1979-லும் 1981-லும் இலங்கை சென்று சொற் பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார்.

1966 ஜனவரி மாதம் முதல் சூரியனார்கோயில் ஆதீன கர்த்தராயிருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மீனாக்ஷிசுந்தர தேசிகரிடம் முறையாக விசேஷ தீக்ஷை பெற்று தினந்தோறும் சிவபூஜை செய்து வரும் நமது க வடிவேலாயுதனார் அவர்களுக்கு 1975-ம் ஆண்டில் காஞ்சீபுரம் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஞானப்பிரகாச சுவாமிகள் "**சித்தாந்த சிகாமணி**" என்ற பட்டம் அளித்துப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள். 'நற்குஞ்சரக் கன்று' என்னும் தலைப்பில் இம்மலருக்குச் சிறந்ததொரு கட்டுரையினை வழங்கியருளிய இவர்கள் நீடூழி வாழ்ந்து நல்லனவெல்லாம் பெற்று எல்லாத் துறைகளிலும் மேம்பட்டு விளங்குமாறு கற்பக விநாயகரின் கழலிணை போற்றிப் பிரார்த்திக்கின்றோம்.

12. சாக்தப் பேருரைச் சக்கரவர்த்தி, புலவர், பருத்தியூர் K. சந்தானராமன், M.A., B.Litt , D P.P.A., D.U.N.I.U.

'அபிராமி அந்தாதியில் சிவபரமான செய்திகள்' பற்றி ஒரு கட்டுரையினை வழங்கியுள்ள இவர் மத்திய அரசு வங்கி

யொன்றில் சென்னையில் பணிபுரிபவர். இவரது துணைவியார் திருமதி ஹேமா அரசுக் கல்லூரியில் துணைப் பேராசிரியையாகப் பணியாற்றி வருகின்றார். இருவரும் இணைந்து சமய இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வருகின்றனர். அபிராமி அந்தாதியும், லலிதா ஸஹஸ்ர நாமமும் இவர்களது 'மாஸ்டர் பீஸ்'. தமிழ் நாட்டில் மட்டுமல்லாமல் பிற மாநிலங்களிலும் இலங்கையிலும் இவர்களது இலக்கியக் குரல்கள் ஒலித்து வருகின்றன. தற்கால உலகுக்கு ஏற்ற முறையில் விஞ்ஞான ரீதியான விளக்கங்கள் தருவது இவர்களது சொற்பொழிவின் சிறப்பு அம்சம். 'விஞ்ஞானமும் மெய்ஞானமும்' என்பது சந்தானராமனின் ஆராய்ச்சி நூல். 'அம்பிகை அனுபூதி' தோத்திரக் கவிதை நூல்; 'கந்தபுராண ராகமாலிகை' இவரது இசைத் தமிழ் நூல். தருமையாதீனத்திலிருந்து வெளிவரும் திங்கள் இதழாகிய 'ஞானசம்பந்த'த்தில் அபிராமி அந்தாதிக்கு ஆராய்ச்சி உரை சென்ற 2 ஆண்டுகளாகத் தொடர்ந்து எழுதி வருகின்றார், 'சித்தாந்தம்', 'தினமணி சுடர்' ஆகியவற்றிலும் இவரது எழுத்து அவ்வப்பொழுது இடம் பெற்று வருகிறது.

திரு. சந்தானராமன்-ஹேமா தம்பதியினர் சமய இலக்கியப் பணியில் மேலும் சிறந்து புகழ்மாலைகள் மலைபோல் குவிந்து நீடூழி வாழ வேண்டுமென அன்னை அபிராமி உடனுறைத் திருக்கடவூர்ப் பெருமானைப் பிரார்த்திக்கின்றோம்.

## 13. வித்துவான் திரு. கே. எம். வேங்கடராமையா, எம் ஏ., பி.ஓ.எல்.

செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் விருந்தோம்பற் சிறப்புடைய தெலுங்கு அந்தணர் குலத்தைச் சேர்ந்த திரு கா.ம. வேங்கடராமையா அவர்கள் சென்னைக்கு அருகில் போரூருக்கு அடுத்த காரம்பாக்கம் என்னும் சிற்றூரில் 4-4-1911-ல் பிறந்தவர். தாய்மொழி தெலுங்காயிருந்

தும் தமிழ்மொழியில் பற்றுமிக்கவராய்த் தமிழ் வித்துவான், M.A.,B.O.L. முதலிய பட்டப் பரீகைஷகளிலும், B.A. பொருளியல் தேர்விலும் வெற்றி பெற்முர். 1937 முதல் 1945 வரை தூய. கொலம்பா உயர்நிலைப் பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றினுர். பின்னர் திருப்பனந்தாள் காசி மடத்தின் ஆதரவில் நடத்தப் பெறும் செந்தமிழ்க் கல்லூரியில் முதல்வராக (Principal) 1945 முதல் 1973 வரை சுமார் 28 ஆண்டுகள் சிறப்புடன் பணியாற்றி ஓய்வு பெற்ற பின்னரும் காசி மடத்தின் தொடர்பினை விடாது திருமடத்து அறக் கட்டளைகள் மானேசராக 1974 டிசம்பர் வரை பணியாற்றினுர். டிசம்பர் 1974 முதல் 1978 ஜூன் வரை சென்னை எழும்பூரில் உள்ள தமிழ் ஸம்ஸ்க்ருதம் மற்றும் இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஆய்வாளராகப் பணிபுரிந்தார். ஜூன் 1978 முதல் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் திருக்குறள் ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டுள்ளார்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து நூல்கள் வெளியீட்டுக்கு உடனிருந்து உதவியுள்ள இவர் தமது சொந்த நூல்களையும் பிரசுரித்துள்ளார் அவை : 1. சோழர் கால அரசியல் தலைவர்கள், 2. இலக்கியக் கேணி, 3. கல்வெட்டுக்களில் தேவார மூவர், 4. The Story of Saiva Saints 5. ஆய்வுப் பேழை, 6. திருக்குறள் அறத்துப்பால் உரைநடை என்பன. அண்ணுமலைப் பல்கலைக்கழகத்து இவரது ஆராய்ச்சி நூல்கள் 1. திருக்குறள் பரிப்பெருமாணுர் உரை (செப்பனிட்டுள்ளார்) 2. பரிப்பெருமான் உரை – ஓர் ஆய்வு 3. திருக்குறளும் நாலாயிரப் பிரபந்தமும், 4. பெரியபுராண வரலாறுகளும் முதுமொழி மேல்வைப்பு நூல்களும் 5. பெரிய புராணமும் திருக்குறளும் (தற்சமயம் எழுதிக் கொண்டுள்ளார்கள்).

இங்ஙனம் தமிழ் இலக்கிய, சமய, கல்வெட்டு ஆராய்ச்சித் துறை போன்ற பல துறைகளிலும் பழுத்த புலமை பாலித்த திரு. கா. ம. வேங்கடராமையா அவர்கள்

நமது வேண்டுகோளையும் ஏற்று மதுரைக் காஞ்சியில் உள்ள சமயச் செய்திகளைச் சுருக்கமாக ஒரு கட்டுரையில் வழங்கியுள்ளார்கள். அவர்கள் பல்லாண்டுகள் வாழ்ந்து, சதாபிஷேகங்கொண்டு, சைவ சமய இலக்கியப் பணிகளில் மேலும் தலைசிறந்து விளங்க அம்பலவாணனின் பொன்னடிகளைத் தியானிக்கின்றோம்.

## 14. தர்மப்ரவசன ரத்னம் மஞ்சக்குடி ராஜகோபால சாஸ்திரிகள்

தஞ்சை மாவட்டம் மஞ்சக்குடி கிராமத்தில் முத்கலர் என்ற மஹரிஷியின் கோத்திரத்தில் பிறந்த பெரியோர்கள் பிரமசரியம் முதல் வேதம் பயின்று, கிருஹஸ்த தர்மத்தை அனுஷ்டித்து முடிவில் பரமஹம்ஸ பரிவ்ராஜக தர்மமான ஸன்யாஸம் பெற்று ஜீவன் முக்தர்களாகத் திகழ்கிறார்கள். அத்தகைய பெரியோர்களின் வம்சத்தில் தோன்றியவரான சிவராம சாஸ்திரிகள் என்ற சிவராம யதீச்வரர்களது குமாரரும் ப்ரம்ம நிஷ்டராகத் திகழ்ந்தவருமான பிரம்மஸ்ரீ கைலாஸநாத சாஸ்திரிகள் என்ற மஹானுக்கு (1918-ம் ஆண்டு) காளயுக்தி வருஷம் ஐப்பசி மாதம் 2-ம் தேதி அஸ்வினி நக்ஷத்திரத்தில் ஸத்புத்ரனாகத் தோன்றியவர் இன்று புகழுடன் விளங்கும் பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி K. ராஜகோபால சாஸ்திரிகள் ஆவர்.

பிரம்ம நிஷ்டரான பிதாமஹரால் மூன்று வயதில் வித்யாரம்பம் செய்யப்பட்டு ஸம்ஸ்க்ருதக் கல்வி பயின்று ஏழாவது வயதில் உபநயனம் செய்யப்பெற்று வேதாரண்யம் என்ற க்ஷேத்ரத்தில் 19 வயது வரை பிரம்மஸ்ரீ முத்து கனபாடிகள் என்ற மஹானிடம் க்ருஷ்ண யஜுர் வேதம் முழுமையும் பயின்றார். 19-வது வயதிலேயே திருமணமும் செய்து கொண்டார். சேங்காலிபுரத்தில் வஸிஷ்ட மஹரிஷியைப் போல் பிரகாசித்த 86 வயதான மஹாத்மா அய்யா தீக்ஷிதர் என்கிற மஹா குருக்களிடம் தர்மசாஸ்திரம், காவ்யங்கள்,

ஸகல வைதிக கர்மகலாபங்கள் ஆகியவைகளை அப்யாஸம் செய்தும் குலக்ரமமான வ்ருத்தியான புராண ப்ரவசனத்தை ஆரம்பம் செய்தும், பிறகு மஹாத்மா பிரம்மஸ்ரீ அப்பாசாமி சாஸ்திரிகளிடம் சாந்தி பாடம், ப்ரஸ்தானத்ரய பாஷ்ய பாடம் பெற்றும், ருக், யஜுர், ஸாமவேத ஸூத்ரங்களில் உள்ளவற்றைப் படித்து வைதிக மார்க்கத்தை ரக்ஷித்தும் 20-வது வயது முதல் தாமே ப்ரவசனம் செய்ய ஆரம்பித்தார். அகில பாரதத்திலும் பலமுறை சுற்றி இதுவரை சுமார் 250 முறை ராமாயணமும் 125 முறை பாகவதமும், 145 முறை ஸ்காந்தமும் 9 முறை மஹாபாரதமும், 10 முறை தேவீ பாகவதமும் 5 முறை சிவபக்த விலாஸமும், 1முறை ஹாலாஸ்ய மாஹாத்ம்யமும் மற்றும் சீதா கல்யாணம், ருக்மணி கல்யாணம், பார்வதி கல்யாணம் போன்ற உபன்யாஸங்களைக் கணக்கில் அடங்காத முறைகளும் செய்துள்ளார். இவரது 21-வது வயதில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் இவரை வேததர்ம பரிபாலன சபையின் ஆதரவில் ஸந்த்யாவந்தனம் போன்ற வைதீக கர்மாக்களின் அவச்யம், அனுஷ்டானம் ஆகியவைபற்றி உபன்யாசம் செய்யும்படிக் கட்டளையிட்டார்கள். ஸ்ரீமத் ஜகத்குருவின் ஆணையைச் சிரமேல் தாங்கி, 18 ஆண்டுகள் இப்பாரத தேசம் முழுவதும் சுற்றி ஆங்காங்கு உபன்யாசம் செய்து வந்தார். இது கண்டு மகிழ்ந்த ஸ்ரீமத் ஜகத்குரு அவர்கள் "**தர்மப்ரவசன ரத்னம்**" என்ற விருதை இவருக்கு அனுக்ரஹம் செய்தருளினார்கள்.

ஸ்ரீ சகடபுரம் பரமஹம்ஸ ஜகத்குரு ஸ்வாமிகள் இவருக்கு "**பண்டிதாவதம்ஸ**" என்ற பட்டத்தை வழங்கியருளினார்கள். சென்னை தியாகராயநகர் சிவ—விஷ்ணு ஆலயத்தில் ஆஸ்திக ரக்ஷாமணி ஸ்ரீமான் V. சின்னஸ்வாமி ஐயர் அவர்களது முயற்சியால் நடைபெற்ற மஹாபாரத ப்ரவசனம் போல் எங்குமே நடந்ததில்லை எனக் கூறலாம். அந்த ப்ரவசனத்தின் முடிவில் இவருக்கு **உத்தம உபன்யாஸச் சக்ரவர்த்தி** என்ற பட்டம் பொதுமக்கள் சார்பாகவும்

ஆலயத்தின் சார்பாகவும் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கனம் P. ராமகிருஷ்ணன் I. C. S. அவர்களால் வழங்கப் பட்டது. மற்றும் பம்பாய், டில்லி, கல்கத்தா, தமிழ்நாட்டில் திருவாரூர் போன்ற இடங்களில் ஆங்காங்குள்ள ஆஸ்திக சமாஜங்கள் இவருக்குப் பல பிருதங்களை வழங்கியுள்ளார் கள். இவைகளைப் பற்றி எழுதினல் அதுவே ஒரு தனி கட்டுரை ஆகிவிடும். ஆதலால் விரிவஞ்சி இத்துடன் நிறுத்திக்கொள்கிறோம்.

பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி சாஸ்திரிகள் என்ற பெயரிலேயே பெரும் புகழ் அடைந்துள்ள இவர் தமது அம்ருத மயமான வாக்கினுல் கேட்போரது ஹ்ருதய வயல்களில் பக்திப் பயிர் செழித்து வளரும்படிச் செய்கிறார்கள். ஹாஸ்யங்கள், அகட விகடங்கள், அரசியல் துணுக்குகள் இவை கலந்தால் தான் சிறந்த உபன்யாஸகராகக் கருதப்படுவார்கள் என்று தவறாக நினைக்கும் இக்காலத்தில், நமது ஸ்ரீ சாஸ்திரிகள் இவை களில் ஒன்றுமே கலக்காமல் பக்தி ரசம் ஒன்றையே மேம் படுத்தி, பல்லாயிரக்கணக்கான மக்களை ஆனந்த வெள்ளத் தில் திளைக்கச் செய்யும் அதி அற்புதமான திறமையை ஈச்வர கிருபையால் பெற்றுள்ளார்.

சென்னை வாசிகளின் பாக்ய வசத்தால் சென்னையில் நிரந்தரமாகக் குடியேறியுள்ள இவரது ஷஷ்ட்யப்த பூர்த்தி வைபவமும் சென்னையிலேயே நடைபெற்றது. அம்ருதவாக் வர்ஷியான பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் நீடூழி வாழ்ந்து மேலும் பல்லாயிரக்கணக்கான மக்களைப் பக்தி மார்க்கத்தில் செலுத்தி ஆஸ்திகப் பணிபுரிந்து ஆயிரம் பிறை கண்டு சதாபிஷேகப் பெருவிழாவும் கொள்ள உலகத்தாய் தந்தையரான பார்வதி—பரமேச்வரர்களைப் பிரார்த்திக் கின்றோம்.

## 15. பாஷ்யபாவக்ஞ பிரம்மஸ்ரீ வரஹூர் கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

மஹாகவி காளிதாஸனின் ஒரு சில ஸ்லோகங்களின் மூலம் அந்த மஹாகவியின் சிவபக்திச் சிறப்பை நமக்கு

எடுத்து விளக்கியிருக்கும் பாஷ்யபாவக்ஞ வரஹூர் கல்யாணசுந்தர சாஸ்திரிகள் வேதாந்த போதகாசிரியர்களில் தலைசிறந்த ஒருவராவர். தஞ்சை மாவட்டம் வரஹூர் கிராமத்தில் பிறந்த நம் சாஸ்திரிகள் தக்க வயதில் வித்யாரம்பம் செய்யப்பட்டு, கும்பகோணம் ராஜா பாடசாலையில் புகழ் பெற்ற பேராசிரியர் மஹாமஹோபாத்யாய யக்ஞசுவாமி சாஸ்திரிகளிடம் ஸம்ஸ்க்ருதம் பயின்றார். பின்னர் சென்னை மயிலாப்பூர் ஸம்ஸ்க்ருத கல்லூரியில் மஹாமஹோபாத்யாய கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகளிடம் பயின்று, 1932ல் ஸாஹித்ய சிரோமணி பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றார். 1933ல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 'பண்டிட்' பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றார். 1934 முதல் 1937 வரை கும்பகோணம் அய்யு அய்யர் பாடசாலையில் 'சாஸ்த்ர ரத்னாகரம்' பிரம்மஸ்ரீ வேப்பத்தூர் வைத்யநாத சாஸ்திரிகளிடம் வேதாந்த நூல்களைப் படித்து, **'வேதாந்த சிரோமணி'** பரீக்ஷையில் மிகுந்த சிறப்புடன் தேர்ச்சி பெற்றார். 1938 வது ஆண்டு சென்னை மயிலாப்பூர் ஸம்ஸ்க்ருத கல்லூரியில் ஆராய்ச்சியாளராகச் சேர்ந்து 'வ்ருத்தி மீமாம்ஸை' என்ற தன்னுடைய ஆராய்ச்சிக் கட்டுரையை வெளியிட்டார். சென்னை அரசினர் 'ஓரியண்டல் மேனஸ்க்ரிப்ட்ஸ் லைப்ரரி' யில் 16 ஆண்டுகள் பண்டிதராகப் பணியாற்றி, பல அரிய சுவடிகளைப் பிரசுரிப்பதில் உதவி செய்தார். தம்முடைய சொந்தப் பிரசுரங்களும் சில செய்தார். 1956ம் ஆண்டு சென்னை விவேகானந்தர் கல்லூரி நிர்வாகத்தின் அழைப்பின் பேரில் அங்கு ஸம்ஸ்க்ருதத் துறையில் விரிவுரையாளராகச் சேர்ந்து, M.A. (ஸம்ஸ்க்ருதம்) மாணவர்களுக்கு ஸம்ஸ்க்ருத இலக்கியம், வேதாந்தம் ஆகியவைகளைப் போதிப்பவரானார். ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் வகுப்புகள் எடுத்தும், பிரவசனங்கள் செய்தும் வரலானார். 1971-ல் இவரது ஷஷ்ட்யப்த பூர்த்தி விழா சென்னையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. சென்னை விவேகானந்தா கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்ற

பின்னரும் இவருடைய சேவையைக் கல்லூரி நிர்வாகக் கமிட்டி விரும்பியதால், U.G.C. பேராசிரியராகச் சில ஆண்டுகள் பணிபுரிந்து, பின்னர் கல்லூரி இவரைக் கௌரவப் பேராசிரியராக நியமித்து இவரது சேவையைத் தொடர்ந்து பெற்று வருகிறார்கள். இத்தகைய சிறப்பு ஒரு சிலருக்கே அமையக் கூடும்.

பிரதி வருஷமும் நாம் வெளியிடும் ஸ்ரீ சங்கர ஜயந்தி மலருக்கு 1966-ம் ஆண்டு முதல் தொடர்ந்து அரிய ஆராய்ச்சிகள் எழுதி நமது பணியினை ஆதரித்து வருகிறார்.

முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக சென்னை நுங்கம்பாக்கம் உபநிஷத் ஆச்ரமத்தில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்களுடைய ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களையும் சாந்தி பாடத்துடன் ஸம்ப்ரதாய முறைப்படி சொல்லி வந்தார். தற்சமயம் தமது வாசஸ்தலமான 61, பசுல்லா சாலை, தி. நகர், சென்னை-17 க்ருஹத்தில் பல மாணவர்களுக்குப் பாஷ்ய பாடம் நடத்தி வருகிறார். வேதாந்த நூல்களை விளக்குவதில் இவருக்குள்ள தனித் திறமையைக் கண்டு மகிழ்ந்த ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ பரமாசார்ய ஸ்வாமிகள் 1963ம் ஆண்டு இவருக்கு 'பாஷ்ய பாவக்ஞ' என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தருளினார்கள். இந்தப் பட்டத்தை ஜகத்குரு அவர்களிடமிருந்து இதுவரை இவர் உள்பட இரண்டே பேர்கள் தான் பெற்றுஉள்ளார்கள் என்றால் இவரது பாஷ்ய பாடங்களில் இவருக்குள்ள திறமையை நாம் உணர்ந்து கொள்ளலாம். இவரது ஸம்ஸ்க்ருத வேதாந்த அறிவுத் திறனை அங்கீகரித்து 1979ம் ஆண்டு இவருக்கு ராஷ்ட்ரபதி ஸம்மானம் (PRESIDENT AWARD) வழங்கப்பட்டது. சென்னையில் இன்றும் அயராது வேதாந்த பாடங்கள் பிரவசனம் செய்து கொண்டிருக்கும் பிரம்மஸ்ரீ சாஸ்திரிகளிடம் பல நூற்றுக்கணக்கானவர்கள் வேதாந்த பாடங்கள் பயின்று வருகிறார்கள். அனைவரும் பெரிய உத்யோகங்களில் உள்ளவர்கள். ஒரு சிலர் இவரிடம் பயின்று Ph. D. போன்ற

பட்டமும் பெற்று பெரும் பதவிகளிலும் உள்ளார்கள். கடல்மடை திறந்த வெள்ளமோ அன்றிக் கங்கையின் பெருக்கோ எனக் கேட்போர் வியக்கும் வண்ணம் சொற் பெருக்காற்றும் வல்லமையுடைய நமது வரஹூர் சாஸ்திரி கள் வறண்ட விஷயம் (Dry Subject) என்று தவருகக் கருதப்படும் வேதாந்தத்தைக் காவிய, நாடகங்கள் போலச் சுவையுடன் போதிப்பதில் நிகரற்று விளங்குகின்ருர். கேட் போர் உள்ளத்தில் எந்த ஒரு விஷயத்திலும் ஐயம் ஏற் படாமல், தெள்ளத் தெளிவாக உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்கிக் காட்டுவதிலும் இவருக்கு இணையானவர் இல்லை என்று துணிந்து கூறலாம். இத்தகைய சிறப்புகள் வாய்ந்த பிரம்மஸ்ரீ சாஸ்திரிகள் பல்லாண்டுகள் ஆரோக்யத் துடன் வாழ்ந்து, அவரது சதாபிஷேகப் பெருவிழாவிலும் நாம் கலந்து கொள்ளும் பேற்றினை அருளுமாறு அம்மை யப்பனை இறைஞ்சுகின்ருேம்.

## 16. ஞானபாஸ்கர பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள்

பிரமபுரி எனப்பெயர் பெற்ற பிணுயூர் என்ற கிராமத் தில் வடமொழி, ஆங்கிலம் இரு மொழிப்பயிற்சியும் உடைய ஸ்ரீ நாகேச்வர சாஸ்திரிகளுக்கு இரண்டாவது குமாரராகத் தோன்றியவர் பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள். இவருடைய மூத்த ஸஹோதரர் ராமநாத சாஸ்திரிகள் நைஷ்டிகப் பிரம்மசாரியாயிருந்து நேரே ஸன்யாச ஆசிரமத்துக்குச் சென்றவர்கள். ஸ்ரீவித்யா தீக்ஷை பெற்றுக் கருணைந்தநாதர் என்ற பெயரோடு விளங்கியவர்.

பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள் சிறு வயதிலேயே குலாசாரப்படி கல்வி பயின்று முறைப்படி அத்யயனம் செய்தார். பிறகு காவ்யங்கள், சாஸ்திரங்கள் ஆகியவற்றையும் பயின்ருர். தமது 28 வது வயதில் மூத்த ஸஹோதரரான ஸ்ரீ கருணைந்த நாதரே இவருக்கு ஸ்ரீ வித்யா குருவாகி தீக்ஷையும் பூர்ணபிஷேகமும் செய்து

வைத்தார். தமது குருவான கருணனந்தநாதருடன் வட தேசம் முழுதும் யாத்திரை செய்திருக்கிறார்.

1949-ஆண்டு முதல் சென்னையிலேயே மேலமாம்பலத்தில் குடும்பத்துடன் வசித்து வருகிறார். ஸ்ரீ காமகோடி ஜகத்குரு பெரியவாளின் அனுக்ரஹத்துடன் தமது குருநாதரான கருணனந்த நாதரின் பெயரால் 'ஸ்ரீ கருணனந்த மண்டலி' என்னும் பெயரால் ஸ்ரீ வித்யா மண்டலியை நிறுவினார். கூடிய வரையில் ஆசார அனுஷ்டானங்களைக் கடைப்பிடிப் பவர் மட்டுமே மண்டலியின் அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப் படுகின்றனர். ஸம்ஸ்க்ருதமும் வேதமும் கற்றுக் கொடுத்தல், புராண உபன்யாஸங்கள் செய்தல், ஸதாசார சம்பந்தமான விஷயங்களைப் பிரசாரம் செய்தல், சத்விஷய நூல்களை வெளியிடுதல் முதலியவை மண்டலியின் குறிக் கோள்கள். ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் இவருக்குப் பல முறை சால்வை போர்த்தி கௌரவித்திருக்கிறார்கள். அயோத்தியிலிருந்து வெளிவரும் 'ஸம்ஸ்க்ருத்' என்னும் பத்திரிகை இவருக்கு 'ஸம்ஸ்க்ருத விசாரத' என்ற பட்டத் தையும், சென்னை அடையாறு ஆரோக்ய ஆச்ரமம் 'ஞான பாஸ்கர' என்ற பட்டத்தையும் மாம்பலம் ஸ்ரீ சங்கர பக்த ஜன சபாவினர் 'சிவோத்கர்ஷவர்ஷக' என்ற பட்டத்தையும் வழங்கி கௌரவித்துள்ளனர். சுமார் 50க்கும் மேற்பட்ட கும்பாபிஷேகங்களைச் சிறப்பாக நடத்தி வைத்துள்ளார்கள்.

நமது மற்றொரு வெளியீடான ஸ்ரீ சங்கர ஜயந்தி மலரில் 1964-ம் ஆண்டு முதல் பல ஸ்தோத்திரங்களுக்குத் தமிழ் உரையும், புராணம், வேதாந்தம், ஜோதிஷம் பற்றிய கட்டுரைகளும் எழுதி வருகிறார்கள். ராமாயண ஸாரம், சிவ மானஸ பூஜா, மந்த்ரமாத்ருகா புஷ்பமாலாஸ்துதி இவை களுக்கு உரை எழுதியும், ஸ்ரீ கருணனந்தநாதர், ஸ்ரீ சங்கர விஜயம் போன்ற நூல்களையும் இவர்கள் எழுதி வெளி யிட்டுள்ளார்கள்.

1979 ம் ஆண்டு கருணனந்த மண்டலியின் வெள்ளி விழா ஓராண்டு முழுமையும் கொண்டாடப் பட்டது. வெள்ளி விழாவின் முக்கிய நிகழ்ச்சிகள் சதசண்டீ ஹோமம், ஸஹஸ்ர போஜனம், வெள்ளி விழாமலர் வெளியீடு முதலியனவாகும். 1981 வது ஆண்டு அதிருத்ர மஹாயக்ஞம் சண்டீ ஹோமமும் சிறப்பாக நடத்தினர். பிரதிவருஷமும் நவராத்ரி பூஜையை முறைப்படி செய்து வருகிறார். 1974 ம் ஆண்டு ஷஷ்ட்யப்த பூர்த்தி கொண்டாடிய பிரம்மஸ்ரீ நாராயண சாஸ்திரிகள் சதாபிஷேகப் பெருவிழாவும் கொண்டு சிறந்து விளங்க அருளுமாறு வேதப்ரதிபாத்யனை பரமேச்வரனைப் பிரார்த்திக்கிறோம்.

## 16, ஸாஹித்ய சிரோமணி S. V. பரமேச்வரன்

'அஷ்டாங்க நமஸ்காரம்' என்னும் தலைப்பில் அரியதொரு கட்டுரையை வழங்கியுள்ள ஸ்ரீமான் S. V. பரமேச்வரன் தமது சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்தவர். சென்னை ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் படித்து ஸாஹித்ய சிரோமணி பட்டம் பெற்றவர். யஜுர் வேதம் முழுமையும் அத்தியயனம் செய்தவர். ஸம்ஸ்க்ருதம், ஹிந்தி, ஆங்கிலம், தமிழ், மலையாளம் ஆகிய ஐந்து மொழிகளிலும் வல்லவர், ஓலைச் சுவடிகளைப் படிப்பதில் மிக்க தேர்ச்சி பெற்றவர். யோகாப்பியாசம் செய்வதிலும் ஈடுபட்டவர். நூற்றுக்கணக்கான சிவாகமச் சுவடிகளில் பழக்கம் உள்ளவர். தற்சமயம் பாண்டிச்சேரியில் உள்ள French Institute of Indology என்ற ஸ்தாபனத்திற்காகச் சென்னையில் தங்கி, சுவடிகளைப் பிரதி செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளார்கள். ஜோதிட சாஸ்திரத்திலும் இவர் நிபுணர்.

46 வயதாகியும் இன்னும் பிரம்மசாரியாகவே இருக்கும் ஸ்ரீ பரமேச்வரன் சமய இலக்கியப் பணிகளில் மேலும் சிறந்து புகழுடன் விளங்குமாறு அம்மையப்பனை இறைஞ்சுகின்றோம்.

## முடிவுரை

மேலே காட்டியுள்ள கட்டுரையாசிரியர்கள் அனைவரும் சிவபெருமானிடம் பக்தி பூண்டவர்கள். சிவபெருமானின் முழுமுதற்றன்மையில் நம்பிக்கையுடையவர்கள். எனவே சிவபக்தர்களான இவர்களைப் போற்றி செய்து புகழ்வதால் சிவபெருமான் தம்மைப் புகழ்ந்ததாகவே கொண்டு ப்ரீதி அடைகின்றார். சிவபெருமானின் திருவருளுக்குப் பாத்திர ராகிச் சிறந்து விளங்குவோம்.

[பி.கு: பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு அவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை எழுதிய திரு. பூ. சாம்பசிவன் M A.B.T. அவர்களைப் பற்றிய குறிப்புகளை அறிய வாய்ப் பில்லாது போய்விட்டது. கூடுமேல், அடுத்த ஆண்டு அவரது கட்டுரையையும், வாழ்க்கைக் குறிப்புக்களையும் வெளியிடு வோம்.

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தர் அருளியது

---

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை



**யத்யத் கர்ம கரோமி**
**தத்ததகிலம்**
**சம்போ தவாராதனம்**

Printed at : Elango Achukoodam, 166, R H. Road, Ms-4.